பக்கம்.

ஓம் தத் சத்

பரப்பிரஹ்மணேநமஃ

# ஞான சூரியோதயம்

என்னும்

# வேதாந்த இரகசியார்த்த வினுவிடை.

---

## விவேகாநந்தன் ஏகாந்த சிந்தனை.

மக்கட் பிறப்பின் அருமையும் பயனும்! ஆ! என்ன நேர்த்தியான பிரசங்கம்! ஒவ்வொரு வார்த்தையும் பசுமரத் தாணிபோல் மனத்தில் ஊடுருவிப் பாய்கின்றது. ஆம். அவர் கூறியது உண்மையினும் உண்மையே! எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதான் சிறந்தது; ஐயமில்லை. விலங்கு பறவை முதலானவை மனிதனினும் தாழ்ந்தவையே. கடவுள், புண்ணியம், பாவம் முதலியவற்றைப் பற்றி யாராய்ந்து, விதி விலக்குகளை யறிந்து, விதித்தவற்றைச் செய்து விலக்கியவற்றை விடுத்து நித்தியாநந்தமயமாய் விளங்கும் முக்தியை யடைவதற்குரியவன் மனிதனே. இவ்வுண்மையை யுணராது விலங்கைப்போல உண்பதும் உடுப்பதும் உறங்குவதுமாகவே ஒருவன் தன் வாணாளைக் கழிப்பானாயின், அவன் பிறவி பயனற்றதேயாம். அடைதற்கரிய அமுதத்தை யடைந்தும் அதனை யருந்திப் பயனடையாமல் கமரில் கொட்டுவதற் கொப்பாகவன்றோ முடியு மச்செய்கை! ஆண்டவனை—மோட்சத்தை—பிறவா நெறியை—அடைவதே மனிதப்பிறப்பின் பயன்.

இதுகாறும் இதுபற்றிச் சிறிதும் சிந்தித்தே னில்லையே. அப்பெரியாரின் அரிய பிரசங்கத்தைக் கேட்டதனாலன்றோ இந்த உணர்ச்சி உண்டாயிற்று! ஐயோ! மனிதனாகப் பிறந்த யான் மிருகத்தைப்போலக் காலங் கழித்தேனே! நான் எப்படி மனிதனென்னும் பெயருக் குரியவனாவேன்? என்னே என் அறியாமை! இப்பொழுதேனும் உணர்ந் தேனே! அதுவன்றோ பெரிது! வீணரோடும் விடரோடும் கூடி வீணிற் காலங்கழியாமல் சற்சனருடன் சேர்ந்ததனால் இவ்விவேக முண்டாயிற்று. இனியேனும் பிறவிப்பயனை எய்த முயலல்வேண்டும். இதற் குபாயம் யாது?

என்று இங்ஙனம் விவேகாநந்தன் பலவிதமாகச் சிந்தித் துக் கொண்டே கடற்கரையை நோக்கிச் சென்றுகொண் டிருந்தான். அவன் கையில் சிறுநூலொன் றிருந்தது. அவன் மனித சஞ்சாரமில்லாத ஓர் தனியிடத்தி லமர்ந்து கடலைக் கண்ணுற்றவண்ண மிருந்தான். ஒன்றன்பின் னொன்றாகப் பேரிரைச்சலுடன் தோன்றி எழுவதும் அழி வதுமா யிருக்கும் அலைகள் அவன் உள்ளத்தில் ஓர் உணர்ச் சியை யுண்டுபண்ணின. அதனால், அவன் முகம் மாறுத லடைந்தது. பெருமூச் செறிந்தான். ஆ ஆ! இவ்வலைகள் இவ்வாறு வருவதும் போவதுமா யிருப்பது மாந்தர் 'உரு மாறிப் பலபிறப்பும் பிறந்தும் செத்தும் ஊசலாடுவதை' யன்றோ ஒத்திருக்கின்றது! எத்தனை முறை பிறந்தேனோ? எத்தனை முறை யிறந்தேனோ?

"எத்தனை பிறப்போ வெத்தனை யிறப்போ
வெளியனேற் கிதுவரை யமைத்த
தத்தனை யெல்லா மறிந்தநீ யறிவை
யறிவிலி யறிகிலே னந்தோ
சித்தமும் வாக்குந் தேகமு நினவே
சென்மமு மினியெனு லாற்று

வைத்திடிங் கென்னை நின்னடிக் குடியா
மறைமுடி விருந்தவான் பொருளே."

என்று ஓர் பெரியார் பிறவித் துன்பத்தைச் சகிக்கலாற்ருது பாடிப் புலம்பிய பாடலை என்பாட புத்தகத்தில் வாசித்திருக்கிறேனே என்றுன்னினன். அவன் கண்களினின்று நீர் பெருகியது. சிறிது நேரம் மௌனமாயிருந்தான். கண்ணீரைத் துடைத்துக்கொண்டு கையிலிருந்த புஸ்தகத்தைத் திறந்தான். அது பட்டினத்தார் பாடல். அதிலிருந்த கீழ்க்கண்ட செய்யுள் அவன் கண்ணிற்குப் புலனயிற்று.

"இப்பிறப்பை நம்பி யிருப்பையோ நெஞ்சமே
வைப்பிருக்க வாயில் மனையிருக்கச்—சொப்பனம்போல்
விக்கிப்பற் கிட்டக்கண் மெத்தப்பஞ் சிட்டப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு."

இதைப் படித்ததும் துக்க மதிகரித்தது. புஸ்தகத்தை மூடிவிட்டு ஆகாயத்தைப் பார்த்தவண்ணம் ஆழ்ந்த சிந்தனையிலிருந்தான்.

## ஆத்மாநந்தன் வருகை.

இயல்பாகவே ஈசுவரபக்தி சீவகாருண்யம் அடக்கம் பொறுமை முதலிய சற்குணங்களும் கல்வி கேள்விகளும் உடையவனகிய அவன் அவ்வாறிருக்கையில் அவனுக்குப் பின்புறத்தி லிருந்து இருகரங்கள் மெல்லென வந்து அவன் கண்களை மூடின. விவேகாநந்தன் திடுக்கிட்டுத் தன் கைகளால் தடவிப் பார்த்துத் தன் ஆப்த நண்பனகிய ஆத்மாநந்தனே கண்களை மூடினவனென் றறிந்து, "ஆத்மாநந்தா! தெரியும் தெரியும்; எடு கையை" என்று கையை யிழுக்க, ஆத்மாநந்தன் எதிரில் நின்றுன்.

## நண்பர் சம்பாஷணை.

ஆத்மாநந்தன் விவேகாநந்தன் தோளின்மீது தன் கையை யூன்றியபடி அவனருகி லமர்ந்து 'என்ன அவசரம்?

விவேகாநந்தா! நான் வருவதற்குள் வந்துவிட வேண்டுமா? வீட்டிற்குப் போய்த் தேடிவிட்டல்லவோ வந்தேன்? நேற்று மாலை வேதாந்த சங்கத்திற்குச் சென்று பிரசங்கம் கேட்டு விட்டுத் திரும்பும்போது நெடுநேரமாயினமையின் யாதும் பேசாது வீட்டிற்குச் சென்று விட்டோம். பிரசங்கம் எப் படி யிருந்தது? அப் பிரசங்கத்தால் நீ அறிந்துகொண்ட தென்ன? சொல்; பார்ப்போம்' எனக் கேட்டுக்கொண்டே அவன் முகத்தை நோக்கினான். அவன் முகம் வாடி யிருந்த தைக் கண்டு திடுக்கிட்டு 'விவேகாநந்தா! என்ன உன் முகம் இவ்வாறு விகார மடைந்திருக்கின்றது? காரணம் என்ன? உண்மையை ஒளியாமல் சொல்' என்றான்.

விவேகா:—நண்பா! என் விசனத்திற்குக் காரணம் பின்பு கூறுகிறேன். இதோ! இவ்வலைகளைக் கவனி. அவை தோன்றுவது மழிவதுமாயிருப்பது எதனைக் குறிப்பிடு கின்றது? ஜனன மரணங்களை யன்றோ குறிப்பிடு கின்றது! அவற்றின் இறைச்சல் எதனைக் குறிப்பிடு கின்றது? 'ஐயோ! ஜனன மரணக்கடலில் இவ்வாறு எவ்வளவு காலம் தவிப்போம்' என்று இறைவனை நோக்கி முறையிடுவதை யன்றோ குறிப்பிடுகின்றது? ஆத்மாநந்தா! இவை இங்ஙனம் குறிப்பிட்டும் அவற் றையறியும் அறிவு நமக்கில்லையே! நண்பா! உன்னை யும் என்னோடு சேர்த்து 'நமக்கு' என்றுகூறிவிட்டேன். மன்னிக்கவேண்டும். நீ மகா உத்தமன்; புருஷ சிரேஷ்டன் என்பது எனக்குத் தெரியும். நீ எப்பொழு தும் ஓர் மகானை யடுத்து உபதேசம் பெற்று, வேதாந்த விசாரணை செய்துகொண்டும் வேதாந்த நூல்களை வாசித்துக்கொண்டு மிருக்கின்றனை என்பதும் தெரியும். இத்தகைய உத்தமனாகிய உன்னை மித்திரனாகப் பெற் றும் நான்வறிதே என் வாணாளைப்போக்கினேன். இருக்

கட்டும். பிறவியைக் கடலுக் கொப்பிட்டுத் தாயுமான வர் பாடியுள்ள ஓர் பாடலை நீ அடிக்கடி பாடக் கேட் டிருக்கிறேன். தயவுசெய்து அதனை இப்பொழுது பாடு கேட்டோம்.

விவேகாநந்தன் வார்த்தைகளைக் கேட்ட ஆத்மாநந்தன் ஆச்சரிய சித்தனாய் யாதொன்றும் பேசாமல் அவன் கேட்ட படி இனிய குரலோடு பாடத்தொடங்கினான்.

"இப்பிறவி யென்னுமோ ரிருட்கடலின் மூழ்கிநா
னென்னுமொரு மகரவாய்ப்பட்
டிருவினை யெனுந்திரையி னெற்றுண்டு புற்புத
மெனக்கொங்கை வரிசைகாட்டுந்
துகிழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல்வந்து வந்தடிப்பச்
சோராத வாசையாங் கானுறு வானதி
சுரந்ததென மேலுமார்ப்பக்
கப்பரிசு காரர்போ லறிவான வங்கமுங்
கைவிட்டு மதிமயங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவி காட்டுமெளியேன்
செப்பரிய முத்தியாங் கரைசேர வுங்கருணை
செய்வையோ சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோம யானந்தமே."

இப்பாட்டைக் கேட்டதும் விவேகாநந்தன் பரவசமுற்று கண்ணீர் பெருக, ஆத்மாநந்தன் தோளின் மீது தலையைச் சாய்த்து அவன்கழுத்தைக் கட்டிக்கொண்டு தேம்பித்தேம்பி அழவாரம்பித்தான்.

**ஆத்மா:**—(அவனை யணைத்து) நண்பா! விவேகா! என்ன இது? ஏன் இப்படி சிறு குழந்தைபோ லழுகின்றாய்?

காரணமொன்றும் விளங்கவில்லையே ! ஒன்றும் சொல்லாமல் இப்படி அழுதால் என்ன செய்வது ! விஷயத்தைச் சொன்னால் ஏதேனும் தகுந்த பரிகாரம் தேடலாம். சே. வைத்தியக்காரா ! இதோ, இப்படிப்பார். (என்று அவன் கண்ணீரைத் துடைத்தான்.)

விவேகாநந்தன் சோகம்.

விவேகா:—(சிறிது தேறி) மித்திரா ! சுவாமிகள் பாடிய பாடலின் அருமையே அருமை! 'இப்பிறவியாகிய கடலில் மூழ்கி, அகங்காரமாகிய முதலையின் வாயில் அகப்பட்டு, இரு வினைகளாகிய அலைகளால் அலைவுண்டு, மாதர்மேற் கொள்ளும் காமமாகிய சுழற்காற்று அடிக்க, ஆசையாகிய காறு ஆகாயக்கைபோல் மேலும்மேலும் பெருகிமோத, கரையேற்றக் கூடியதாகிய ஞானமாகிய மரக்கலத்தையும் கைவிட்டு, மதி மயங்கி, கப்பற்கொள்ளைக்காரராகிய யமதூதர் வருவரே என்று பயந்து கண்ணீர்விட்டுக் கதறும் எளியேனை மோட்சமாகிய கரையிற் சேர்க்கமாட்டாயா ?' என்று கடவுளை நோக்கிக் கருணைபுரியுமாறு வேண்டுகிறார் சுவாமிகள். அந்தோ ! எவ்வளவு கஷ்டம் ! எவ்வளவு கஷ்டம் !! ஞானச் செல்வராகிய சுவாமிகளே இவ்வாறு முறையிட்டிருந்தால் என் போன்ற மூடரின் கதி யாதாம் ? பெரியாரனைவரும் இவ்வாறே புலம்பியிருக்கின்றனர்.

"மண்ணுந் தணலாற வானும் புகையாற
எண்ணரிய தாய்மாரிளைப்பாறப்—பண்ணுமயன்
கையாற வுங்காலன் காலாறவும் புரியாய்
ஐயா திருவையாறு"

என்று பட்டினத்தடிகளும் இப்படியே கூக்குரலிட்டழுகின்றார்.

நானோ மலத்திற்கிடந்து புரளும் பன்றி அதனையே சுகமாகக் கருதி யிருத்தல்போல, என்னினும் சுகமுடையோ ரொருவரு மிலரென்று எண்ணியிருக்கின்றேனே. இது எவ்வளவு பேதைமை! தவிர, கல்வியிலும் அறிவிலும் நானே சிறந்தவனென்றும் எண்ணியிருக்கின்றேனே, இதுவல்லவோ ஆச்சரியம்! என் போன்ற முழுமூட சிகாமணியுமுண்டோ?

"என்று மழியுமிக் காயம்—இத்தை
எதுக்கு மெய்யென் றிருந்தீ ருல்கீர்.
ஒன்று மறியாத நீரோ—எமன்
ஓலைவந் தாற்சொல்ல உத்தர முண்டோ."

என்றவாறு, ஒன்று மறியாத யான் எமன் ஓலை வருங்காலத்தில் என்ன பதில் கூறுவேன்? அக்காலத்தில் என் கல்வி பயன் படுமா? செல்வம் பயன் படுமா? என் உற்றார் பெற்றார் உதவுவார்களா?

"ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளும்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி ஏகம்பனே"

ஒன்றும் உதவாது; ஒருவரும் உதவார். போனதுபோகட்டும். இப்பொழுதேனும் இவ்விவேகம் உதித்ததே. நான் பாக்கியசாலியே. இனி ஓரிமைப்போதையும் வீணாக்காமல் பிறப்பிறப்பாகிய பெருந் துன்ப சாகரத்தி னின்றும் நீங்கி யுய்வதற்கான உபாயத்தைத் தேடல்வேண்டும். 'நாளை நாளை என்போமாயின், நாளையென்பது நமக்குரியதாமோ? நமனுக்குரியதாமோ?' யாவரறிவார்? 'நேற்றிருந்தார் இன்று வெந்து நீறானார்' என்பதே இவ்வுலக வாழ்க்கையின் பெருமையா யிருக்கிறது. ஆதலால் இச்சரீரம் உள்ள பொழுதே இதனா லடைதற்பாலதாகிய பயனை அடையாவிடின் நாயி

னுங் கடைப்பட்டவனுவேன், என் றிவ்வாறு ஆவேசங் கொண்டவன்போல் மெய்ம்மறந்து பேசினுன். அங்ஙனம் பேசும் அவனைப் பார்த்து

ஆத்மா:—விவேகா! ஏது நீ இப்பொழுது பட்டினத்தார் போலாய்விடுவாய்போ லிருக்கின்றதே! சரி சரி; எழுந் திரு; வீட்டிற்குப் போகலாம் வா; நேரமாயிற்று.

விவேகா:—(அப்பொழுதுதான் பிரக்ஞை யுற்றவன்போலத் திடுக்கிட்டு) மித்திரா! நீ என்னருகேயிருப்பதை மறந்து விட்டேன். ஏதேதோ பேசினேன்; மன்னித்தல் வேண்டும். வீட்டிற்குப்போவது பின்னுலாகட்டும். நீ எனக்கொரு வாக்களித்தல் வேண்டும்.

ஆத்மா:—என்ன வாக்களித்தல் வேண்டும்.

விவேகா:—என்னைக் காப்பாற்றுவதாக வாக்குக்கொடு.

ஆத்மா:—சே, பைத்தியக்காரா! என்ன உனக்குக் கேடு? என்ன காப்பாற்றுவ துன்னை? எழுந்திரு எழுந்திரு; சூரியாஸ்தமன காலம் நெருங்கிவிட்டது; இருட்டிப் போகும்.

விவேகா:—நண்பா! நான் இவ்வாறு பேசுவதால் மனைவி மக்கள் வீடு வாயில்களைத் துறந்து பரதேசியாய்ப் போய்விடுவே னென்று பயங் கொள்ளுகின்றனையோ! பரதேசிக்கோலத்தால் பரலோகங்கிடைத்துவிடாதென் பதையானறிவேன்.வெளியில் எங்கு சென்றால் மோட் சம்கிட்டும்? கல்வி செல்வம் உற்றார் முதலானவர்களால் யாதும் பயனில்லை; இவர்களையே நம்பிக் காலங்கழித்த லாகாதெனக் கூறினேனே யன்றி வேறில்லை. ஆத்மா நந்தா! நீயே என் ஆத்ம நண்பன். உண்மையாகக் கூறுகிறேன். நீயே எனக்குத் தஞ்சம். உன்னை அடைக் கலமாக அடைந்தேன். நேசன் சுகத்தைக் கோருவ தன்றோ உத்தம நண்ப னிலக்கணம்? பிறவித் துன்

பத்தினின்றும் நீங்குவதினும் வேறு சுகம் எது? ஆத்மாநந்தா! என்னைக் காப்பாற்றுவையா? கைவிடுவையா? (என்று அவனிரு கரங்களையும் பற்றிக்கொண்டு தீனமான குரலுடன் கேட்டான்.)

ஆத்மா:—விவேகா! நீ என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?

விவேகா:—நான் ஜனன மரணவடிவ சம்சார சாகரத்தினின்றும் கரையேறும் வழி யாது? அதனை எனக்குக் காட்டிக் கடைத்தேறச் செய்தல்வேண்டும். இதுவே நீ செய்யத்தகுந்த பேருபகாரமாகும்.

ஆத்மா:—(அவனது பரிதாபத்தையும் பரிபக்குவத்தையும் பார்த்து) அப்பா! விவேகாநந்தா! உனக்குண்டான இவ்வெண்ணம் மிகச் சிறந்ததே. இஃதுண்டாவது வெகு துர்லபம். நூறுகோடி பேர்களில் உண்மையாக இவ்வாறு எண்ணுவோர் ஒருவர் இருவர் இருப்பரோ இாரோ அறியேன்.. ஆனால், மக்கள் யாக்கையுடையார்க் கிதுவே உறுதிப்பயன் என்றறிவாயாக.

"மக்க ளாக்கையிற் பிறத்தலே யரிது மற்றதினுந்
துக்க கூன்குரு டூமையைத் துறத்தலுமரிது
நற்கு லத்திடை வருதலு மரிது ஞானத்தால்
முக்க ணீசனுக்காட்படல் முற்றிலு மரிதே."

(தேவிகாலோத்தரம்)

என்றனர் பெரியார்.

இவ்வுணர்ச்சி உனக்குண்டானது பற்றி மெத்த சந்தோஷிக்கிறேன். நான் அதனைக் கெடுக்கலாகாது. நானாகவே வற்புறுத்திக் கூறவேண்டியதை நீயே கேட்கும்போது மறுக்கலாமா?

விவேகா! நீ கூறியவை யாவும் உண்மையே. உலகம் துன்பவடிவாம். 'தோன்றி நின்றழியப்படுங் கொடும் பிறப்

பில் துன்பமேயன்றி எட்டுணையும் ஊன்றி நெஞ்சகத் தேர்ந்திடிற் பிறிதில்லை' என்பது ஆன்றோர் அநுபவ மொழியாம். பேதையரே சுகமென மயங்குவர். அநித்திய வஸ்துக்களா லுண்டாம் இன்பம் நிலை பேறுடையதாமோ?

"தேடிய பொருளு மாயும் திகழ்ந்திடுங் கல்வி மாயும்
நாடிய வீர மாயும் நலந்திகழ் குண மு மாயும்
கூடிய சுற்ற மாயும் கொண்டாடு மனைத்து மாயும்
நீடிய ஞால மெல்லாம் நிலையாமை மயமென் றோராய்."

என்றபடி, யாவும் நிலையில்லாதவையன்றோ? அன்றி, எவ்வகையில் சுகமிருக்கின்றது? தாயின் கருப்பத்திலிருக்குங் காலத்துச் சுகமுண்டா? பூப்பிரவேசமாய்ப் பிறக்குங்காலத்துச் சுகமுண்டா? மலமூத்திரங்களிலுழலும் குழவிப்பருவத்துச் சுகமுண்டா? அறியாமையை யுடைய பால்யத்தில் சுகமுண்டா? பாடசாலையில் வாசிக்குங் காலத்துச் சுகமுண்டா? தொழில்செய்து திரவியந் தேடுங்காலத்துச் சுகமுண்டா? மனைவி மக்களால் சுகமுண்டா? விருத்தாப்பியத்தில் சுகமுண்டா? எதில் சுகமிருக்கின்றது? இவ்வாறு ஆலோசிக்குமிடத்து எல்லாம் துக்கமயமாகவே காணப்படுகின்றன. நித்தியப்பொருளாலுண்டாகும் சுகமே நித்தியசுகமாகும். அவ்வாறு நித்தியமாயுள்ளது எது? அதுதான் கடவுள். அக்கடவுளால் உண்டாகும் சுகமே நித்திய சுகமாகும். அதுவே பேரின்பமாகும். ஆகவே, அதனை யடையவே ஒவ்வொருவரும் முயற்சி செய்யவேண்டியது அத்தியாவசியமாம். நிற்க, நண்பா! இன்னொரு விஷயம் கேட்டனையா! சென்ற வாரத்தில் நானும் நமது சின்மயாநந்த சுவாமிகளும் இங்கு வந்திருந்தோம். அப்போது சுவாமிகள் என்னை நோக்கி 'அப்பா! இக்கடலையும் இதில் தோன்றும் அலை திவலை (நீர்த்துளி) நுரை என்னு மிவற்றையும் நன்கு கவனி. இதினின்று நாம் அறியவேண்டிய விஷய மொன்

றுண்டு. அஃதியாதெனின்; கடலிற் றோன்றியெழும் அலைகளும் நுரைகளும் கடல்நீரைக் காட்டிலும் அன்னியமாகாமலிருத்தல்போல, பரமேசுவரனிடத்துத் தோன்றும் இவ்வுலகும் இதிற் காணப்படும் சராசரங்களனைத்தும் பரமேசுவரனுக்கு அன்னியமாகாமலிருக்கின்றன. அலை முதலியவை கடலினின்றுந் தோன்றி அதனிடத்திலேயே ஒடுங்குவது போல, பரமேசுவரனிடத்தே தோன்றி அவரிடத்திலேயே ஒடுங்குகின்றன' எனக் கூறினார். சில பெரியார் வாக்கையும் இதற்கு உதாரணமாகக் காட்டினர். அவற்றைக் கூறுகிறேன், கேள். முழுதும் ஞாபகமில்லை. தெரிந்தவரையில் கூறுகிறேன்.

"அலைதிவலை நுரைகடலி னுதித்தொடுங்கு மாபோல்
அகிலாண்ட முதித்தொடுங்கு மதின்மூலப் பொருளே."

"நுரையுந் திரையும் நொப்புறு கொட்பும்
வரையில் சீகர வாரியுங் குரைகடற்
பெருத்துஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி
எண்ணில வாகி யிருங்கட லடங்கும்
தன்மை போலச் சராசர மனைத்தும்
நின்னிடைத் தோன்றி நின்னிடை யடங்குநீ
ஒன்றினுந் தோன்றாய் ஒன்றினு மடங்காய்."

என்பனவே. நாம் 'எல்லாம் துக்கம், துன்பம்' என்று அழுகின்றோம். சுவாமிகள் இங்ஙனம் கூறினார். இதற்கென்செய்வது? பெரியார் எல்லாவற்றையும் ஈசுவர சொரூபமாகக் காண்கின்றனர் போலும்?

விவேகா:—இவ்விஷயம் எனக்கு வியப்பை யுண்டாக்குகின்றது. அலை முதலியவற்றின் தோற்ற வொடுக்கங்களுக்குக் கடல் ஆதிகாரண மாதல்போல, உலகின் தோற்ற வொடுக்கங்களுக்கு ஈசுவரனை ஆதிகாரணமாகக் கூறிய தொக்கும். ஆயின், ஆழியிலெழும் அலை முதலானவை

ஆழியாகவே யிருத்தல்போல, சராசர வடிவப் பிரபஞ்சம் அவ்வுருக் கன்னியமாகவில்லை யென்பதுதான் விளங்கவில்லை. ஆத்மாநந்தா! இவ்விஷயங்களை யெல்லாம் கேட்கக் கேட்க என்மனம் மேன்மேலும் அறிய வேண்டுமென்று அவாவுகின்றது. ஆகையால், 'உன்னைக் காப்பாற்றுகிறே' னென்று எனக்கு நீ வாக்குக் கொடு.

ஆத்மா:—யானோ அதற்குத் தக்கவன்? வழியறிந்தோ ரன்றோ வழிகாட்டற் குரியராவர். குருடன் வழிகாட்டியாவதெங்ஙனம்? ஒன்று மறியாதவனாகிய என்னிடம் வந்து 'என்னைக்காப்பாற்று; என்னைக் காப்பாற்று' என்றால், யான் என்ன செய்வேன்? ஆயினும், என் குருநாதன் கூறியவற்றில் ஞாபகமுள்ளவற்றை மட்டும் கூறுகிறேன், கேள்.

## புருஷார்த்தம்.

"தருமம் பொருள்காமம் வீடெனு நான்கும்
உருவத்தா லாய பயன்."

என்று, ஞானத்தாயாகிய ஔவைப் பிராட்டி கூறியவாறு, மக்களாகிய நாம் அடையத்தக்க பொருள்கள் (1) அறம் (தருமம்), (2) பொருள் (அர்த்தம்), (3) இன்பம் (காமம்), (4)வீடு (மோட்சம்) என்பனவாம். இவைபுருஷார்த்தமெனப் படும்; புருஷரால் விரும்பப்படுவனவாகலின். இந்நான்கினுள் மோட்சம் ஒன்றே முக்கிய புருஷார்த்தமாம். மற்றையவை அமுக்கிய (கௌண) மாம். ஆகவே, ஒவ்வொருவரும் முக்கிய புருஷார்த்தமாகிய மோட்சத்தைப் பெறவே முயல வேண்டும். (மோட்சம் அபவர்க்கம், சிரேயஸ், சிறப்பு எனவும், மற்றவை திரிவர்க்கம், பிரேயஸ் எனவும் கூறப்படும்,)

விவேகா :— புருஷரால் விரும்பப்படுதலின் புருஷார்த்தமெனக் கூறியதின் பொருள் விளங்கவில்லை.

ஆத்மா:—சரி சரி. நீ வேறுவிதமாய் எண்ணி விட்டனைபோ லும்! அதாவது புருஷரால் விரும்பப்படுவதால் ஸ்திரீ களால் விரும்பப்படுவதில்லையோ என்று சந்தேகிக்கி ருயா? அப்படியல்ல. 'புரி' என்பது சரீரம். சரீரத்தில் வசிப்போர் புருஷராவார்.

விவேகா:—மோட்சம் முக்கிய புருஷார்த்த மென்பதற்குக் காரணம் என்ன?

ஆத்மா:—சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப்பிராப்தி மோட் சத்தின்சொரூபமாம், 'துக்கம் வேண்டும், ஆனந்தம் வேண்டாம்' எனக் கூறுவோர் ஒருவருமிலர். அறிந் தோ, அறியாமலோ ஒவ்வொருவரும் துக்கத்தின் நீக்கத்திற்கும் ஆனந்தத்தின் அடைவுக்குமே அரும் பாடு படுகின்றனர். ஆகவே, ஒவ்வொருவருக்கும் மோட்சமடைதல் வேண்டும் என்னும் இச்சையுண்டு; அதனுல் அது முக்கியமாம்.

விவேகா:—அந்த மோட்சம் எதனுல் அடையப்படும்?

ஆத்மா:—தன்னைப் பிரஹ்ம மென்றறியும் தத்துவ ஞானத் தாலுண்டாம்.

விவேகா:—தத்துவ ஞானத்தாலன்றி வேறென்றாலும் அடையப்படாதோ?

ஆத்மா:—அடையப்படாது.

விவேகா:—கர்மம் பக்தி என்னும் இரண்டனு ளொன்றல் அடையலாகாதோ?

ஆத்மா:—ஓர் வஸ்துவி னடைவிற்குச் சாதன மவசியம். 'சாதனமின்றி யொன்றைச் சாதிப்பாருலகிலில்லை.' அச் சாதனம் பரம்பரா சாதனம் நேர்சாதனம் என இரு வகையாம். ஒருவன் பசியைப் போக்கிக்கொள்ள விரும்பு கிறான். உணவுண்டலால் பசி நீங்கும். ஆகவே, உண வுண்டல் நேர்சாதனமாம். அவ்வுணவு எவ்வாறுகிடைக்

கும்? பொருள் சம்பாதித்தல்வேண்டும், அப்பொருளால் அரிசி பருப்பு விறகு முதலிய சாமக்கிரியைகள் வாங்க வேண்டும்; பின்னர் சமைக்கவேண்டும். பணம் அரிசி முதலியவற்றைத் தேடலும் சமைத்தலும் பரம்பராசாதனமாம். இவ்விரண்டில் பசிநீக்கத்திற்கு நேர் (சாக்ஷாத்) சாதனமாயிருப்பது உணவுண்டலே. அது போல, மோட்சத்தின் அடைவிற்குத் தத்துவஞானம் நேர் சாதனமாயிருப்பது பற்றி அவ்வாறு கூறப்படுகின்றது. இனி, இது விஷயமாகப் பெரியோர் பேசியிருப்பதைக் கூறுகிறேன்.

## ஞான சாதனங்கள்.

நமது இந்த ஸ்தூல சரீரத்தில் வாதம் பித்தம் சிலேஷ்மம் என மூன்று தோஷங்களுண்டு, அதுபோல, சூட்சும தேக அங்கமாகிய அந்தக் கரணத்திலும் மலம் விட்சேபம் ஆவரணம் என மூன்று தோஷங்களுண்டு, இவற்றுள்.

(1) மலம் (பாவம்), நிஷ்காம கர்மத்தாலும்,

(2) விட்சேபம் (சித்தத்தின் சஞ்சலத்தன்மை), ஈசுவர உபாசனை முதலியவற்றாலும் நீங்கும்.

இவ்வாறு, நிஷ்காம கர்ம ஈசுவர உபாசனை முதலியவற்றால் மல விட்சேப தோஷங்கள் நீங்க, விவேகம் முதலியன வாய்ப்பெற்று, ஆவரணம் (அஞ்ஞானம்) மாத்திர முள்ளவர்க்கே அந்த ஞானம் உபயோகமாம். ஞானத்தினடைவால் (3) ஆவரணம் தொலையும். மல விட்சேபங்களை யுடையோர்க்கு ஞானம் சித்தியாது. ஞானமின்றி முத்தி கூடாதென்பதைச் சொல்லவேண்டியதில்லை. ஆதலால், கர்ம உபாசனைகள் அவசியம் கைக்கொள்ளத் தக்கவையாம் என்பது இதனால் பெறப்படுகின்றது.

## அந்தரங்க பகிரங்க சாதனங்கள்

இவற்றுள், கர்மமும் உபாசனையும் பகிரங்க சாதனங்கள். இச்சாதனங்களால் அந்தரங்க சாதனங்களெனப்படும் விவேகாதிகளுண்டாம். அவற்றால் ஞானமுண்டாம். பகிரங்க சாதனமின்றி அந்தரங்க சாதன முண்டாகாது. அந்தரங்க சாதனத்தின் பின் பகிரங்க சாதனம் அவசிய மின்று; விடத்தக்கதாம்.

கிணற்றில் தவறி விழுந்து கோரையைப் பிடித்துத் தொங்கு மொருவன், தயவுள்ள வொருவன் தன்னைக் காப்பாற்றவிட்ட கயிற்றைப் பிடித்துக்கொண்டு முன் பற்றியிருந்த கோரையை விட்டுவிடுகிறான். அவ்வாறு கயிற்றைப் பிடிக்காமல் முன் பிடித்திருந்த ஆதாரத்தை விட்டிடுவானாயின் அவன் கதி யாதாம்? கிணற்றில் வீழ்வானன்றோ! அதுபோல, ஜனன மரணமென்னும் ஜலத்தோடு கூடிய சம்சாரமாகிய கிணற்றில் விழுந்து அங்குள்ள கர்ம உபாசனைகளென்னும் பகிரங்க சாதனமாகிய கோரையைப் பிடித்துத் தொங்கும் ஜீவன், தயையுள்ள குருவால் அருளப்பட்ட விவேகமாதிய அந்தரங்க சாதனமாகிய கயிற்றைப் பிடித்துக்கொண்டு பகிரங்க சாதனத்தை விட்டு விடவேண்டும். அந்தரங்கத்தை யடையாமல் பகிரங்கத்தை விடுவானாயின் இந்த ஜீவன் உபயப்பிரஷ்டனாய் சம்சாரக் கிணற்றில் மூழ்குவான்; ஆதலால், ஈசுவர உபாசனையாகிய பக்தி அவசியம் செய்யத்தக்கதாம்.

## பக்தியின் அவசியம்.

இவ்வுண்மையை யுணராத சிலர் 'ஆலயத்திற்கேன் போகவேண்டும்? அங்கென்ன வெறுங்கல் தானேயிருக்கிறது! அதைக் கும்பிடுவதேன்? ஸ்நானமேன்? சந்தியாவந்தனமேன்? இவற்றால் பயன் யாது?' எனக் கூறுவர்.

இவர்தம் கூற்று போலிக்கூற்றேயாம். இவர்கள் வெறும் வாய்வேதாந்தம் பேசுவோரே யாவர். வேதாந்த நூல்களில் அங்கு மிங்குமாகச் சில பாகங்களைப் பார்த்துவிட்டு, தலையை முண்டனம் செய்தும், காஷி தரித்தும், 'நாங்கள் ஞானிகள்; சாமியார்கள்' என்று கூறிக்கொண்டும், கஞ்சா கள் சாராயம் மாமிசம் முதலியவற்றைப் பிரியப்படி உபயோகித்துக் கொண்டும் திரியும் போலி ஞானிகளே இங்ஙனம் இயம்புவ ரன்றி உண்மை ஞானிகள் கூறார். கோபுர மேறவேண்டிப் படிகளி லேறுவோனைப் பார்த்து 'படிகளிலேறாதே; அத னாற் பயனில்லை' எனக் கூறுவது பொருந்துமோ? ஞானம் எளிதிற் கிடைத்துவிடக் கூடியதன்று. பெரிய உழைப்பா லேயே அதனை அடைதல் கூடும். இரவும் பகலும் சமயம் நேர்ந்தபோதெல்லாம் ஈசுவரத் தியானம்செய்தல்வேண்டும்; அவரை நோக்கி முறையிடல் வேண்டும். அவரருளைப் பெற்றவர்க்கே ஞானங் கைகூடும். ஆதலால் பகிரங்க சாத னங்களாகிய கர்மம் ஈசுவரபக்தி குருபக்தி முதலியவற்றைக் கைக்கொள்ளுதல் நம்மனோர்க்கு மிகவும் அத்தியாவசிய மாம்.

## மூவகைப் பக்தி.

கோவிலுக்குப் போவது கல்லைக் கும்பிடுவதற் கென்று சிலர் கருதுகின்றனர். மல விட்சேபங்களை நீக்குதற்கு ஈசு வர பக்தியிலும் சிறந்த உபாயம் பிறிதொன்றின்று. இது பற்றியே 'ஆலயந் தொழுவது சாலவும் நன்று,' 'வையந் தோறும் தெய்வந் தொழு' என்றனர். ஆகவே, பக்தியின் தன்மையைச் சிறிது கூறுகிறேன்; கேள்.

பெரியாரிடத்தும் ஈசுவரனிடத்தும் கொண்டுள்ள பூச் சிய புத்தியோடு கூடிய அன்பு பக்தி எனப்படும். ஈசுவர பக்தியானது உத்தமம் மத்திமம் அதமம் என மூன்று வகைப்படும்.

(1) 'ஈசுவரன் என் வடிவமாகவே யிருக்கிறான்; எல்லாம் அவன் சொரூபமே' என்றெண்ணி, அவனைப் பூசிப்பது உத்தம பக்தியாம். இது அநந்ய பக்தி எனவும் படும். இதைப் பற்றிப் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் கீழ்வருமாறு கூறி யிருக்கின்றனர்.

'சகல பூதங்களிடத்திலு மிருக்கும் என்னை அபேதமாக அறிந்து எவன் பஜிக்கிறானோ அந்த யோகியானவன் எந்த மார்க்கத்தை அனுசரித்தவனா யிருப்பினும் என்னிடத்திலேயே யிருக்கிறான்.'

(2) 'எங்கும் நிறைந்துள்ள ஈசுவரன் எனக்குள்ளு மிருக்கிறான்' எனக்கருதி, அவனைத் தனக்குள்ளாகப் பாவித்துப் பூசை செய்வது மத்திம பக்தியாம். இது ஏகாந்த பக்தியெனப்படும்.

(3) 'ஈசுவரன் வெளியில் கோவில் முதலான விடங்களில் இருக்கிறான்' எனக் கருதிப் பூசிப்பது அதமபக்தியாம். இது, பாகிய பக்தி எனப்படும்.

பக்தி முதிர்ந்தால் ஞானம் உதயமாகும். தவிர, பக்தியுள்ளவன் சில விதிகளை இன்றியமையாமற் கொள்ளவேண்டியவனா யிருக்கிறான். அவை யெவை? எனின்:—

### பக்த ரிலக்கணம்.

ஈசுவர பக்தி யுடையோர் பிற உயிர்களைத் தம்மைப் போலப் பாவித்து அவற்றிற்கு யாதொரு தீமையும் புரியாதும், கூடுமானால் நன்மையைச் செய்தும் வருதலாகிய ஜீவ காருண்ய சீலராயும், பொய் பேசாதவராயும், அன்னியர் பொருளை அபகரிக்கவேண்டும் என்னும் அவா சிறிது மில்லாதவராயும், பரதார விருப்பமற்றவராயும், பிறதெய்வங்களைத் தூஷிக்காதவராயும், வெறியைத் தந்து அறிவைக் கெடுக்கும் கள் முதலியவற்றை யருந்தாதவராயும், சத்சாங்

கத்திய முடையவராயும், வேதவாக்கிய குருவாக்கியங்களில் சிரத்தையும் விசுவாசமும் உள்ளவராயு மிருத்தல் வேண்டும். இவ்வா றின்றி, விபூதி உருத்திராக்கங்களையும் துவாதச நாமங்களையும் தரித்துக்கொண் டிருப்பதால் பக்தி யுண்டாய் விடாது. அவை வெறும் வெளி வேடங்கள். பக்தி வெளி வேடமன்று; உள்ளத்தில் நிகழும் அன்பு.

விவேகாநந்தா! பொய் பேசுவோன் பக்த னுவானு? 'பொய் வளரு நெஞ்சினர்கள் காணுத காட்சி' யல்லவா கடவுள்? பிறரை வஞ்சிப்போன் பக்தனுவானு? மாதராசையில் மயங்கிக் கிடப்போன் பக்தனுவானு? ஈசுவர நாமத்தைத் தன் தீய செயல்களுக்கு ஆதரவாகக் கொள்வோன் பக்த னுவானு? ஆகான், ஆகான். தற்காலத்தில் உண்மைப் பக் தர் கிடைப்பது வெகு அரிதாய் விட்டது. எல்லாம் வெளி மயக்கு. எங்கும் ஆஷாட பூதிகள். எங்கும் உருத்திராட்சப் பூனைகள். ஒருவன் மற்றொருவனை 'ஏமாற்றி விட்டானு?' என்பதற்கு 'என்னடா! நாமம் போட்டு விட்டானு?' என் கின்றனரே! கேட்டதில்லையா? விஷ்ணு பக்தனுக்கு அறி குறியாகிய நாமம் மோசத்திற்கு இடு குறியாகி விட்டது. என்ன பரிதாபம்!

## ஈசுவரபக்தி மகிமை.

ஆதலால், நண்ப! ஈசுவரபக்தி அவசியம் செய்யற் பாலதாம். ஈசுவரபக்தி யில்லாதவனுக்கு ஞானமும் சித்தி யாது? மோட்சமும் பிராப்தமாகாது. ஈசுவரபக்தி யின்றேல் எத்தகையோர்க்கும் விஷயவைராக்கியமும் பிரஹ்மஞானமுங் கைகூடா வாகலின் எப்போதும் அப்பகவானது திருநாமங் களை யுச்சரித்தல் வேண்டும். உண்மைப் பக்தியி னடையா ளம் பகவானுடைய திருநாமங்களைக் கேட்டவளவில்

"என்பெலா நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பவுட
லிளகமன தழலின் மெழுகாய்

இடையறு துருகவரு மழைபோ லிரங்கியே
யிருவிழிக ணீரிறைப்ப
அன்பினால் மூர்ச்சித்த வன்பருக் கங்ஙனே
யமிர்தசஞ் சீவிபோல்வந்
தானந்த மழைபொழிவை.”

என்றவாறு, உள்ள நெக்குருக, மெய்புளகிக்க, ஆனந்தபாஷ்யம் சொரிய பாவசமடைதலாம். யாதொன்றையும் விரும்பாமல் அவருக்காகவே அவரிடத்தன்பு செய்தல்வேண்டும். இதுவே மெய்ப்பக்தி. பார்ப்பதையெல்லாம் பரமேசுவரர் வடிவமாகப் பார்ப்பது உண்மைப் பக்தியாம்.

“எங்கும் பரவெளியா யெவ்வுருவுந் தன்னுருவாய்
அங்கங் கிருப்பதுநீ யன்றோ பராபரமே.”

என்பதே உத்தம பக்தன் செய்கையாம். ‘எம்பெருமானே! எனக்கென ஓர் செயலுமில்லையாதலால், என் உடல் பொருள் ஆவிகளை உனக்குக் கொடுத்தேன். என் அகத்துள்ள அழுக்கை யெல்லாம் போக்கி உன் திருவுளப்படி என்னை நடத்துதல் உனக்குத் தக்கதாம்’ என்பதே உண்மைப் பக்தன் செய்யும் பிரார்த்தனையாம். இவ்வாறு ஈசுவர பக்தி செய்வதோடு குருபக்தியும் செய்தல் வேண்டும்.

## ஈசுவரன் ஒருவனே.

விவேகா:—ஈசுவர பக்தி அவசிய மென்பது சரியே. ஆனால், எந்த ஈசுவரனைப் பூசிப்பது?

ஆத்மா:—உன் கேள்வியால் எத்தனையோ ஈசுவரர் இருக்கிறாரென்பது தெரிகிறது.

விவேகா:—ஆம். எத்தனையோ ஈசுவர ரிருக்கிறாரென்று பலர் கூறுகின்றனரே. நூல்களும் அதற்கிடந்தருகின்றனவே. இவ்வையத்தை நிவர்த்திக்க வேண்டுகின்றேன்.

ஆத்மா:—கடவுள் ஒருவரே யன்றிப் பல கடவுளரில்லை. அக்கடவுளுக்கு நாமமுமில்லை, ரூபமுமில்லை, அவர் நாமாதீதர், ஆகலின், அவர் இத்தகையரெனக் கூறல் ஒருவர்க்கு மியலாது. அவர் மனோவாக்குக் கெட்டாதவர். அவரைச் சிவன் விஷ்ணு முதலாகிய பல பெயர்களாலழைப்பர் உலகோர். எல்லாப்பெயர்களும் எல்லாருடைய வழிபாடுகளும் அவ்வொருவரையே அடையும். இவ்வுண்மையை யறியாமல் வீணே வாதிட்டுத் திரிவர் பலர். இதனை விவாதையும் பலன் ஒன்றுமில்லை.

'மூவுருவும் ஒருருவாய் நின்றமூர்த்தி' எனவும்,

'ஆறுசம யங்கடொறும் வேறுவே றாகிவிளை
யாடுமுனை யாவரறி வார்' எனவும்,

இன்னோரன்ன பிறவும் ஆன்றோர் கூறி யிருத்தலைநோக்குமிடத்து 'கடவுள் ஒருவரே' என்பது தெள்ளிதிற்புலனும்.

## குருபக்தி மகிமை

விவேகா:—குருபக்தியின் மகிமையைக் கூறல்வேண்டும்.

ஆத்மா:—"கரவி லாதபேரன்பினுக் கெளிவருங் கருணைக்
குரவ னொருவ னன்றியிக் கொடிய வெம் பாசம்
புரையில் கேள்வியாற் கடப்பது புணையினை லன்றி
யுரவு நீர்க்கடல் கரங்கொடு நீந்துவ தொக்கும்."

என்றவாறு, குருவருளாகிய ஓடத்தாலன்றி சம்சார சாகரத்தைக் கடத்தல் முடியாது. ஆகலின், ஈசுவரபக்தியினும் குருபக்தி சிறந்ததாம். கர்மத்தினாலும் உபாசனையினாலும் மலவிட்சேபங்கள் நீங்கும்; சித்த சுத்தியும் ஏகாக்கிரத் தன்மையு முண்டாம் என்று முன் சொன்னேனன்றோ? அச் சித்த சுத்தியும் ஏகாக்கிரத் தன்மையும் குரு சேவையாலும் உண்டாம். பரமான்ம தரிசனமாகிய ஆத்ம ஞானமும் மோட்சமும் குரு கடாட்சத்தால் கிடைப்பனவேயாம். 'ஞா

னோபதேசம் செய்யும் குருவே காசி விஸ்வநாதர்; குருபாத தீர்த்தமே கங்காதீர்த்தம்; குரூபதேசமே தாரக மந்திரம்' எனக் குரு கீதை கூறுகின்றது. ஆகையால், குருகடாக்ஷமே சிரேஷ்டமானது. குருவானவர் எந்த வருணத்தாராயினும் எந்த ஆஸ்ரமத்தாராயினும் (சந்யாசியாக இருக்கவேண்டும் என்னும் நியமமில்லை; கிருகஸ்தராகவு மிருக்கலாம்.) தம்மி னும் குறைந்த வயதினராயினும் அவற்றைச் சிறிதும் கவனித்தலாகாது.

## குருசேவை.

குருசேவை ஆப்தம் அங்கம் ஸ்தானம் சற்பாவம் என நான்கு வகைப்படும். இவற்றுள்,

(1) ஆப்தம் - குருவிற்குப் பிரிய முண்டாமாறு நடந்து கொள்ளுதலாம்.

(2) அங்கம்-அவர்க்குரிய குற்றேவல்களைச் செய்தலாம்.

(3) ஸ்தானம் - அவரது வீடு நிலம் முதலியவற்றைப் பாதுகாத்தலாம்.

(இதனாலும் குரு கிருகஸ்தரா யிருக்கலா மென்பது விளங்குகிறது.)

(4) சற்பாவம்-அவரைப் பரமசிவமாகவே பாவித்தலாம்.

இவ்வாறு குருசேவை செய்பவன் சத்தியமாக ஞானத்தையும் அதன் வாயிலாக மோட்சத்தையு மடைவான்.

விவேகா:—ஆத்மாநந்தா! ஒரு விஷயம் மறந்துபோனேன். மல விட்சேபங்கள் என்றனையே. அவற்றின் சொரூப மென்ன?

## மல விட்சேபங்களின் சொரூபம்.

ஆத்மா:—பூர்வ ஜன்மங்களிற் செய்த கொலை களவு முதலிய தீவினைகளாலாகிய பாபமே மலமெனப்படும். அப்

பாபம் அந்தக்காணத்தில் மிக்க சூட்சுமமா யடங்கி யிருக்கும். அது அதர்ம மென்றும் சொல்லப்படும். (பாப புண்ணிய மிரண்டிற்கும் அபூர்வமென்றும் அதிருஷ்ட மென்றும் பெயருண்டென்று இங்கு அறிதல் வேண்டும்.)

விட்சேபமாவது: மனம் ஒருமுகப்பட்டு நில்லாமல் பல விடயங்களிற் சென்றலைதலாம்.

விவேகா:—என்னிடத்தில் பாபமிருக்கிறதென்று நான் அறிவ தெப்படி?

ஆத்மா:—கொலை களவு முதலிய பாபகர்மத்திலாவது விஷய போகத்திலாவது உன் மனம் விருப்பங்கொள்ளுமாயின் பாபமிருக்கின்றதென்று நீ அறிந்து கொள்ளல் வேண்டும்.

## உபாசனை செய்யும் விதம்.

விவேகா:—ஈசுவர உபாசனையாவ தென்ன?

ஆத்மா:—உலக காரணராகிய பரமேசுவரரது திருநாமங்களை இடைவிடாது பக்தி சிரத்தையோடு உச்சரித்துத் தியானித்தலே ஈசுவர உபாசனையாம். ஆனால், டம்பத்துக்காக ஈசுவர நாமங்களைப் பிறர் கேட்குமாறு கூறுதல் கூடாது. எப்போதும் தமது காதுக்கும் கேளாதபடி 'சங்கரா! மகாதேவா! கிருஷ்ணா! கோவிந்தா!' என்று உள்ளன்போடு உச்சரித்துத் தியானிப்போர்க்கே மல தோஷமும் விட்சேப தோஷமும் நிவிர்த்தியாகும்.

விவேகா:—உபாசனை செய்பவன் எவ்வாறு இருக்கவேண்டும்.?

ஆத்மா:—உபாசனை செய்பவன் முன்னர் கொலையையும் பொய்யையும் பிரயத்தன பூர்வகமாய் விட்டிடல்வேண்

டும். தேக சுத்தியும் ஆடைசுத்தியு மு- டயவனு யிருத்தல்வேண்டும்.

விவேகா:—உபாசனை செய்யும் விதம் எவ்வாறு?

ஆத்மா:—தீயோர் போதல் வருதலில்லாததாயும் கொசுகு எறும்பு முதலியவை இல்லாததாயும் ஒதமில்லாததாயும் நல்ல காற்று வரக்கூடியதாயுமுள்ள அறையில், கிழக்கு நோக்கியாவது வடக்கு நோக்கியாவது பத்மாசனமிட்டு நிமிர்ந்து உட்கார்ந்து, மூக்கு நுனியில் பார்வையை நிறுத்தி, தன் இஷ்டதேவதை தன் இருதயத்தில் எழுந்தருளி யிருப்பதாகப் பாவித்து, அதனுடைய திருவடித் தாமரைகளில் தன் மனத்தை மலரில் வண்டுகள் தேனுண்ண மொய்ப்பதுபோல அழுந்த நிறுத்துதலாம். அவ்வாறு செய்கையில் வெளியில் ஓடித்திரிந்த பழக்கத்தால் மனமானது அங்கு நிலைபெற்றிராமல் ஓடும். அதனை அப்பொழுதே அறிந்து மீட்டும் திருப்பித் தன் லட்சியத்தில் நிறுத்தல் வேண்டும். 'பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடி யாதே' என்றவாறு, இங்கு மனத்தோடு பெரிதும் போராடவேண்டி வரும்.

## குருவி னிலக்கணம்.

விவேகா:—எத்தகையோர் குருவாவர் ?

ஆத்மா:—காமக்குரோதாதி துர்க்குணங்க ளற்றவராயும் ஈசுவரபக்தி யுள்ளவராயும் வேதாந்த சாஸ்திராப்பியாசம் செய்து அதன் இரகஸ்யார்த்தங்களை நன்குணர்ந்தவராயும் ஆத்மானாத்ம விவேகமுடையவராயும் ஜீவப்பிரஹ்மைக்கிய ஞான சாட்சாத்காரத்தினுல் பிரஹ்மசொரூபமாகவே விளங்குபவராயு முள்ளவரெவரோ, அவரே சற்குருவாவர். அவர் சிஷ்யனுடைய புத்தியிற் ரேன்றும் ஐவகைப் பேதங்களையும் பலவித யுக்திகளால்

கெடுப்பதிற் சமர்த்தராய் இருப்பர். 'குரு' என்னும் பதத்தில் 'கு' என்பதன் பொருள் 'அந்தகாரம்'; 'ரு' என்பதன் பொருள் 'ஒழித்தல்' என்பது. ஆகவே, சீட னுடைய அஞ் ஞானந்தகாரத்தை ஒழிக்குந் தன்மை யை யுடையவரே குருவாவர்; அன்றி, மொட்டை யடித்துக்கொண்டும் சடை வளர்த்துக்கொண்டும் விபூதி உருத்திராக்கம் நாமம் முதலியவற்றைத் தரித் துக்கொண்டும் அப்படியே தம் சீடரையும் செய்வித் துக்கொண்டும் திரிவோர் குருவாகமாட்டார்.

## ஐவகைப் பேதங்கள்.

**விவேகா:**—ஐவகைப் பேதங்கள் எவை?

**ஆத்மா:**—ஜீவ ஈசுவரபேதம், ஜீவ ஜீவபேதம், ஜீவ ஜடபே தம், ஈசுவா ஜடபேதம், ஜடஜட பேதம் என்பனவாம்.

## ஐவகைப் பேதகண்டனம்.

**விவேகா:**—என்ன நண்பா! ஜீவனுக்கும் - ஈசுவானுக்கும், ஜீவனுக்கும் - ஜீவனுக்கும், ஜீவனுக்கும் - ஜடப்பொரு ளுக்கும், ஈசுவானுக்கும் - ஜடப்பொருளுக்கும், ஜடப் பொருளுக்கும் - ஜடப்பொருளுக்கும் பேதமில்லையா? பேதமுள்ளவையாகிய இவற்றை பேதமற்றவை யென் பது எவ்வாறு பொருந்தும்?

**ஆத்மா:**—இவ்விஷயம் இப்போது உனக்கு விளங்காது. இதற்கு முன்னர் நீ அறியவேண்டிய விஷயங்கள் பல உள. குரு சந்நிதானத்தில் ஆத்மானாத்ம விசாரணை செய்யுங் காலத்து இவ்விஷயம் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் இனிது விளங்கும். ஆயினும், இங்குச் சுருங்கக் கூறுவதை மனதிலுய்த்துப் பின்பு இதனுண் மையை அறிந்துகொள்.

(1) ஜீவனுக்கும் - ஈசுவரனுக்கும் பேதமில்லை. அவர்கள் பேதமாகக் காணப்படுகின்றனரே யெனின், அப்பேதம் கற்பிதமே. எங்ஙனமெனின்: ஜீவன் அவித்தையை யுபாதியாக வுடையவன்; ஈசுவரன் மாயையை உபாதியாக வுடையவன். இவ்வுபாதியால் அவர்கள் பேதமுடையார் போலத் தோன்றுகின்றனர். உபாதியை நீக்கிப் பார்க்கின் பேதம் தோன்றாது; கடாகாச மகாகாசம்போல.

(2) ஜீவனுக்கும் - ஜீவனுக்கும் பேதமில்லை. காணப்படும் பேதம் கற்பிதம். ஆபாச (பிரதிபிம்ப) த்தோடு கூடிய அந்தக்காணங்களை உபாதியாக உடையனவா யிருத்தலின்; ஒரு கடாகாசத்திற்கும் மற்றொரு கடாகாசத்திற்கு முள்ள பேதம்போல.

(3) ஜீவனுக்கும் - ஜடத்திற்கும் பேதமில்லை. காணப்படும் பேதம் கற்பிதம். ஜீவன் ஆபாசத்தோடு கூடிய அந்தக்காணத்தை உபாதியாகவுடையவன்; ஜடம் ஆபாசமின்றி நாமரூபங்களை உபாதியாகவுடையது. இவ்வுபாதியால் பேதம் காணப்படுகின்றது. உபாதியை நீக்கிப்பார்க்கின் பேதம் தோன்றாது. சொப்பனத்திலுள்ள ஜீவனுக்கும் சொப்பன ஜடப்பொருளுக்குமுள்ள பேதம்போல. (ஜடப்பொருள்-பூத பௌதிக பதார்த்தங்கள்.)

(4) ஈசுவரனுக்கும்-ஜடப்பொருளுக்கும் பேதமில்லை. காணப்படும் பேதம் கற்பிதம். ஈசுவரன் ஆபாசத்தோடு கூடிய மாயையை உபாதியாக வுடையவன். ஜடம் நாம ரூபங்களை உபாதியாக வுடையது. இவ்வுபாதியால் பேதம் தோன்றுகின்றது. உபாதியை நீக்கிப்பார்க்கின் பேதம் தோன்றாது. சொப்பனத்தில், அச் சொப்பனத்தைக் காணும் சாட்சிக்கும் சொப்பனப் பிரபஞ்சத்திற்கு முள்ள பேதம்போல.

(5) ஜடத்திற்கும்-ஜடத்திற்கும் பேதமில்லை. காணப் படும் பேதம் கற்பிதம். நாமரூபமய உபாதியினாலானவையா யிருத்தலின்; கயிற்றிற் கற்பிதமாகக் காணப்படும் சர்ப்பம் தண்டம் முதலியவற்றின் பேதம்போல.

## உபாதி லட்சணம்.

**விவேகா:**—உபாதியாவது என்ன ?

**ஆத்மா:**—உபாதியாவது:—எது தனது ஆசிரயத்தின் சொரூபத்திற் பிரவேசியாமல், அதனைப் பிறவற்றி னின்றும் வேறு பிரித்தறிவிக்கின்றதோ அது உபாதி யாம். அது, கடம் தனது ஆசிரயமாகிய ஆகாசத்திற் பிரவேசியாமல், அக்கடாகாசத்தைப் பிற மகாகாச முதலியவற்றினின்றும் வேறுபிரித் தறிவித்தலால் உபாதியாதல் போலவாம். அல்லது ஒரு பொருளைப் பல பொருள்போலக் காட்டுவது உபாதி என்றும் கூற லாம்.

**விவேகா:**—ஆத்மாநந்தா! இவ்விஷயம் நன்கு விளங்கு கின்றது. ஆயினும், இதில் சந்தேகம் பல தோன்று கின்றன. இதனை மனதிற் பதியவைத்துக் கொள்கி றேன். நீ கூறியதுபோல் ஆத்மாநாத்ம விசாரத்தால் விளங்கும் போலும். இன்னம் இதன் சம்பந்தமாக அறியவேண்டிய தேதேனு மிருப்பின் அதையும் கூறல் வேண்டும்.

**ஆத்மா:**—ஆம். இங்கு அறிய வேண்டிய முக்கியமான விஷய மொன்றுண்டு. சாவதானமாய்க் கேள். இப் பொழுது கூறிய பேதங்கள் கற்பனையாகக் காணப்படுவ தெதனால்? எனின்: பிராந்தியால் (மயக்கத்தால்). இது போல, வேறு சில பிராந்திகளு முண்டு. அவற்றையும் ஆசிரியர் அகற்றுதல் வேண்டும்.

## ஐவகைப் பிராந்தி.

விவேகா:— *அப் பிராந்திகளெவை?*

ஆத்மா:— *இப்போது கூறியது பேதப்பிராந்தி. இது தவிர, கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தி, சங்கப் பிராந்தி, விகாரப்பிராந்தி, பிரஹ்மத்திற்குப் பின்னமாகிய சகத்தின் சத்தியத்துவப் பிராந்தி என நான்கு பிராந்திகளுண்டு. ஆகபிராந்தி ஐந்தாம். இவற்றுள்,*

(1) *பேதப் பிராந்தி முன் கூறப்பட்டது.*

(2) *வாஸ்தவத்தில் ஆத்மாவானது ஒரு காரியத்தைச் செய்வதும் (கர்த்தா), அதன் பயனாகிய போகத்தை யனுபவிப்பதுமாகிய (போக்தா) கருத்திருத்துவ போக்திருத்துவங்கள் இல்லாததாயினும், அந்தக்கரணத்தின் தருமமாகிய அவை ஆத்மாவினிடத் திருப்பனவாகத் தோன்றும் பிராந்தி கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தியாம்.*

(3) *தேகாதிகளில் யான் எனதென்றுண்டாகும் அபிமானம் ஆத்மாவினிடத்துத் தோற்றல் சங்கப் பிராந்தியாம். (தேகத்தில் 'யான்' என்றுண்டாகும் புத்தி அகங்காரமாம். தேகத்திலும் பிறவற்றிலும் எனதென்றுண்டாகும் புத்தி மமகாரமாம்.)*

(4) *பால் எப்படி தயிராக விகாரப்படுகிறதோ அப்படி பிரஹ்மமே ஜகமாக விகாரப்பட்டிருக்கின்றதெனல் விகாரப் பிராந்தியாம்.*

(5) *பிரஹ்மத்திற்கு வேருகவுள்ள ஜகம் பொய்யன்று; சத்தியமே எனக் கருதுதல் சத்தியத்துவப் பிராந்தியாம்.*

## ஐவகைப் பிராந்தி நிவிர்த்தி.

விவேகா:— *இவற்றை நீக்குவதெப்படி?*

ஆத்மா:— (1) *பேதப்பிராந்தி பிம்பப் பிரதி பிம்ப திருஷ்டாந்தத்தால் நீங்கும்.*

எவ்வாறெனின்:

"சித்தின் (பிரஹ்மத்தின்) சாயையானது, கண்ணாடியிற் பிரதி பிம்பம்போல, சத்தியம்போல் தோற்றுகின்றது முக்கியமாகிய ஜீவேசுவர பேத நிஷேதத்தால் (நிவிர்த்தியால்) அதனுள்ளடங்கிய நான்கு பேதங்களின் நிவிர்த்தியும் சித்திக்கின்றது. சகல பேதமும் உபாதியினு லாயிருக்கின்றன. உபாதிகள் யாவும் மித்தையாதலின் அவற்றாலாகிய பேதங்களும் மித்தையாம்" என்னும் உபநிடத வாக்கின்படி,

'கண்ணாடியிற்றோன்றும் முகத்தின் பிரதிபிம்பமானது முகத்தினும் வேறாயிராமல் ஒன்றாக (அபேதமாக)வே யிருத்தல்போல அந்தக்காணத்திற் றோன்றும் சேதனத்தின் சாயையாகிய ஜீவர்கள் சேதனத்திற் கன்னியமாகாமல் அபேதமாகவே யிருக்கின்றனர்' என்றிவ்வாறு அறிதலாகிய பிம்பப் பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தால் பேதப்பிராந்தி நிவிர்த்தியாகும்.

(2) 'சிவப்பு வஸ்திரத்தின் சம்பந்தத்தால் ஸ்படிகத்தில் சிவப்பு நிறம் தோற்றுகிற' தென்னும் திருஷ்டாந்தத்தால் சங்கப் பிராந்தி நீங்கும். எங்ஙனமெனின்:

'ஓர் சிவப்பு வஸ்திரத்தின்மேல் படிகமணியை வைப்பின், அம் மணியானது துணியின்சையோக (சேர்க்கை)சம்பந்தத்தால் செந்நிறமுடையதாய்ப் பிராந்தியால் தோன்றுகின்றது. உண்மையில் அதனிடத்துச் சிவப்பு நிறமில்லை. தோன்றும் நிறம் துணியிலுள்ள குசும்பாப் பொடியினுடையது. அது போல, ஆத்மா அந்தக்காணத்தின் தாதான்மிய (ஒற்றிப்பு) முடைமையின் அந்தக்காணத்தின் தர்மங்களாகிய கருத்திருத்துவ போக்திருத்துவங்கள் ஆத்மாவில் தோற்றுகின்றன. வஸ்திரத்தி னின்று மணியை வேறுபிரித்த காலத்து அதனிடத்தில் சிவப்பு நிறம் தோன்றாமைபோல, ஆத்மா அந்தக்காணத்தினின்றும் பிரிந்திருக்கும் சுழுத்தி காலத்து அத

னிடத்தில் அவை தோன்றுவதில்லை. ஆகையால், ஆத்மாவி னிடத்துக் கருத்திருத்துவ போக்திருத்துவ மில்லை; ஆனால், பிராந்தியால் தோற்றுகின்றன' வென்னும் இத்திருஷ்டாந் தத்தால் ஆத்மா கர்த்துரு போக்துரு வென்னும் பிராந்தி நீங்கும்

(3) 'கடாகாய' திருஷ்டாந்தத்தால் சங்கப் பிராந்தி நீங் கும்.

எவ்வாறெனின்:

'கடத்தை உபாதியாகவுடைய ஆகாயம் கடாகாயமாம். அந்த ஆகாயம் கடத்தோடு சம்பந்தமுடையதாகக் காணப் படினும், உண்மையில் அது சம்பந்தமுடையதன்றாம். கடம் அசைந்தால் ஆகாயம் அசைவதில்லை; கடம் நசித் தால் ஆகாயம் நசிப்பதில்லை. ஆகவே, ஆகாயம் அசங்கமா யிருக்கின்றது. அதுபோல, சரீரத்தின் தர்மங்களாகிய பிறத்தல் வளர்தல் இறத்தல் முதலிய விகாரங்கள் ஆத்மா வோடு சம்பந்தப்படுவதில்லை. ஆகலின், ஆத்மா அசங்கம். ஏனெனில்,

சங்காதம் திருசியம்; அதாவது அறிபடு பொருள்: ஆத்மாதிருசியமன்று;திருஷ்டா; அதாவது அறியும்பொருள். இவ்வாறு அசங்கமா யிருத்தலால் அகந்தை மமதைகளாகிய சம்பந்த மின்றியது' என்றிவ்வாறு அறிதலாகிய கடாகாச திருஷ்டாந்தத்தால் சங்கப்பிராந்தி நிவர்த்தியாம்.

(4) 'ரஜ்ஜு சர்ப்ப (கயிற்றரவு)' திருஷ்டாந்தத்தால் விகாரப்பிராந்தி நிவிர்த்தியாகும். எப்படியெனின்;

'கயிற்றிற் கற்பிதமாயுள்ள சர்ப்பத்தால் கயிறு யாதொரு விகாரமு மடையாமைபோல, பிரஹ்மத்தி னிடத் துக் கற்பிதமாகவுள்ள ஜகத்தால் பிரஹ்மம் விகாரமடைத லில்லையாம்.' இதனால் விகாரப் பிராந்தி நிவிர்த்தியாம்.

(5) 'மண்குட' திருஷ்டாந்தத்தால் பிரஹ்மத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தி நீங்கும். எங்ஙன மெனின் ;

'குடத்திற்குக் காரணம் மண் ; குடம் காரியம். குடத்தை ஆராய்மிடத்து மண்ணே காணப்படுகின்ற தன்றி மண்ணிற்கு அன்னியமாகக் குடம் காணப்படுதலில்லே. ஆகையால், மண்ணிற்கும் குடத்திற்கும் காரிய காரணத்தன்மையால் காணப்படும் பேதம் கற்பிதம். அதுபோல, பிரஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் காரிய காரணத்தன்மையால் தோன்றும் பேதமும் கற்பிதமேயாம். ஆகலால், பிரஹ்மத்தினும் வேறாக ஜகத்து சத்தியமாக வின்றும். மித்தையாயுளதாம்.' இதனல் ஜகத்து சத்திய மென்னும் பிராந்தி நீங்கும்.

விவேகா:—ஆருயிர் நண்ப ! இப்போது நீ கூறியதால் '(1) ஜகஜீவ பரங்களுக்குள் ஒன்றற் கொன்று பேதமின்று. (2) ஆத்மா கர்த்தா போக்தாவன்று. (3) ஆத்மாஷட் பாவ விகாரங்களற்று அசங்கமாயிருப்பது. (4) ஆத்மா விகாரமின்றியது. (5) பிரஹ்மத்தினும் பின்னமாக உலகம் சத்தியமாக வில்லே ; பிரஹ்ம சொரூபமாகவேயிருப்பது' என்னு மிவ்விஷயங்கள் அறியப்பட்டன. திருஷ்டாந்தங்களால் விஷயங்கள் நன்கு புலப்படுகின்றன. ஆயினும், 'இப்படியுமிருக்குமா ?' வென்னும் ஐயம் மாத்திரம் அகலவில்லே. என் மனம் குழம்புகின்றது ; அறிவு கலங்குகின்றது. விஷயங்களை மேலும் மேலும் அறியவேண்டு மென்னும் ஆவலும் அதிகரிக்கின்றது. நண்பா ! இவற்றி னுண்மையை நானறிவதெப்படி ? நானெங்ஙனம் கடைத்தேறுவேன் ? அத்தகைய பாக்கியமும் எனக்குக் கிட்டுமா ?

ஆத்மா:—விவேகா ! முன்னேதானே சொன்னே னல்லவா இவ்விஷயங்கள் விளங்காவென்று ? சந்தேகமாய்த்தா

னிருக்கும். அறியவேண்டிய முறைப்படி அறிந்தால் முடிவில் எல்லாம் தெளிவாக விளங்கும். கவலைப் படாதே. நிற்க, இன்னம் வேறேதேனும் கேட்கவேண்டுமா? பிரியமிருப்பின் கேள்; சொல்லுகிறேன்.

விவேகா;—(திடுக்கிட்டவனாய்) ஆத்மாநந்தா! அதென்ன அவ்வாறு கூறுகின்றனை? நான் பிரியமற்றவனாய்க் காணப்பட்டேனா? ஐயோ! கரும்பு தின்னவும் கூலி வேண்டுமா? இந்நாளன்றோ நன்னாள்! இன்றல்லோ பிறவியின் பயனைப் பெறுதற்குரியவனாயிருக்கின்றேன். நம்மனோர் ஏதேனுமொரு காரியத்தைக் குறித்துப் பேசுகையில் 'இதென்ன பிரஹ்ம வித்தையா?' என்பர். இதனால், பிரஹ்ம வித்தையே எல்லாவற்றிலும் சிறந்ததும் கஷ்டமானது மென்பது தெரிகின்றதே, அதனைக் கூறுவதும் கஷ்டம்; கேட்டுத் தெளிவதும் கஷ்டமே. அத்தகைய கஷ்டமான வித்தையைக் கூறுவது எளிதாமோ? விஷயங்களைக் கேட்குந்தோறும் என் உள்ளம் உவகையால் துள்ளுகின்றதே. கேட்பதில் நான் சிறிதும் சோர்வடைந்தேனில்லையே. ஆனால், இது கஷ்டமான விஷயமென்று கூறினேன்; மன்னித்தல் வேண்டும். சொல்ல வேண்டியவற்றைச் சொல்லுமாறு மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆத்மா:—விவேகா! வேடிக்கையாகச் சொன்னேன்; வருந்தாதே. இருளுமுன் வீட்டுக்குப் போகவேண்டாமா? ஆயினும், இன்னும் சிலவற்றைக் கூறி முடிக்கிறேன். தவிர, இப்பொழுது, இவற்றை ஏன் சொன்னேனெனின்; இவ்வைவகைப் பிராந்தியையும் ஆசிரியன் மூலமாக அகற்றிக்கொள்ளல் வேண்டும் என்பதை அறிவிக்கவே கூறினேன்.

## சீடனிலக்கணம்.

விவேகா:—ஞானோபதேசம் பெறுதற்குரிய சீடன் எவ்வா றிருத்தல்வேண்டும்?

ஆத்மா:—ஈசுவரபக்தி யுடையோனும், காமக்குரோதாதி துர்க்குண துர்ச்செயல்க ளில்லாதோனும், துர்ச்சனர் சேர்க்கை யில்லாதோனும், இந்திரிய ஜெயமுடையோ னும், ஜீவகாருண்ய முள்ளோனும், பாவகாரியங்களைச் செய்வோரைக் கண்டால் பயப்படுவோனும், கல்வி கேள்விகளை யுடையோனும், சூட்சும புத்தியுடையோ னும், வேதாந்த சாஸ்திரங்களை யன்றிப் பிற நூல்களைப் பார்க்கப் பிரியமில்லாதோனும், சாதன சதுஷ்டய முடையோனும் எவனோ அவனே சற்குரு சேவை செய்து தத்துவோபதேசம் பெறுதற்குரிய சற்சீடனா வான்.

## ஞானத்தின்வகை.

விவேகா:—நீ முற்கூறிய பிரஹ்மஞானம் எத்தனைவகைப் படும்?

ஆத்மா:—பிரஹ்மஞானம் பரோட்சம் அபரோட்சம் என இருவகைப்படும். அபரோட்ச ஞானமும், திடம் அதி டம் என இரு வகையாம்.

விவேகா:—அவற்றை விளக்கல் வேண்டும்.

ஆத்மா:—'சுவர்க்கம் என்பதொன்றுண்டு' என்று சாஸ்திர வாயிலாக அறிதல் போல, 'சச்சிதானந்தவடிவ பிரஹ்ம மிருக்கின்றது' என்று சாஸ்திரவாயிலாக அறிதல் பரோட்சப் பிரஹ்ம ஞானமாம். 'இது குடம்' என்றறி தல்போல 'பிரஹ்மம் நான்' என்றறிதல் அபரோட்சப் பிரஹ்ம ஞானமாம்.

இந்த அபரோட்சப் பிரஹ்மஞானம் சந்தேக விபரீதங்களோடு கூடியதாயிருப்பின் அநிட அபரோட்சப் பிரஹ்ம ஞானமென்றும், சந்தேக விபரீதங்களின்றியதாயின் நிட அபரோட்சப் பிரஹ்மஞானமென்றும் பெயர் பெறும்.

**விவேகா:**—சந்தேக விபரீதங்களெவை?

**ஆத்மா:**—(1) வேதாந்தமானது (உபநிடதம்) ஜீவப்பிரஹ்மங்களின் பேதத்தைச் சொல்லுகின்றதா? அபேதத்தைச் சொல்லுகின்றதா? (இது பிரமாணகத சமுசயம்.) ஜீவப்ரஹ்மங்கள் வாஸ்தவத்தில் பேதமுடையனவா? அன்று? (இது பிரமேயகத சமுசயம்.) என்பவை சந்தேகம்

(2) ஜீவப்பிரஹ்மங்கள் அபேதமன்று; பேதமுடையனவே என்று மாறுகக் கருதுதல் விபரீதமாம். (விபரீதம்=திரிபுணர்ச்சி.)

**விவேகா:**—முன் கர்ம உபாசனைகளாகிய பகிரங்க சாதனங்களைக் கூறினை. அந்தரங்க சாதனங்களைக் கூறவில்லையே. அவற்றை யறிவித்தல் வேண்டும். தவிர, சீடனிலக்கணங் கூறினபோது சாதன சதுஷ்டயமுடையவனுய் இருத்தல் வேண்டுமென்றனையே. அவை எவை?

## நண்பர் பிரிவு.

**ஆத்மா:**—இவற்றை நாளையதினம் தெரிவிக்கிறேன். இப்பொழுது வீட்டிற்குப் போகலாம் வா. நேரமாய் விட்டது. பின்பு இருட்டில் கஷ்டப்படவேண்டும்.

**விவேகா:**—நல்லது, போகலாம் வா. ஆத்மாநந்தா! இவ்விஷயங்களைக் கேட்கக் கேட்க இன்னம் கேட்கலாமாவென்னும் ஆவல் அதிகரிக்கின்றது. நாளையதினம் நீ வாதத் தவறமாட்டாயே? எத்தனை மணிக்கு வரலாம்?

**ஆத்மா:**—நான்குமணி சுமாருக்கு வரலாம்.

விவேகா:—சரி. புறப்படு போகலாம்.

அவ்வாறே இருவரும் புறப்பட்டுச் சென்றனர். மறு நாள் விவேகானந்தன் வீட்டிற்கு ஆத்மானந்தன் மூன்று மணிக்குப் போனான். விவேகானந்தனும் புறப்படும் சமய மாகையால் இருவரும் நான்கு மணிக்குக் கடற்கரை சேர்ந் தனர்.

இரண்டாம்நாள் கடற்கரைச் சம்பாஷணை.

ஆத்மா:—விவேகா! ஒருவேளை இன்று நீ வரமாட்டாய் என்று நினைத்தேன்.

விவேகா:—ஏன்?

ஆத்மா:—ஏனென்றால், இந்த வேதாந்த விஷயங்கள் சாமா ன்யர்களுக்குப் பிடிப்பதில்லை. வெறும் புராணக்கதை களாயிருப்பின் மெத்த ஆவலாய்க் கேட்பர். உலக வாழ்க்கையில் அனேக ஜன்மங்களாகப் பழகியதனால், மனமானது, அவ்வாழ்க்கையின் சம்பந்தமான கதை களைக் கேட்பதில் விருப்பமுடையதாகின்றது. தவிர, வேதாந்தமோ தேகாதி வடிவப் பிரபஞ்சம் பொய்யென் றும், பிரஹ்மமே சத்தியமென்றும், எல்லாம் பிரஹ்மமே என்றும் கூறுகின்றது. அதன்படி சரீராதிகளைப் பொய் யெனத் தள்ளுவதில் (தன்னிழப்பில்) பிரியமுண்டாவ தில்லை; பிரியங்கொண்டு கேட்டாலும் மனதிற்குப் பிடிப்பதில்லை; பிடித்தாலும் அனுஷ்டிக்க முடிவதில்லை. சிலர்க்கு இதனைக் கேட்கும்போதே தூக்கம் வந்து விடும். தென்னாலிராமன் கதையாயின் வருகிற தூக்க மும் ஓடிவிடுகிறது. இதற்குக் காரணமென்ன தெரி யுமா? அஞ்ஞானத் தடிப்பே. (மிகுதியே.) அதனால் ஒருவேளை நீயும் வருவாயோ? மாட்டாயோ? வென்று நினைத்தேன்.

விவேகா:—(முகம் மாறுபட்டு) என்னையும் அப்படியா நினைத்து விட்டனை?

ஆத்மா:—இல்லை, இல்லை. வேடிக்கையாகக் கூறினேன். நிற்க, நேற்று நீ கடைசியாகக் கேட்ட தென்ன?

விவேகா:—அந்தரங்க சாதனங்களையும் சாதன சதுஷ்டயங்களையும் கூறுமாறு கேட்டேன்.

## சாதன சதுஷ்டயம்.

ஆத்மா:—சாதன சதுஷ்டயங்கள் அந்தரங்க சாதனங்களுளடங்கினவையே. அவற்றைக் கூறுகிறேன்; கேள். அந்தரங்க சாதனங்க ளெட்டாம். அவையாவன :— (1) நித்தியாநித்திய வஸ்து விவேகம். (2) இகாமுத்திரார்த்த பலபோக விராகம். (3) சமாதி சட்க சம்பத்தி. (4) முமுட்சுத்துவம். (5) சிரவணம். (6) மனனம். (7) நிதித்தியாசனம். (8) தத்துவம் பதார்த்த சோதனம் என்பனவாம் இவற்றுள் பின்னருள்ள நான்கும் குருவை யடுத்துச் செய்யவேண்டியவையாம். அதற்கு முன் இருக்கவேண்டியவை முதல் நான்கு சாதனங்களாம். முன்னுள்ள நான்கு சாதனங்கள் கைவந்த பின்னரே பின்னுள்ள நான்கு சாதனங்கள் பயன்படுவனவாமாகலின் முன்பு அவற்றையே முக்கியமாகக் கொண்டு கூறுகிறேன். (சதுஷ்டயம் = நான்கு.) இவற்றுள்,

### (1) நித்தியா நித்திய வஸ்து விவேகம்.

நித்திய (என்றும் அழியாத) வஸ்து இது; அநித்திய (அழியும்) வஸ்து இது; என்று இவ்விரண்டையும் வேறு பிரித்தறிவது. நித்தியப் பொருள் ஆத்மாவாம்; அநித்தியப் பொருள் அநாத்மாவாம்; அதாவது, மாயாப் பிரபஞ்சமாம். ஆத்மா நாசமற்றதாயும் கிரியையற்றதாயும் இருத்தலின்,

நித்திய வஸ்துவாம். அநாத்மா நாசமுள்ளதாயும் கிரியை யுள்ளதாயு மிருத்தலின் அநித்தியமாம். எங்கும் கிரியையுள் ளது அழிவுள்ளதென்பதும், கிரியை யில்லாதது அழிவற்ற தென்பதும் பிறழாத சித்தாந்தமாம்.

விவேகா:—சிவம் அல்லது விஷ்ணு என்று கூறப்படுகிற பிரஹ்மத்தை (கடவுளை) யன்றோ நித்தியப்பொருள் எனல் வேண்டும். ஆத்மாவை நித்தியமெனல் எவ்வாறு பொருந்தும்?

ஆத்மா:—'தத்துவமசி' முதலிய மகா வாக்கியங்கள் ஆத்மா வையே பிரஹ்மம் என்று கூறுதலின் முரணின்றாம்.

விவேகா:—ஆத்மாவே பிரஹ்மமென்பது எங்ஙனம்?

ஆத்மா:—"சின்மாத்திரமா யுள்ளவெறுஞ்
சிவனேதிகழ்வான் யாதுக்கு
முன்மாத்திரமும் வேறில்லை
முற்றுமவனே மொழிவுற்ற
நன்மாத்திரமா யான்மாவென்
றுரைக்குநாமத் தினையுடையான்
தன்மாத்திரமே பாகியவத்
தன்மையான சங்கரன்றான்."

என்று, பிரமகீதை உபநிடதார்த்த முரைக்கு மிடத்துக் கூறு வதை யுணர்வார்க்கு, 'ஆத்மாவே பிரஹ்மமாம்; பிரஹ்மமே ஆத்மாவாம்' என்பதும், 'பிரஹ்மமென்பதும் ஆத்மாவென்ப தும் ஒருபொருட் கிளவிகளாம் (ஒரே பொருளைக் குறிக்கும் வெவ்வேறு பெயர்களாம்)' என்பதும் நன்கு விளங்கும்.

விவேகா:—இதனை இன்னும் சற்று விளக்கமாகக் கூறல் வேண்டும்.

ஆத்மா:—வியாபகமா யிருப்பது பிரஹ்ம மென்று கூறப்படு கின்றது. அங்ஙனமே ஆத்மாவுமாம். தேச (இட)த் தால் எதற்கு முடிவின்றோ அது வியாபகமாம். ஆத்

மா பிரஹ்மத்திற்கு வேருயிருக்குமாயின் அது தேசத்தால் முடிவுடையதாம். எது தேசத்தால் முடிவுடையதாகின்றதோ அது காலத்தாலும் முடிவுடையதாகும். பிரஹ்மமும் ஆத்மாவும் தேசத்தாலும் காலத்தாலும் முடிவுடையனவா யிருப்பின், அவை, படமும் (ஆடையும்) கடமும் போலக் கண்டமாய்க் காரியமாய் அநித்தியமா யொழியும். இக் காரணத்தால், ஆத்மாவும் பிரஹ்மமும் வெவ்வேறு பொருள்களன்ருமென்பது பெறப்படுகின்றது. பிரஹ்மம் ஆத்மாவிற்கு வேருகுமாயின் அது அனுத்மாவாகும். அதனுல் அனுத்மா ஜடமென்றும் அழியுந் தன்மையுடையதென்றும் ஒப்பவேண்டி வரும். ஆகையால், ஆத்மாவைப் பிரஹ்மத்திற்கு வேருகக் கூறுவது எவ்வாற்ருனும் பொருந்தாது. (ஆத்மா வென்றது ஜீவசாட்சியாயுள்ள கூடஸ்தனே; அதாவது துவம்பத லட்சியார்த்தப் பொருளே.)

விவேகா:—ஆத்மா வென்பது 'நான்' என்னும் சொல்லுக்குப் பொருளா யிருப்பதன்ருே?

ஆத்மா:—ஆம்.

விவேகா:—அது பிரஹ்மமாயின் ஒன்ருகவன்ருே இருத்தல் வேண்டும்? பலவாக இருப்பானேன்?

ஆத்மா:—பிரஹ்மவடிவ ஆத்மா எப்போதும் ஆகாயம்போல ஒன்ருகவே யிருக்கின்றது. உபாதியால் பலவாகத் தோற்றுகின்றது. ஒன்ருகவேயுள்ள சந்திரன் கடநீர், ஏரிநீர் முதலிய உபாதிகளால் பலவாக விளங்குதல் போல, ஒன்ருகவேயுள்ள ஆத்மாவும் மாயை அவித்தை என்னும் உபாதிகளால் ஈசுவரன் ஜீவன் எனப் பலவாக விளங்குகின்றது. உண்மையில் பலவாக இருப்பதன்று.

## (2) இகாமுத்திரார்த்த பலபோக விராகம்.

காணப்படும் இவ்வுலகத்திலும் கேட்கப்படும் அவ்வுலகத்தி (சுவர்க்கத்தி) லும் உள்ள அனுபவித்தற்குரிய மாலை, சந்தனம், ஆடை, அணி, வநிதாதி விஷயமனைத்தும் அநித்தியமும் துக்க சாதனமுமா மென்பதை அவற்றின் குண தோஷங்களை ஆராய்ச்சி செய்வதன் வாயிலாக வறிந்து, அவற்றினிடத்து இச்சைகொள்ளா திருத்தலாம். இது வைராக்கியம் எனவும் படும்.

இந்த வைராக்கியம் (1) மந்தம். (2) தீவிரம். (3) தீவிரதரம் என மூவகையாம்.

(1) மந்தவைராக்கியம்:—புத்திரன் மனைவி செல்வம் முதலியவற்றின் நாசத்தால் சம்சாரத்தினிடத்து வெறுப்புக் கொள்ளுதலாம்.

(2) தீவிர வைராக்கியம்:— தாரபுத்திராதிகளா லுண்டாகும் சுகம் அநித்தியமா மென்றறிந்து அச்சுகத்தை விரும்பா திருத்தலாம்.

(3) தீவிரதர வைராக்கியம்:—இவற்றினிடத்து ஆசை கொள்வதால் புனர் ஜன்ம முண்டாகுமென் றறிந்து சகலலோக போகங்களிலும் இச்சை யில்லா திருத்தலாம்.

## (3) சமாதி சட்க சம்பத்தி.

சமம், தமம், திதிட்சை (சகித்தல்), உபரதி (விடல்), சிரத்தை, சமாதானம் என்னும் இவ்வாறையும் பெறுதலாம்.

(1) சமம்:—உட்கருவி யென்னும் அந்தக்கரணத்தை விஷயங்களிற் செல்லாவாறு தடுத்தல். (இது சமை, சாந்தி எனவும் படும்.)

(2) தமம்:—புறக்கரணங்களாகிய செவியாதிகளைச் சப்தாதி விடயங்களிற் செல்லாவாறு தடுத்தல். (இது தமை, தாந்தி எனவும் படும்.)

(3) திதிட்சை:—சிரவணாதிகளைச் செய்யுங்கா லவற்றிற்குத் தடையாக வரும் பசி தாகம் சீதோஷ்ணம் முதலியவைகளைப் பொறுத்தலாம். அங்ஙனஞ் சகிக்காவிடின் அவற்றின் நிவிர்த்தியில் மனஞ் செல்லும். அதனால் சிரவணாதிகளுக்கு விக்கினம் நேரும். ஆதலால் திதிட்சை அத்தியாவசியமாம்.

(4) உபரதி:—ஸ்திரீ, தனம், ஜாதி, அபிமானம் முதலிய சாதனங்களோடு கூடிய சகல கர்மங்களையும் விடுதலும், ஸ்திரீயை வெறுத்தலுமாம்.

விவேகா:—இரண்டாஞ்சாதனமாகிய விராகத்தில் இவ்விஷயம் கூறப்பட்டிருக்க மீண்டுங் கூறுவதேன்? விராகத்திற்கும் உபரதிக்கும் என்ன பேதம்?

ஆத்மா:—அடையப்படாத விஷயங்களில் தோஷ திருஷ்டி பூர்வகமாய் இச்சை யில்லாம லிருப்பது விராகமாம்; விட்ட வஸ்துக்களி னிடத்தில் மீண்டும் இச்சைகொள்ளா திருப்பது உபரதியாம். விராகத்தின் பயன் உபரதியாம்.

விவேகா:—உபரதியில் 'விஷயபோகங்களை விட்டு' என்பதில் ஸ்திரீயுமடங்கி யிருக்கப் பின்னரும் 'ஸ்திரீயை வெறுத்து' எனக் கூறியதேன்?

ஆத்மா:—விடுதற் கருமையா யிருத்தலாலும் அவசியம் விடத்தக்கதா யிருந்தலாலும் வற்புறுத்தற் பொருட்டுக் கூறப்பட்டதாம் என்று அறிதல் வேண்டும்.

(5) சிரத்தை:—குருமொழியின் கண்ணும் மறைமொழியின் கண்ணும் பூரண விசுவாசம் (நம்பிக்கை) வைத்தலாம். ஈசுவரன் குரு இவர்களிடத்தில் பக்தியுள்ளார்க்கே வேதவாக்கியத்திலும் குருவாக்கியத்திலும் விசுவாசமுண்டாம். ஆகையால், சிரத்தை எல்லாச் சாதனங்களினும் முக்கியமாம்.

(6) சமாதானம்:—பாகிய விஷயங்களிற் செல்லாவாறு தடுக்கப்பட்ட சித்தமானது பெரியோர்களிடத்துக் கேட்டறிந்த ஞான சாஸ்திரார்த்தத்தையே உள்ளவாறு சிந்திக்கும்படி செய்தல். நித்திரை சோம்பல் முதலியவற்றை விடுவதாலுண்டாகும் மனதின் நிலை சமாதானம் என்பதுமுண்டு.

ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்ய விரும்புவோர் மனத்தை அக்காரியத்தி னிடத்தே நிறுத்தினொழிய அக்காரியம் செவ்வனே முற்றுப்பெறு தன்றோ? மனம் வேறிடத்திருக்குமாயின் செய்யும் முயற்சி வீணாகும். ஆதலால் காரிய சித்தியின் பொருட்டு இச்சாதனம் அவசியம் செய்யற்பாலதாம்.

இந்த ஆறு சாதனங்களையு மடைந்திருத்தலே சமாதி சட்க சம்பத்தியாம். (சமாதி சட்க சம்பத்தி=சமம் முதலாகிய ஆறின் அடைவு.)

**விவேகா:**—இந்த ஆறு சாதனங்களையும் தனித்தனியாக ஆறு சாதன்ங்க ளென்னாது ஒரே சாதனமாகக் கூறியதேன்?

**ஆத்மா:**—ஒரு மாலையில் பல மணிகள் கோக்கப்பட்டிருப்பினும் அது ஒரே மாலையாக எண்ணப்படுதல்போல, சமம் முதலிய ஆறும் ஒன்றை யொன்று அபேட்சிப்பதால் ஒரு சாதனமாகவே எண்ணப்படுகின்றன.

## (4) முமுட்சுத்துவம்.

சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷத்தை அடைய வேண்டு மென்னும் தீவிர இச்சையே முமுட்சுத்துவமாம்.

**விவேகா:**—நண்பா! பலனை விரும்பாமல் மூடனும் ஒரு காரியத்தில் பிரவேசிக்கமாட்டா னன்றோ? மோக்ஷா

பேக்ஷை யின்றேல் முதற்சாதனமாகிய நிஷ்காம கர்மத்தை ஒருவனும் இச்சியான். ஆதலால் முமுக்ஷுத்துவம் முதற்சாதனமாக விருத்தல் வேண்டுமே!

ஆத்மா:—உண்மையே. ஆனால்; அது அப்போது மந்த இச்சையாயிருக்கும்; தீவிரமா யிராது. மற்றைய சாதனங்கள் சித்தித்த பின் அஃது தீவிரமாகிறது. அத்தீவிர இச்சையே முமுட்சுத்துவம் எனப்படும். மந்த முமுட்சத்துவமே பரிபாக தசையில் தீவிரமாம்.

விவேகா:—தீவிர முமுட்சுத்துவம் எவ்வாறிருக்கும்?

ஆத்மா:—மிக்க பசியால் வருந்துவோன் அன்னத்தி னிடத்தில் விருப்பங்கொண் டிருத்தல் போலவும், வெப்பத்தால் தகிக்கப்பட்டவன் பிறர் தூண்டுத லின்றியே குளிர்ந்த நீரைத் தேடுதல் போலவும் மோட்சத்தில் உள்ள இச்சையே தீவிர இச்சையாகிய முமுட்சுத்துவமாம்.

## சீடன் விதிப்படி சரணமடைதல்.

விவேகா:—இந்த அதிகாரி என்ன செய்யவேண்டும்?

ஆத்மா:—சாதன சதுஷ்டய சம்பன்னனான அதிகாரி தாபத்திரயங்களைச் சகிக்க முடியாதவனாய், பிறவியைப்போக்கி ஆனந்தப் பேற்றை அடைவது எப்போதோ? ஞானசாரியரைக் கண்டு குற்றேவல் புரிந்து அவரருளைப் பெறுவ தெப்போதோ வென்று துரிதப்படும் மனமுடையவனாய், ஈஷணாத்திரயங்களி னின்றும் வேடர் வலையிலிருந்து தப்பியோடும் மான்போல ஓடி, ஞான சற்குருவைத் தேடியடைந்து, பத்திர புஷ்பாதிகளால் அவரது திருவடிகளைப் பூசித்து

"சைதந்யம் சாஸ்வதம் சாந்தம்
வ்யோமாதீதம் நிரஞ்சநம்

நாத பிந்து களாதீதம்
தஸ்மைஸ்ரீ குரவே நமஃ'' என்று,

துதித்து, 'சுவாமி! குருநாதா! அடியேன் சம்சார துக்கத்தினால் மிகவும் வருத்தமுற்றிருக்கின்றேன். என்னுள்ளங் குளிரும்படி உண்மை நெறியைப் போதித்து அஞ்ஞானத்தைப் போக்க மெய்ஞ்ஞானத்தைத் தந்தருளல்வேண்டும்'' என்று பிரார்த்தித்தல் வேண்டும்.

## தாபத்திரயம்.

**விவேகா:**—தாபத்திரயங்களெவை?

**ஆத்மா:**—தாபத்திரயமெனின், மூவகைத் துன்பங்களாம். அவை: (1) அத்தியாத்ம தாபம். (2) அதிதெய்வ தாபம். (3) அதிபூத தாபம் என்பனவாம்.

(1) அத்தியாத்ம தாபம்:—தன்னுடலைப்பற்றி வரும் பசி தாகம் நோய் காமம் முதலியவற்றால் வருந் துன்பங்களாம்.

(2) அதிதெய்வ தாபம்:—சீதம் உஷ்ணம் மழை இடி முதலியவற்றால் வருந் துன்பங்களாம்.

(3) அதிபூத தாபம்:—பகைவர் கள்வர் விலங்குகள் முதலியவற்றால் வருந் துன்பங்களாம்.

## ஈஷணாத்திரயம்.

**விவேகா:**—ஈஷணாத் திரயங்களெவை?

**ஆத்மா:**—அவை மூவாசையாம். அவை பொன்னாசை பெண்ணாசை மகவாசை என்பனவாம்.

**விவேகா:**— ஆத்மாநந்தா! எனக்குச் சில சந்தேகங்கள் தோன்றுகின்றன. அவற்றையும் நிவிர்த்திசெய்தல் வேண்டும்.

## நண்பர் வீடு திரும்பல்.

ஆத்மா:—விவேகாநந்தா! சூரியன் மேற்கடலி லாழ்ந்தான். நாளைக்குப் பேசலாம். வா, செல்வோம்.

விவேகா:—(ஆத்மாநந்தனைக் கட்டித் தழுவிக் கண்களில் நீர் பெருக) அன்பனே! முதலில் ஏதோ ஒருவித எண்ணங்கொண் டிருந்தேன். நீ கூறிய அதிகாரியின் இலக்கணத்தைச் செவியுற்ற வளவில் என் எண்ணமெல்லாம் வீண் மனோராஜ்ஜியமாய் முடிந்தன. நான் எவ்வாறுய்வேன்? என் கதி என்ன? (என்று தேம்பித் தேம்பி யழத்தொடங்கினன்.)

ஆத்மா:—என்னருமை விவேகாநந்தா! உன்னெதிரில் சொல்லுதல் கூடாது. சொன்னல் முகஸ்துதியாம். 'நேசனைக் காணுவிடத்து நெஞ்சாரத் துதித்தல்' வேண்டுமென்பர் பெரியோர். நேற்று இன்றல்லவே, உன்னை வெகு காலமாக அறிவேனே! உத்தம அதிகாரியன்றோ நீ! ஈசுவர கடாக்ஷம் உன்னிடத்தில் பரிபூரணமா யிருக்கின்றது. நீ நல்ல குரு புத்திரனுகவும் சிறந்த ஞானமுடைய சீவன் முக்தனுகவும் விளங்கப்போகின்றனை; சமுசயமில்லை; வா, போவோம். நாளைக்காலையில் உன்னைச் சுவாமிகளிட மழைத்துச் செல்கிறேன்.

இவ்வாறு தேற்றியவளவில் விவேகாநந்தன் பெருமகிழ்ச்சி யடைந்தான். இருவரும் கடற்கரையினின்று புறப்பட்டுத் தங்கள் வீடுநோக்கிச் செல்வாராயினர். அவ்வாறு செல்லும்போது,

விவேகா:—என்ன ஆத்மாநந்தா! அநேக வேதாந்த நூல்களைப் படித்தவர்களாயும் துறவிகளாயு மிருப்போரிற் பலர் நீ சொன்னதுபோலவே "பிரஹ்மம் ஒன்றே நித்தியம்; தேகாதி வடிவப் பிரபஞ்சம் அநித்தியம்'

என்று கூறுகின்றனர். ஆனால், அவர்களது நடையைக் கவனிக்குமிடத்து மிக்க கோணலா யிருக்கின்றதே. அவர்கள் ஞானமுடையவ ரல்லரோ?

ஆத்மா:—உன் கேள்வி யுக்தமானதே. சிலர் விலை மலிவாகக் கிடைக்கும் வேதாந்த நூல்களைப் படித்து விஷயங்களை நன்குணர்ந்தவராயும் பிறரோடு வாதிட்டு வெல்லக் கூடியவராயு மிருப்பர். அவர்கள் அவ்வாறு படித்தற்குக் காரணம் பணம் கௌரவம் முதலியவற்றிற் கொண்டுள்ள விருப்பமே யன்றிப் பிறிதன்று. வேறு சிலர் இவ்வாறே ஜீவனோபாய முதலியவற்றி னிமித்தம் ஒருவரிடத்திற் சென்று உபதேசம்பெற்றுக் காவிதரித்தும், வேதாந்தம் பேசியும் பிரசங்கித்தும் திரிந்தும் அனேக தீய காரியங்களைச் செய்துகொண்டு மிருப்பர். இவர்கள் உண்மையில் மோட்ச விருப்புடையவர்க ளல்லர். தவிர, முக்கிய காரணம் சாதனமில்லாமையே யெனல் பொருந்தும்.

நிஷ்காம கர்ம உபாசனைகளைச் செய்து அவற்றின் மூலமாக அவர்களது அந்தக்காணம் சுத்தமடையவில்லை. அதனால் மிக மலினமா யிருக்கின்றது. ஆதலால் முமுட்சுவானவன் சித்தசுத்தி பூர்வகமாக விவேகத்தைச் சம்பாதித்தல் வேண்டும். சித்தசுத்தியினின் றுண்டாகிய விவேகமே வைராக்கியத்தை யுண்டாக்கும். அந்த வைராக்கியம் ஷட்சம்பத்திக்குக் காரணமாம். பின்பின் சாதனங்களுக்கு முன்முன் சாதனங்கள் நிமித்த காரணமாம். இதனால் சுத்த அந்தக்கரணம் எல்லாவற்றிற்கும் முதற்காரணமா யிருக்கின்றது. வாசாகயிங்கரிய வேதாந்திகளே உலகிற் பெருகிவிட்டனர். இது பற்றியே யன்றோ "திரிவித வுலகத் தரிதொரு ஞானி" என்றனர் ஆன்றோர். ஆகையால், சாதனங்களை நன்றாய்ச் சம்பாதித்தல்வேண்டும். பிரயத்தன பூர்வகமாய்த் தூக்

குணங்களை யொழித்தல் வாயிலாகச் சித்த சுத்தியை யெய்துதல்வேண்டும். சாதனமில்லாதார்க்கு ஞானமுண்டாகாது என்பதுபற்றிக் கைவல்ய நவநீதம் "சாதனமின்றி யொன்றைச் சாதிப்பா ருலகிலில்லை, ஆதலா லிந்த நான்கு (சாதனம்) மடைந்தவர்க்கு அறிவு (ஞானம்) உண்டாகும்" எனக் கூறுகின்றது.

விவேகா:—மெய்ஞ்ஞானிக ளெவ்வா றிருப்பர்?

## நண்பர் பிரிவு.

ஆத்மா:—(இதற்குள் வீடு சமீபித்துவிட்டமையின்) விவேகாநந்தா! நாளையதினம் மற்ற விஷயங்களைப் பேசலாம். நீ வீட்டிற்குப் போ.

விவேகா:—சுவாமிகளிட மழைத்துப் போவதாகச் சொல்லினையே; மறந்து விட்டாயா? அல்லது நானே கேட்க வேண்டுமென் றிருந்தாயா?

ஆத்மா:—ஆம் ஆம். மறந்துபோனேன். ஆனால் நாளைக்காலையில் செல்லலாமா?

விவேகா:—ஆத்மாநந்தா! இன்னம் சில சந்தேகங்க ளிருக்கின்றன. அவற்றை உன்னைக்கேட்டே தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஆகையால் நாளைகழித்து மறுநாள் செல்லலாமே.

ஆத்மா:—சரி, நல்லது. அப்படியே செய்வோம். நாளை மாலை நான்கு மணிக்கு நேராய் கடற்கரைக்கே வந்துவிடுகிறேன். நீயும் அவ்விடத்திற்கு வந்துவிடு. போய் வருகிறாயா? நான் இப்படியே போகிறேன்.

விவேகா:—நல்லது. போய்வா. வந்தனம். (இருவரும் பிரிதல்.)

## விவேகாநந்தன் மனக்குழப்பம்.

அன்றிரவு விவேகாநந்தன் மனம் பெருங் குழப்பத்தை யடைந்திருந்தது. அவன் உணவும் சரியாய் உட்கொள்ள வில்லை. நெடுநேரம் நித்திரையின்றிப் படுக்கையிற் புரண்டு கொண்டிருந்தான். அநேக சந்தேகங்கள் அவன் மனத்திற் றோன்றின. அவற்றை ஆத்மாநந்தனிடம்கூறி நிவிர்த்தி செய்துகொள்ள வேண்டுமென் றெண்ணினான். அன்றிரவு அவன் சரியாய்த் தூங்கவில்லையென்றே சொல்லலாம். மறு நாள் தான் செய்யவேண்டிய வீட்டுக்காரியங்களை யெல்லாம் விரைவிற் செய்து முடித்து மாலை மூன்றுமணிக்கே வீட்டை விட்டுப் புறப்பட்டுக் கடற்கரை சேர்ந்து ஆத்மாநந்தன் வரவை எதிர்பார்த்த வண்ண மிருந்தான். சரியாய் நான்கு மணிக்கு ஆத்மாநந்தனும் வந்து சேர்ந்தான்.

## மூன்றும் நாள் கடற்கரைச் சம்பாஷணை.

ஆத்மா:—எவ்வளவு நேரமாயிற்று நீ வந்து?

விவேகா:—இப்போதுதான் வந்தேன்.

ஆத்மா:—நேற்று கடைசியாக என்ன கேட்டாய்?

விவேகா:—மெய்ஞ்ஞானிக ளெவ்வா றிருப்பர்?

ஆத்மா:—ஞானிகள் "சர்வம் மித்தை; சர்வம் பிரஹ்மம்; சர்வம் நான்" என்றுள்ளவாறுணர்ந்த ஜீவன் முக்தர்களாகவும், செய்யவேண்டியவை அனைத்தையும் செய்து அடையவேண்டியவை யனைத்தையும் அடைந்த கிருத கிருத்தியர்களாகவு மிருத்தலின் எப்பொருளி னிடத்தும் பற்றின்றியும், காமக்குரோதாதி துர்க்குணங்க ளற்றவராயுமிருப்பர்.

"அடக்கமா யுரைத்தே மலைதறிந் தவர்க்கு
மறிவிலா தவர்க்குநற் குறிகள்

தொடக்கமில் சன்மாத் திரமதா மறிவின்
சொரூபநின் ரசைவிலா தவரே
விடற்கருங் காம மூதற்பகை கடந்தோர்.
மெய்யறி விலார்கடப் பரியோர்."

என்று வாசிட்டம் கூறுகிறபடி விராகமே அவர்கள் சின்ன (அடையாள) மாம்.

## ஞானிகளி னுலக வியவகாரம்.

விவேகா:—ஞானிகள் உலக வியவகார விஷயங்களி லெவ்வா றிருப்பர்?

ஆத்மா:—காகத்தையும் குயிலையும் உருவத்தா லறியாமல் குறலினு லறிவதுபோல, ஞானியையும் அஞ்ஞானி யையும் அவர்களது செயல்களா லறியவேண்டுமே யன்றி வேடம் முதலியவற்று லறியமுடியாது. ஆதலால், ஞானி உலக வியவகாரங்களில் அஞ் ஞானிகளைப் போலவே காணப்படுவர். மனைவி மக்களு டன் கூடி வாழும் கிருகஸ்தராயு மிருப்பர். வேளாண் மை, வியாபாரம் கைத்தொழில் முதலியவற்றையும் செய்வர். இவ்வாறு தங்கள் பிராரப்த கர்மானுசாரமா கப் பலவிதங்களா யிருப்பர். மேலும்,

"ஈனமிலாச் சமாதியினி லிருமையின்றி யேகபரி பூரணமா
யிருப்போ னகி
யூனமிலாச் சமாதிபிரிந் திருக்குங்கால யுலகத்தி லுதாசீன
விருத்தி மேவி
மானமவ மானமுத லெவையுமின்றி மைத்திரியே முதலான
குணநி றைந்து
தீனமுருக் கெம்பீர சுபாவ மாகி" இருப்பன்.

என்று, ரிபுகீதை கூறுகிறபடி, ஞானிகள் உலக வியவகார காலங்களில்

(1) மைத்திரி (யாவரிடத்தும் நட்புடையோரா யிருத்தல்.)

(2) கருணை (யாவரிடத்தும் கருணை யுடையோரா யிருத்தல்.)

(3) முதிதை (புண்ணியாதிகாரிக ளிடத்துச் சந்தோஷங் கொள்ளல்.)

(4) உபேட்சை (பாவிகளிடத்து விருப்பு வெறுப் பின்றி யிருத்தல்.) என்னும் நான்கு குணங்களையு முடையோரா யிருப்பர்.

## ஞானிக்கு மஞ்ஞானிக்கு முள்ள பேதம்.

**விவேகா:**—அங்ஙனமாயின் ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பேதமென்னை?

**ஆத்மா:**—ஞானி கை கால் கண் முதலிய அவயவங்கள் தத் தமக்குரிய காரியங்களைச் செய்துகொண் டிருப்பினும், 'இவை என் காரியங்களன்று; நான் அகர்த்தா; விஷ யங்களா லுண்டாகும் சுக துக்கங்கள் எனக்கில்லை; அவை அந்தக்கரண தர்மம், ஆகையால் நான் அபோக் தா; அசங்கன்' என்னும் நிட நிச்சய முடையோரா யிருப்பர். அதனால், மகிழ்ச்சி வாட்டமற் றிருப்பர். அவர் சில சமயங்களில், களிப்பதுபோலவும் துக்கிப் பதுபோலவும் இருப்பினும் அவரது செய்கை தன் எதார்த்த நிலையை மறவாது அழுவதும் நகைப்பதுமா யிருக்கும் வேடதாரியின் செய்கையை நிகர்த்திருக் கும். பூல காலப் பழக்கத்தால் காமம் கோபம் முதலி யவை யுண்டாயினும் சுக துக்காதிகள் தோன்றினும் அவற்றை அவரது மெய்யுணர்வு அழித்துவிடும்.

அஞ்ஞானி இந்திரிய வியாபாரங்களைத் தன் வியாபார மென் றெண்ணிக்கொண் டிருப்பதால் விஷயங்களில் பற்

றும் அவற்றின் காரணமாகக் காமக்குரோதாதிகளும் உடை
யவனாயிருப்பன். அதனால் சம்சாரக் கடலிலாழ்ந்து சங்க
டப்படுகிறான். இதுவே ஞானிக்கும் அஞ்ஞானிக்குமுள்ள
பேதம்.

**விவேகா:**—ஒருவன் கர்மத்தின்பேரைச் சொல்லிக்கொண்
டும், 'இந்திரியங்கள் தம் சுபாவப்படி தத்தம் காரியங்
களைச் செய்கின்றன; நான் ஒன்றும் செய்யவில்லை'
எனக் கூறிக்கொண்டும் எந்தக் காரியத்தையும் செய்ய
லாமோ?

**ஆத்மா:**—விவேகானந்தா! நல்ல கேள்வியே கேட்டனை.
இஃது அத்தியாவசியமாக அறியத்தக்க விஷயமே
யாம். பிரஹ்ம சாட்சாத்காரத்தை யடைந்து தன்மய
மாக விளங்கும் ஞானி, முதலில் நிஷ்காம கர்மம் உபா
சனை இவற்றின் மூலமாய்ச் சித்தசுத்தி யெய்தப்
பெற்று, அதன் பின்னர் நித்தியாநித்திய வஸ்து விவே
கத்தை யடைந்து, அதன் மூலமாய் இகலோக பர
லோக போகங்களில் இச்சையற்று, அவ்விச்சையின்
காரணமாய் விஷயங்களி லோடியுழலும் மனத்தையும்
இந்திரியங்களையும் அங்ஙனம் செல்லாவாறு தடுத்த
லாகிய சமதமாதிகளை யெய்தி, ஈஷணாத்திரயங்களாலுண்
டாந் துன்பத்திற் கஞ்சி யோடி, ஞானோபதேசம் பெற்
று, ஆத்மானுசந்தானமாகிய சமாதி யப்பியாசத்தால்
மனதின் ரஜோகுண தமோகுணங்களை யொழித்தல்
வாயிலாக மனமிறந்தவனாய் பிரஹ்ம சொரூபனாய் விள
ங்குவோனாகலின், அவனிடத்துத் தீய வெண்ணங்க
ளும் தீயகாரியங்களும் எங்ஙனமுண்டாம்? சகலேந்திரி
யங்களையும் ஜெயித்தவனன்றோ அவன்? திடதத்வஞா
னத்தினால் 'தேகத் தன்னலனாகி அகர்த்தனாகி சீவனின்றிச்
சிவமாகித் தெளிந்த முக்தனாகி' விளங்கு மவனிடத்து

ஜீவச் செயல்களாகிய காமக்குரோதாதிக ளுண்டா மோ? 'இந்த ஜீவனால் வரு மறு பகையெலாம் இவன் செயல்' என்று கைவல்யம் கூறுவதை யுற்று நோக்கு வோர்க்கு காமக்குரோதாதிகள் ஜீவச்செயல்க ளென் பது விளங்காமற்போகாது. மூடரும் செய்யத்தகா தவை என்று ஒப்பும் நிஷேத கர்மங்களாகிய 'காதல் கவருடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்' முதலிய தீய காரியங்களை ஆத்மஞானி எவ்வாறு செய்யத்துணி வான்? துணியான், துணியான்.

சில வாசா கயிங்கரிய வேதாந்திகளே உலகினரை ஏமாற்றுதற் பொருட்டுத் தீய காரியங்களைச் செய்வதும், யாராவது 'இப்படியும் செய்யலாமோ ?' என்று கேட்டால், 'யானு செய்தேன் ? செய்தோன் யார் ? நான் அகர்த்தா வன்றோ ?' என்றும், 'இது பிராரப்தம், யான் என்ன செய் வேன் ?' என்றும் கூறித் திரிவர். ஓர் கள்வனு மிவ்வாறு கூறலாமன்றோ ? இத்தகைய வேதாந்திகள் உலகத்தில் மலிந்திருப்பது எக்காலத்தும் இயல்பாம். நாம் அவற்றைக் கவனிப்பது அநாவசியமாம்.

**விவேகா:**—ஆயின், அவர் தம் பிராரப்தம் என்பதுதான் யாது ?

**ஆத்மா:**—சன்மார்க்க நெறியிற் றவறு தொழுகுங்கா லுண் டாம் சுகம் துக்கம் முதலாய துவந்துவமே பிராரப்த மாம். இஷ்டப்படி செய்வது பிராரப்த மன்று. மாண் டவிய முனிவர் தவஞ் செய்துகொண் டிருக்கையில் அவரைக் கள்வனென்று பிடித்துக் கழுவேற்றினார்; இது பிராரப்தப் பயன். பட்டினத்தடிகள் விநாயக ராலயத்தில் நிஷ்டையி லிருக்கும்பொழுது அரச சேவ கர் அவரைக் கள்வனென்று அரச சமுகத்தில் அழைத்

துச் செல்ல மன்னவ னவரை யடிப்பித்துக் கழுவி லேற்றுவிக்க உத்தரவிட்டான்; இது பிராரப்தப் பயன். ஒருவன் மிக்க விராக முள்ளவனுயினும் தன்னை யடுத் துள்ள மனைவி மக்களை விட முடியாமல் கிருகஸ்தனு யிருக்கிறுன்; இது பிராரப்தப் பயன். ஒரு ஞானியை உலகத்தார் பக்தியோடு வணங்கி அவருக்கு வேண்டிய சிறப்புகளைச் செய்கின்றனர்; இது பிராரப்தப் பயன். மற்றொரு ஞானியை அவர் மெய்ஞ்ஞானி யென்றறிந் தாலும் அளவளவு சிறப்பாகக் கொண்டாடுவதில்லை; இது பிராரப்தப் பயன்.

இவ்வாறு பிராரப்தத்தின் தன்மையை அறிதல் வேண் டும்.

## கர்மத்திரயம்.

**விவேகா:**—கர்மம் எத்தனை வகைப்படும்?

**ஆத்மா:**—(1) சஞ்சிதம், (2) ஆகாமியம், (3) பிராரப்தம் என மூவகைப்படும். இவற்றுள்,

(1) சஞ்சிதம் :—கடந்த பிறவிகளிற் செய்யப்பட்ட தாய்ப் பலனைத் தாாமலிருக்கும் கர்மமாம்.

(2) ஆகாமியம்:—இந்த வர்த்தமான (தற்கால) ஜன்மத் திற் செய்யப்படுவதாய் எதிர்காலத்துப் பயன் தருவதாயுள்ள கர்மமாம்.

(3) பிராரப்தம்:— முற்பிறவியில் செய்யப்பட்டு இவ் வர்த்தமான பிறவியில் நேரும் நன்மை தீமைகளுக்குக் காரணமா யிருக்கும் கர்மமாம்.

## ஞானியும் கர்மமும்.

**விவேகா:**—ஞானிக்கும் கர்மமுண்டோ? அவை எங்ஙனம் நீங்கும்?

ஆத்மா:—"பஞ்சினை யூழித் தீப்போல் பலசன்ம விவித வித்தாஞ்
சஞ்சித மெல்லாம் ஞானத் தழல்சுட்டு வெண்ணீறாக்கும்
கிஞ்சிதா காமி யந்தான் கிட்டாமல் விட்டுப் போகும்
விஞ்சின பிராரத் தத்தின் வினையனு பவித்துத் தீரும்."

என்று கைவல்யம் கூறுமாறு, ஞானிக்கு

(1) சஞ்சித கர்மம்: ஞானக்கினியால் நசித்துப்போகிறது.

(2) ஆகாமிய கர்மம்: ஆத்மாவில் கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தியில்லாமையால் சம்பவிப்பதில்லை.

(3) பிராரப்தகர்மம்: அனுபவத்தால் தொலையும்.

இந்தப் பிராரப்த கர்மபேதத்தால் ஞானிகளும் பலதிறப் பட்டிருப்பர்.

## பிராரப்த பேதம்.

சிலர் ஜனன முதல் மரணம் வரையில் பிரவிர்த்தி யுடையரா யிருப்பர். சிலர் நிவிர்த்தி யுடையரா யிருப்பர். சிலர் ஆரம்பத்தில் பிரவிர்த்தியுடையராயும் பின்னர் நிவிர்த்தி யுடையராயு மிருப்பர்.

"பேதகர் மத்தால் வந்த பிராரப்தம் நாநாவாகும்
ஆதலால் விவகா ரங்கள் அவரவர்க் காவவாகும்
மாதவஞ் செயினுஞ் செய்வர் வாணிபம் செயினுஞ் செய்வர்
பூதலம் புரப்ப ரையம் புகுந்துண்பர் சீவன் முத்தர்."

என்று கைவல்ய நவநீதம் கூறுவதறிக.

எனினும், ஞானிகள் எவ்வகைப் பிராரப்தத்தை யனுபவித்தாலும் சாட்சி மாத்திரமா யிருப்பரன்றி சாட்சியமாக விரார். 'நான், கர்த்தா போக்தா வன்று' என்னு முணர்வுடையோராகலின், அப்பிராரப்தத்தைப் புசிப்போராயினும் அவர்கள் புசியாதவர்களே யாவர். அதனால் அவர்களுக்குப் பிராரப்தம் இல்லை யென்றும் கூறலாம்.

## இல்லறச் சிறப்பு.

**விவேகா:**—ஞானிகள் துறவிகளா யிருத்தல் வேண்டு மென்னும் நியம மில்லையோ ?

**ஆத்மா:**—ஞானிகள் துறவிகளா யிருக்கவேண்டிய அவசியமின்று. பிரஹ்மசாரி வானப்பிரஸ்தன் சன்யாசி என்னும் மூன்று ஆச்சிரமத்தாரையும் அன்ன வஸ்திராதிகளளித்துக் காக்கவேண்டியவர்களாகிய கிருகஸ்தராயுமிருக்கலாம். அன்றியும், பொய் கூறாமை, கள்ளாமை, சினமின்மை, நல்லொழுக்கம், இந்திரிய நிக்கிரகம், மனோநிக்கிரகம், சந்தோஷம், அபகாரம் செய்தோர்க்கும் உபகாரமே செய்தல், வேதாந்த சாஸ்திர ஞானம், ஆத்ம ஞானம் என்னும் இப்பத்துக் குணங்களையுமுடையோரே மோட்சத்திற் கருகராவர். ஆகலின் இவற்றைக் கைக்கொண்டிருப்பின் கிருகஸ்தரும் முத்தியடையத் தடையில்லை. இக் குணங்களைப் பெறாமல் மனைவி மக்களைவிட்டுக் காஷாயம் பூண்டு துறவியாய் விடுவதால் மாத்திரம் பயனில்லை.

## சன்யாச லட்சணம்.

**விவேகா:**—ஆயின், சன்யாசி யார்?

**ஆத்மா:**—மனைவி மக்களே சம்சார மெனவும், அவற்றையுடையோரே சம்சாரிகள் (கிரகஸ்தர்) எனவும், அவற்றை விட்டுச் செல்லுதலே சன்யாச மெனவும் பலர் நினைக்கின்றனர். இது அறியாமையாகும். உண்மையில் மனோ மய சங்கற்பமே சம்சாரம்; அதனையொழித்தலே சன்யாசமாம். அகண்ட சச்சிதானந்த சொரூபமாகிய தனது ஆத்மாவினிடத்து மனம் அசையாது நிற்க, பிரபஞ்ச வியாபாரங்களில் பற்றற்றிருத்தலே சன்யாசமாம். ஆதலால், 'நான், எனது' என்னும் செருக்கு

மறந்தும் அணுகாதிருக்க 'பிரஹ்மம் ஒன்றே சத்தியமா யுள்ளது; அதற்கன்னியமாக (இரண்டாவதாக)ப் பிறிதொரு பொருளின்று; அத்தகைய பரப்பிரஹ்மம் எனது நிஜ வடிவாயிருக்கின்ற தாகலின், பிரஹ்மமே நான், நானே பிரஹ்மம்' என்னும் திடநிச்சயமுடையவராய் அறிவாகாரமாய் இருப்போரே சன்யாசியாவர். அவரே சீவன் முக்தர். அவரே சிவஞானயோகி. அவரே பிராமணர். அவரே பரமஹம்சர்.

## பிராஹ்மண லட்சணம்.

**விவேகா:—** சாதாரணமாக பிராம்மணர்களெனக் கூறப்படும் ஒரு ஜாதியாரே உயர்ந்தோரென்றும் அவர்களே மோட்சத்திற் குரியவர்க ளென்றும் சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்; அதன் உண்மை என்ன?

**ஆத்மா:—**பிராஹ்மணன் என்னும் பதத்திற்குப் 'பிரஹ்மத்தை யறிந்தவன்' என்பது பொருளாம். ஆதலால் பிரஹ்மத்தை யறிந்தவனெவனோ அவன் பிராஹ்மணனும். பிராஹ்மணத் தன்மை ஜாதியிலில்லை. ஒருவன் எந்த ஜாதியானாயினும் பிரஹ்மத்தை யறிந்தவனாயின் அவன் பிராஹ்மணனே யாவன். ஓர் முத்துமாலையில் ஒவ்வொரு முத்தினுள்ளும் இருக்கின்ற நூல் (சூத்திரம்) போல, ஒவ்வொரு ஜீவனிலும் இருதயந்தோறும் வியாபித்திருக்கும் பிரஹ்மமாகிய நூலை (சூத்திரத்தை) அணிந்து பிரஹ்மானுசந்தானம் (நான் பிரஹ்மமென்னும் பாவனை: தத்துவானுசந்தானம் என்னப்படுவதும் இதுவேயாம்) செய்பவனே பிராஹ்மணன். இத்தகைய பிராஹ்மணத் தன்மையை யடைய ஒவ்வொருவரும் முயலுதல் வேண்டும். அந்தப் பிராஹ்மணன் மோட்சத்திற்குரியவனென்பதிற் சிறிதும் ஐயமின்றாம்.

இங்ஙனமின்றி, வேதஞ் சிறிது மறியாதவன் வேதிய னென்றும், சாஸ்திரஞ் சற்று மறியாதவன் சாஸ்திரியென் றும், பிரஹ்மத்தை யறியாதவன் பிராஹ்மண னென்றும், யாகமென்பது இன்னதென் றறியாதவன் தீட்சிதனென் றும், ஆசாரியத் தன்மையை யணுவளவு மறியாதவன் ஆசா ரிய னென்றும் பெயர்கள் வைத்துக்கொண் டிருத்தல், மூடன் ஞானப்பிரகாச னென்றும், குருடி பங்கஜாக்ஷியென் றும், நித்திய தரித்திரன் செல்வராஜனென்றும் பெயர்கள் வைத்துக்கொண் டிருப்பதற் கொப்பாம். மேலும்,

ஜீவப் பிரஹ்மைக்கிய மென்னும் ஞானநிஷ்டையில் தவறாதிருத்தலே சந்தியாவந்தனமாம். ஆத்மாவே பிரஹ்ம மாமெனப் போதிக்கும் சோகம் (சஃ அகம்) பாவனை யென் னும் தியானமே ஞான காயத்திரி மகாமந்திரமாம். அதுவே அஜபா காயத்திரி யெனப்படும். இத்தகைய யக்ஞோபவீத (பூணூல்) சந்தியாவந்தன காயத்திரி ஜபங்களை யுடையவ னெவனோ அவனே பிராஹ்மணனாம்.

## ஜீவன் முக்தி விதேக முக்தி லட்சணம்.

விவேகா:—ஆத்மானந்தா! உன்னை அடிக்கடி தொந்தரை செய்வதற்காக என்னை மன்னிக்கவேண்டும். ஜீவன் முக்தியென்றும் ஜீவன் முக்தர் என்றும் பன்முறை கூறுகின்றனை. முக்தி யென்பது ஒன்றே யன்றோ? அங்ஙனமாக ஜீவன் முக்தியென்பது யாது? இஃதே யன்றி வேறு முக்தியுமுண்டோ?

ஆத்மா:—விவேகானந்தா!

"செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்." என்றார் நாயனார்.

ஆதலின் இத்தகைய சம்பாஷணை செய்வதினும் சிறந்தது வேறு யாதுளது! நீ சிறிதும் மனங்கூசாது கேட்க வேண்டியவற்றைக் கேள்.

முக்தி ஒன்றே. ஆனால் அது எங்கோ ஓரிடத்திலிருப்பதன்று. ஜீவன் சரீரத்தை விட்டபின் (மரணத்திற்குப் பிறகு) அடையப்படுவதுமல்ல. சரீரத்தோடு கூடியிருக்கும் ஜீவநிலையிலேயே உள்ளங்கை நெல்லிக்கனிபோலப் பெரியோரால் அனுபவிக்கப்படுவதாம். அப்பொழுது அது சீவன் முக்தியெனப்படும். சரீரம் விட்டபிறகு அடையப்படுவது விதேக முக்தியாம்.

விவேகா:—சீவன் முக்தி விதேக முக்தியின் இலக்கணங்களை விளக்கவேண்டும்.

ஆத்மா: (1) சீவன்முக்தி:— 'அகம் பிரமாஸ்மி' என்னும் ஞானத்தால் துவித பிராந்தியின் நீக்கமும் அகண்ட ஏகரச ஆனந்தத்தின் ஸ்பூர்த்தியுமே (விளக்கமுமே) முக்தியாம். கேள்வி முதலியவற்றால் பிரஹ்மஞானமுடைய உள்ளத்துறவுடையோனுக்கு ஜீவித காலத்தில் கர்த்தாத் தன்மை போக்தாத் தன்மை முதலிய பந்தத் தோற்றத்தின் நீக்கமெதுவோ அது சீவன் முக்தியாம்.

(2) விதேகமுத்தியாவது:—

"கடமெனு முபாதி போனற் ககனமொன் றானற் போல
வுடலெனு முபாதி போன வுத்தமஞ் சீவன் முத்த
ரடிமுடி நடுவு மின்றி யகம்புற மின்றி நின்ற
படிதிகழ் விதேக முத்திப் பதமடைந் திருப்ப ரென்றும்."

என்று கைவல்லிய நவநீதத்தில் சொல்லப்பட்டவாறு, கடமாகிய உபாதி நசித்த மாத்திரத்தில் கடாகாயம் மகாகாயத்தோடொன்றுதல்போல, சீவன் முக்தர் தமது உபா

நியாகிய தேகம் நசித்த வக்கணத்திலே, தமது ஆத்மாவின் வேருகாத அகண்ட பரிபூரண சச்சிதானந்தத்தோடபேதமாகக் கலந்து ஏகாகாரமாக விளங்குதலே விதேக முக்தியாம்.

## வைகுண்டாதி யுலகங்கள்.

**விவேகா:**—வைகுண்டம் கைலாசம் முதலிய உலகங்கள் மோட்ச வுலகங்களன்ருே? அவைகள் எங்கோ ஓரிடத்திலிருக்கின்றனவென் றன்ருே கூறப்படுகின்றன?

**ஆத்மா:**—எங்கோ வோரிடத்திருப்பனவாகக் கூறப்படும் வைகுண்டாதி யுலகங்கள் அவயவமுடையனவா யிருத்தல் வேண்டும். யாது யாது அவயவ முடையது அது அது அழியத்தக்கதாம் என்பது நியதி. ஆகையால் அவையும் அழியத்தக்கனவேயாம். அதனுல் அவை மோட்சங்களாகா. குண்டம் என்பது அழிவதற்காம்; அதாவது அஞ்ஞானமாம். வைகுண்டம் என்பது அழியாததற்காம்; அதாவது ஞானமாம். ஆகலின் ஞானுனுபவ நிலையே வைகுண்டமாம். அதுவே பரம பதமாம் (மேலான நிலையாம். பரம=மேலான; பதம்=நிலை.) கேளி என்பது ஆனந்தமாம். அதன் மிகுதி கைலமாம். எனவே, அகண்டானந்த பரிபூரண பிரஹ்ம நிஷ்டாஸ்தானமே கைலாசமாம். இவற்றையே சாமானியர்களுக்கு அவற்றினிடத்து விருப்ப முண்டாகும் பொருட்டுப் பலவகையாக வருணித்துப் புராணங்கள் கூறும் என்றறிக.

## நண்பர் பிரிவு.

அச்சமயம் பொழுதுபட்டு நெடுநேர மாயினமையின் நண்பர் இருவரும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டனர். சிறிது தூரம் சென்றதும், விவேகானந்தன் 'ஆத்மாநந்தா! நாளைக்

காலையில் சுவாமிகளிடம் போகலாமா?' என்றான். 'ஆ ஆ! தடையின்றிச் செல்லலாம். காலையில் வீட்டிற்கு வந்து உன்னை அழைத்துப் போகிறேன்.' எனக்கூறி விடைபெற்று வீடுநோக்கிச் சென்றான் ஆத்மானந்தன். விவேகானந்தனும் வீடு சேர்ந்தான்.

அன்றிரவு அவனுக்குச் சரியாய் நித்திரை வரவில்லை. அவனுள்ளத்தில் சந்தோஷம் ததும்பிக்கொண்டிருந்தது. விடியற்காலை நான்குமணி சுமாருக்குச் சிறிது கண்ணயர்ந்தான். தூக்கத்தில் தன் நண்பனுடன் சுவாமிகளிடஞ் சென்றதாகவும் உபதேசம் பெற்றதாகவும் தத்துவ விசாரஞ் செய்துகொண்டிருப்பதாகவும் கனவு கண்டான். திடுகிட்டு விழித்தான். உனது அஞ்ஞானமாகிய இருள் நீங்க ஞானசூரியன் உதயமாவான் எனக் காட்டுவான் போல, அவன் முகத்திற் கெதிரிலிருந்த சாளரத்தின் வழியாகச் சூரியன் தன் கிரணங்களை வீசிக்கொண்டு உதயமாவதைக் கண்டான். "ஓ! இரவு நெடுநேரம் வரை விழித்திருந்தமையால் அயர்ந்து தூங்கிவிட்டேன். ஆத்மானந்தன் வந்துவிடுவானே" எனக் கூறிக் கொண்டே எழுந்து பரபரப்புடன் காலைக் கடன்களை முடித்து நண்பன் வரவை வெகு ஆவலுடன் எதிர்பார்த்திருந்தான். மணி எட்டாயிற்று. ஆத்மானந்தன் வந்திலன். விவேகானந்தன் ஐயங் கொண்டான். "அவன் வருவதாகக் கூறியது வெறும் உபசார வார்த்தையாயிருக்குமோ?" வென்றெண்ணினான். ஆயினும் அவனை விடலாகாது. நானே வலியச் சென்று அவனை அழைத்துப் போகிறேன்" என்று அவன் வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

## குருவை நாடிச் செல்லல்.

சிறிது தூரஞ் சென்றதும் தேடப்போன மருந்து காலிற் றட்டுப்பட்டாற் போல, எதிரில் ஆத்மானந்தனைக் கண்டான்.

களி கூர்ந்தான். தன் காரியம் கை கூடிடு மென்பதற்கு இதுவே நல்ல அறிகுறியாமெனக் கொண்டான். அவன் சமீபித்ததும் வந்தனம் புரிந்து 'அன்ப! உன்னையே தேடிப் புறப்பட்டேன்' என்று கூறினன். ஆத்மாநந்தன் அவனைப் பார்த்து 'முன்னமே வந்திருப்பேன் வழியில் ஓர் நண்பனைச் சந்தித்தேன். அதனல் தாமதமாயிற்று. வா, செல்வோம்' எனக் கூற, இருவரும் சென்றனர். சென்றவர்கள் அவ்வூர்க் குப் புறம்பேயுள்ள ஓர் சோலைக்குள் பிரவேசித்தனர். அது பொழுது,

ஆத்மா:—'விவேகாநந்தா! அதோ பார். அக்குடிசை தான் நமது சின்மயானந்த சுவாமிகளின் வாசஸ்தானம்.நான் முதலிற் சென்று அவரைக் கண்டு உன் விஷயத்தைச் சொல்லி அனுமதி பெற்று வந்து உன்னை அழைத்துப் போகிறேன். நீ இங்கேதானே இரு. இதோ! இதை வைத்திரு' என்று ஒரு சிறு பொதியை அவனிட மீந்து 'பழமும் பூவும் வாங்கி வந்தேன். பெரியோரிடத்திற் குப் போகும்போது வெறுங்கையோடு போகலாகாது. சரி, நான் போய் வருகிறேன்' எனக் கூறிச் சென்று, தன் குருவைச் சேவித்துச் சாஷ்டாங்கமாகப் பணிந்து எதிரில் நின்முன்

குரு:—(அவனை ஆசீர்வதித்து) ஆத்மாநந்தா! உட்கார். ஏது! இவ்வளவு காலையில் வந்தாய்! ஏதேனும் விசேடமுண் டோ! என வினவ, ஆத்மாநந்தன் தன் அத்தியந்த நண்பனுகிய விவேகாநந்தன் சுவாமிகளின் தரிசனத் திற்காக வந்திருப்பதையும், மேலும், அவனுடைய குண விசேஷத்தையும் பரிபக்குவ நிலைமையையும் கூறினன்.

அவன் கூறியவற்றைச் செவியுற்ற சின்மயானந்த சுவாமிகள் விவேகாநந்தன் உத்தமாதிகாரியே யெனவும்,

உபதேசம் பெற்று வேதாந்த விசாரணை செய்யின் அதன் மூலமாக மிகுந்த திரவியம் சம்பாதிக்கலாம், நம்மை எல்லாரும் புகழ்ந்து கொண்டாடிக் கௌரவிப்பர் என்னு மித்தியாதி பயன்களை விரும்பி வந்தவனல்ல னெனவும், நம்மிடம் தத்துவார்த்தங்களை யறிந்துகொண்டு பிறகு நம்மையே தூஷிப்பதற்காக வஞ்சக எண்ணத்தோடு வந்தவனல்ல னெனவும், ஆகையால் அவன் உபதேசம் பெறுதற் குரியவனே யெனவு முணர்ந்து அவனை அழைத்து வருமாறு ஆத்மானந்தனுக்கு அனுமதி யளித்தனர்.

ஆத்மானந்தன் விரைந்தேகி 'சுவாமிகள் என்ன சொல்வாரோ? என்னை ஏற்றுக் கொள்வாரோ? அல்லது பாத்திரனல்லனென் றகற்றி விடுவாரோ?' வென்று பலவாறு சிந்தித்துத் தவித்துக்கொண்டிருக்கும் விவேகானந்தனை அழைத்துச் சென்று சுவாமிகளெதிரில் விட்டான். விவேகானந்தன் அவரைக் கண்டவளவில் களிப்பென்னுங் கடலு ளாழ்ந்து அவரடிகளில் முடிபட வணங்கி மலர்களைத் தூவி யருச்சித்து 'சுவாமி! தங்களை எவ்வாறு துதிப்பதென்றும் அறியேன் சிறியேன். தங்களையே தஞ்சமா யடைந்தேன். குருநாதா! ஜனன மரண சமுசார துன்பங்கள் அடியேனை யணுகாவண்ணம் காத்தருள்வேண்டும்' எனப் பிரார்த்தித்து நின்றான்.

## தீட்சாத் திரயம்.

அவ்வாறு நின்றவனைக் குருவானவர்

(1) ஆமையானது கரையிலுள்ள தன் முட்டை குஞ்சாக வேண்டுமென்று மனத்திற் பாவிப்பதுபோல, விவேகானந்தன் தன் சொரூபாவரணம் (மறைப்பு) நீங்கி சொரூப சாட்சாத்காரத்தை யெய்துதல் வேண்டுமென மனத்திற் பாவித்தும், (இது பாவனு தீட்சை)

(2) மீனனது தன் சினை (முட்டை) குஞ்சாகவேண்டுமென்று அச்சினையை நோக்குதல்போல, விவேகானந்தனது சஞ்சித வினைகள் கெடும்படி அனுபூதியோடு கூடிய தனது அருட்பார்வையால் நோக்கியும், (இது சட்சு தீட்சை)

(3) பறவையானது தன் முட்டை குஞ்சாகுமாறு அதனைத் தன் சிறகால் பரிசிப்பதுபோல, இவனுக்கு முடிவான ஆன்ம விசார முண்டாகவேண்டுமென்று தன் கரத்தை அவன் சிரத்தின்மீது வைத்தும் (இது ஹஸ்த தீட்சை)

அவனைத் தன்னருகி லழைத்து உட்காரச் செய்து 'அப்பா! விவேகாநந்தா! நீ எதை நாடி என்னிடம் வந்தாய்?' என வினவினர்.

**விவேகா:**—குரு மூர்த்தியே! ஜனன மரண வடிவ சமுசாரத்திற்கு மிகவும் பயப்படுகின்றேன். அப்பயத்தினின்று நீக்கிக் காப்பாற்றி யருளல்வேண்டும்.

**குரு:**—மைந்த! ஜனனம் மரணம் வியாதி முதலிய துக்கங்கள் உனக்கேது? நீ பிறப்பிறப் பற்றவன். துக்கமற்றவன். நீ உண்மையின் ஆனந்தத்தையே சொரூபமாகவுடையவன். இயற்கையில் உன்னிடத்தில் மனிதத் தன்மை யின்று. 'நான் மனிதன்' என்று நீ உன்னை யறியாமையால் பாவித்துக்கொண் டிருக்கின்றாய். அது பிராந்தியே (மயக்க அறிவே) யாம். அந்தப் பிராந்தியினால் பிறப்பு நரை திரை மூப்பு மரணம் முதலியனவும் அவற்றால் துக்கமும் காணப்படுகின்றன. அத்துக்கம் உண்மையாக உனக்கில்லை. பந்த மின்னது மோட்ச மின்னது என்று அவற்றின் தன்மைகளை யாராய்ந்தறியாமையால் இத்துக்கம் சம்பவித்தது. ஆகலின், அவற்றின் சொரூபத்தைக் கூறுகிறேன். கேள்.

## பந்த மோட்சங்கள்.

தன தெதார்த்த சொரூப மின்னதென் றறியாது 'நான் ஜனன மரணங்களை யுடையவன், நான் சம்சாரத்தாற் கட்டுண்டவன், காசாஞாதி அவயவங்களோடு கூடியவன், கர்மத்தாற் கட்டுண்டவன்' என்று பாவித்தலே பந்தமம். 'நான் அஞ்ஞானி, நான் துக்கி, நான் கர்த்தா (கர்மத்தைச் செய்கிறவன்), நான் போக்தா (போகத்தை யனுபவிக்கிற வன்)' என்றெண்ணுவதே பந்தமாம். 'நான் மனிதன், இன்ன சாதியான், இன்ன ஆச்சிரமத்தான்' என்றெண்ணு வதே பந்தமாம். 'நான் தாய் தந்தையரை யுடையவன், மனைவி மக்களையுடையவன், வீடு நிலங்களை யுடையவன், செல்வ முடையவன்' என்றெண்ணுவதே பந்தமாம். 'நான் அழகுள்ளவன், நான் குரூபி; நான் சமர்த்தன், நான் அச மர்த்தன்; நான் விவேகி, நான் அவிவேகி; நான் பண்டி தன், நான் மூடன்; நான் செல்வன், நான் வறியன்' என் னும் அபிமானமே பந்தமாம்.

மேற்சொன்னவா றெண்ணுதலாகிய சகல சங்கற்பங்க (எண்ணங்க)ளு மற்று 'நான் கருத்தா வன்று, நான் போக் தாவன்று, நான் துக்கியன்று, நான் சச்சிதானந்த வடிவி னன்' என்று தன தெதார்த்த சொரூபத்தை உள்ளவா றுணர்தலே முத்தியாம். நித்தியா நித்தியவஸ்து விவேகத் தால் 'பிரஹ்ம மொன்றே நித்தியம், தேகாதிப் பிரபஞ்சம் முழுதும் அநித்தியமும் துக்கமுமாம்' என்றறிந்து, தார புத் திராதி விஷயங்களிலுள்ள 'இது எனது, இது எனது' என் னும் அபிமானத்தையும், லோகவாசனை தேகவாசனை சாஸ் திரவாசனை என்னும் மூன்று வாசனைகளையும் நசியச்செய்து, சகல சங்கற்பங்களையு மொழித்து, மோன நிலை யென்னும் பிரஹ்மநிஷ்டையுற் றிருத்தலே மோக்ஷமாம். மனமானது

'அலையில்லாத சாகரம் (கடல்) போலவும், அநிலம் (காற்று) சேரா விளக்குப் போல'வும் அசைவற்றுப் பரப்பிரஹ்மத்தினிடத்தில் லயிக்கத், ததாகாரமாக விளங்குதலே முக்தியாம். அதுவே தவமுமாம்.

## வாசனாத் திரயம்.

விவேகா:—மூன்று வாசனைகளென்றீரே. அவற்றை விளக்க வேண்டும்.

குரு:—(1) உலகத்தார் என்னைக் கனம்பண்ண வேண்டும், புகழவேண்டும், ஒருவரும் என்னை இழிவாகக் கருதலாகாது, என்றிவ்வாறெண்ணுதல் லோகவாசனையாம்.
(2) சரீரத்தை யபிமானித்து இதை அழகாக வைத்திருத்தல் வேண்டும், நன்றாய்ப் போஷித்தல்வேண்டும் என்றெண்ணுதல் தேகவாசனையாம்.
(3) சகல சாஸ்திரங்களையும் கற்றல்வேண்டும், அவற்றின்பொருளைச் செவ்வனே யறிதல்வேண்டும் எனக் கருதுதல் சாஸ்திரவாசனையாம்.

விவேகா:—சுவாமி! தனது நிஜவடிவை மறந்ததே பந்தமென்றும், அதனை யறிதலே முக்தியென்றுங் கூறினீர்கள். இவ்வுண்மையை யறிவதெப்படி?

குரு:—ஆத்மா னாத்ம விசாரத்தா லறிதல்வேண்டும்.

விவேகா:—ஆத்மா னாத்ம விசாரமென்றாலென்ன?

குரு:—ஆத்மா அனாத்மாவென்னும் இவ் விரண்டு வஸ்துக்களின் லட்சணங்களை 'விசாரித்தறிதலாம்.

விவேகா:—கிருபாநிதி! அவற்றின் லட்சணங்களைக் கூறியருளல்வேண்டும்.

## ஆத்ம லட்சணம்.

குரு:—ஞானபுத்திரா! எல்லாச் சரீரங்களிலும், இதயமாகிய குகையில் வசித்துக்கொண்டும் 'நான் நான்' என்று

ஸ்புரித்துக்கொண்டு முள்ள கேவல ஞானாகார வஸ்து வே ஆத்மாவாம். எது அந்தக்காண விருத்தியுடன் கூடி நேத்திரேந்திரிய வாயிலாக எல்லா வஸ்துக்களையு மறிகின்றதோ, எது சுரோத்திரேந்திரியத்தின் மூலமா கச் சப்தங்களை யறிகின்றதோ, எது கிராணேந்திரியத் துவாரா வாசனையை யறிகின்றதோ, எது நாவின் மூல மாக சுவையை யறிகின்றதோ, எது வாக்கிந்திரியத்தின் வாயிலாக வசனிக்கின்றதோ, எது மற்றுமுள்ள சக லேந்திரியங்களின் மூலமாகவும் சகல விஷயங்களையு மறிகின்றதோ அது ஞானவடிவாயுள்ள ஆத்மாவாம். எது சகல வஸ்துக்களிலும் வியாபித்தும், சஜாதீயம் விஜாதீயம் சுவகதம் என்னும் மூவகைப் பேதங்களு மில்லாமலும், எல்லாம் தானாகவு மிருக்கின்றதோ அதுவே ஆத்மாவாம்.

அந்த ஆத்மா உற்பத்தி நாசமில்லாதது. சப்த பரிச ரூப ரச கந்தங்க ளில்லாதது. ஆகாசாதி பஞ்ச பூதங்க ளல் லாதது. ஆகாசத்தைப்போல வடிவ மில்லாதது. நிர்க்குண மாயுள்ளது. சர்வ பரிபூரணமானது. பரிசுத்தமானது. சுயம் பிரகாசமா யிருப்பது. சத்தாயும் சித்தாயும் ஆநந்த சொரூப மாயு மிருப்பது. மேலும்,

பிரஹ்மம் ஆத்மா என்னும் சப்தங்கள் மாத்திரம் பேத மாயிருக்கின்றனவே யன்றி, அவ்விரண்டு சப்தங்களின் அர்த்தங்களும் ஒரே வஸ்துவைத் தெரிவிப்பனவா மாகலின் 'பிரஹ்மமே ஆத்மா; ஆத்மாவே பிரஹ்மம்' என்றறியக் கடவாய்.

**விவேகா:**—சுவாமி! ஆத்ம வஸ்துவானது சகலேந்திரியங்க ளின் மூலமாகச் சகல விஷயங்களையு மறிகின்றதென் றது சரியே. ஆனால் சச்சிதானந்த வடிவமென்ப தெப் படி பொருந்தும்?

## (1) ஆத்மா சத்து.

குரு:—இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் முக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படாதது எதுவோ அது சத்தாம்: என்பது சத்தின் இலக்கணம். ஆத்மா முக்காலத்தும் அழியாதிருப்பது; ஆகலின் அது சத்தாம். எவ்வாறெனின்,

"சென்மாந் தரஞ்செய்த வினைகளுட றருமெனிற்
செல்கால மிவனுண் டலோ?
கன்மானு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற
காலத்து மிவனுண் டலோ?
உன்மாத யாதனு வுடல்கடவு ளுடன்மனுட
வுடன்மாறி மாறி யழியுந்
தன்மாய வுடல்கெடினு மிவனிருப் பதுகொண்டு
சத்தென்ப தொக்கு மகனே." (கைவல்லியம்)

எனப் பெரியார் கூறியவாறு, ஆத்மா கடந்த பிறவிகளிற் செய்த வினைக்கேற்பப் பிறவிகளை யடையு மென்பதனால் இறந்த காலத்தும், இப்பொழுது செய்துவரும் வினைக்கீடாகச் சொர்க்க நரகானுபவங்க ளுண்டாமென்பதனால் வருங்காலத்தும், இந்த வர்த்தமான (நிகழ்) காலத்தும் ஆக முக்காலத்தும் அழியாதிருப்பதாம் என்பது விளங்குகின்றதன்றோ? இதனால் ஆத்மா சத்தாம்.

## (2) ஆத்மா சித்து.

'அவத்தை யனைத்தினுமே, யுதித்த விடயங்களை நின்றறிந்திடுதல் சித்தாம்.'

என்கிறபடி, சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்றவத்தைகளினும் தோன்றும் விடயங்களை அறிவது சித்தாம்: அல்லது, பிரகாசரூபமான ஞானம் சித்தாம்: என்

பது சித்தின் இலக்கணமாம். ஆத்மா இம்மூவவத்தைகளை யும் அறிவதாயிருத்தலின் சித்தாம். எவ்வாறெனின்,

சாக்கிராவத்தையில் சுகதுக்கங்களை யனுபவித்தலும் சொப்பனத்தில் சுகதுக்கங்களை யனுபவித்தலும் சுழுத்தியில் தாம் சுகவடிவாயிருந்த அனுபவத்தை விழித்தபின் 'நான் சுகமாய்த் தூங்கினேன்' எனப் பிறர்க்குக் கூறுதலும் ஒவ்வொருவருக்கும் அனுபவசித்தமாம். அவ்வாறு மூன்றவத்தையினையும் அறிந்துகொண்டிருப்பது ஆத்மாவாம். ஆகவின் ஆத்மா சித்தாம்.

## (3) ஆத்மா ஆனந்தம்.

பரமப் பிரீதிக்கு விஷயமாயிருப்பதெதுவோ அது ஆனந்தமாம்: என்பது ஆனந்தத்தி னிலக்கணமாம். ஆத்மாவினிடத்தில் எல்லார்க்கும் பரமப் பிரீதி யிருத்தலால் ஆத்மா ஆனந்தமாம். இவ்வாறு ஆத்மா சச்சிதானந்த வடிவமாயிருக்கின்றதென்றறிக.

## ஆனந்த விளக்கம்.

விவேகா:— 'நான் இருக்கிறேன்; நான் அறிகிறேன்' என்னும் சத்து சித்துக்கள் போல, 'நான் ஆனந்தமாயிருக்கிறேன்' என்னும் அனுபவம் எல்லாரிடத்தும் தோன்றுவதில்லையே.

குரு :—சில பொருள்களில் சத்தொன்றே விளங்கும். சிலவற்றில் சத்து சித்துக்களாகிய இரண்டும் காணப்படும். சிலவற்றில் சத்து சித்து ஆனந்தம் என்னும் மூன்றும் விளங்கும், எவ்வாறெனின், கடம் (குடம்) படம் (ஆடை) முதலியவற்றில் 'கடமிருக்கின்றது, படமிருக்கின்றது' என்னப்படுவதாகிய சத்தொன்றே காணப்படும்; மற்றைய விரண்டும் விளங்குவதின்றாம். புத்தி

யின் (தமோ குணத்தால் அஞ்ஞானமயமாயுள்ள) மூட விருத்தியிலும், (ரஜோகுணத்தால் இராக மயமாயுள்ள) கோர விருத்தியிலும் 'நான் இருக்கிறேன், அறிகிறேன்' எனப்படும் சத்தும் சித்தும் மாத்திரமே விளங்கும்; ஆனந்தம் விளங்குவதின்று. (சத்துவ குணத்தால் வைராக்கியமாயுள்ள) சாந்த விருத்தியில் 'நான் சச்சிதானந்த வடிவமாக விருக்கிறே' னென்னும் சத்து சித்து ஆனந்தம் மூன்றும் விளங்குவனவாம். ஆதலால் ஆத்மா சச்சிதானந்த வடிவமா மென்பதில் யாதும் ஐயமின்றாம்.

விவேகா:—விஷய சம்பந்தத்தினலன்றோ ஆத்மாவிற்கு ஆனந்த முண்டாகின்றது? அங்ஙனமாக, ஆத்மா ஆனந்த வடிவினதா மெனக்கூறல் எவ்வாறு பொருந்தும்?

குரு:—விஷய சம்பந்தத்தால் ஆத்மா ஆனந்தமடைவதில்லை. அங்ஙனம் விஷய சம்பந்தத்தால் உண்டாவதாகத் தோன்றும் ஆனந்தமும் ஆத்மானந்தமே யன்றிப் பிறிதன்றாம். எவ்வாறெனின்,

ஒருவன் ஒரு பொருளின்மேல் விருப்பங் கொண்டவுடன் அவன் மனம் சஞ்சலப்படுகின்றது. காற்றினலலைப்புண்ட ஜலத்தில் ஒரு பொருளின் பிரதிபிம்பம் காணப்படாமை போல, சஞ்சலத்தாலலையும் புத்தியில் ஆத்மானந்தம் தோன்றுவதில்லை. விரும்பப்பட்ட பொருள் கிடைத்தவுடன் சஞ்சலப்பட்ட மனம் சிறிது பொழுது தன் நிலையில் நிற்கின்றது. அப்பொழுது அசைவற்ற ஜலத்தில் ஒரு பொருளின் பிரதிபிம்பம் நன்கு காணப்படுதல் போல, ஆத்மாவின் ஆனந்தம் விளங்குகின்றது. அதனல் விஷயத்தில் ஆனந்த மிருப்பதாகக் கருதுகின்றனர்.

ஓர் நாயானது மண்ணில் மக்கிப் பசையற்றுக் கிடக்கும் எலும்பைக் கடிக்கும்பொழுது அவ்வெலும்பு குத்துவதனால் அதன் தாடையிலிருந்து இரத்தம் வர, அவ்விரத்தம் தன் தாடையிலிருந்து வருகின்றதென்பதை அறியாமல், எலும்பினின்று வருவதாகப் பாவித்து மேன்மேலும் கடிக்கின்றது. அவ்வாறே அவிவேகிகள் விஷயத்தில் ஆனந்தமுளதெனப் பிராந்தி கொண்டு மேலும் மேலும் விஷயேச்சை யுடையவராகின்றனர்.

விஷய சம்பந்தத்தால் ஆனந்த முண்டாவதுண்மையாயின் சுழுத்தியில் ஆனந்த முண்டாகலாகாது; அங்கு யாதொரு விஷய சம்பந்தமுமில்லை யாகலின். ஆனால், ஆனந்தமோ உண்டாகின்றது; 'நான் ஆனந்தமாகத் தூங்கினேன்' என்னும் ஆனந்தானுபவம் ஒவ்வொருவருக்கும் இருக்கின்றமையின்.

ஆகலின் விஷயத்தில் ஆனந்த மின்றும்.

விவேகா:—சத்து சித்து ஆனந்தம் என்னு மிம்மூன்றும் ஆத்மாவின் குணங்களோ?

குரு:—அன்று, ஆத்மாவின் வடிவமாம்.

விவேகா:—மூன்றும் ஒன்றன் வடிவமாவ தெங்ஙனம்?

குரு:—வெப்பம் ஒளி செந்நிறம் என்னும் மூன்றும் தீயின் சொரூபமாயிருத்தல் போல, சத்து சித்து ஆனந்தம் என்னும் மூன்றும் ஆத்மாவின் சொரூபமாம். எங்ஙனமெனின்?

(1) ஒரே ஆத்மா நிவிருத்தியில்லா திருத்தலாற் சத்தாம்.

(2) சடத்திற்கு (தன்னையும் பிறவற்றையும் அறியாதது சடம்) வேறான பிரகாச வடிவினதாயிருத்தலின் சித்தாம்.

(3) முக்கிய பிரீதிக்கு விஷயமாயிருத்தலின் ஆனந்தமாம். அன்றியும், எது சத்தோ அது சித்தாம்; சத்தும் சித்துமாயிருப்ப தெதுவோ அது ஆனந்தமாம். ஆகலின் இம்மூன்றும் பின்னப்பட்டவைய்யாக வின்றி ஏகமாகவேயிருப்பனவாம். ஆதலின் ஆத்மா சச்சிதானந்த முடையதாம்.

## ஆத்மா மூவகைப் பேதமற்றது.

விவேகா:—என்னை ஈடேற்ற வந்த குருநாதா! ஆத்மா சஜாதீய விஜாதீய சுவகத பேதமற்றது எனத் தாங்கள் திருவாய் மலர்ந்தருளினீர்கள். அது நன்கு விளங்கவில்லை.

குரு:—(1) சஜாதீய பேதம்:—ஒரே ஜாதியாயுள்ள வஸ்துக்களில் ஒன்றற்கொன்றுள்ள பேதமாம். அது ஒரு மரத்திற்கும் மற்றொரு மரத்திற்குமுள்ள பேதம்போல்வதாம்.

(2) விஜாதீய பேதம்:—ஒரு ஜாதி வஸ்துவிற்கும் மற்றொரு ஜாதி வஸ்துவிற்குமுள்ள பேதமாம். அது மரத்திற்கும் கல் முதலியவற்றிற்கு முள்ள பேதம் போல்வதாம்.

(3) சுவகத பேதம்:—முதற் பொருளுக்கும் அதன் சினை (அவயவ)ப் பொருளுக்குமுள்ள பேதமாம். அது ஒரு விருக்ஷத்திற்கும் அதன் இலை பூ முதலியவற்றிற்குமுள்ள பேதம் போல்வதாம்.

(1) ஆத்மாவிற்கு வேறாக மற்றொரு ஆத்மா இல்லாமையால் அது சஜாதீயபேத முடையதன்றாம்.

(2) ஆத்மாவிற்கு அன்னியமாக வேறொரு வஸ்து இல்லாமையால் அது விஜாதீயபேத முடையதன்றாம்.

(3) ஆத்மா நிரவயவமா யிருத்தலால் அது சுவகத பேத முடையதன்றும்.

## ஆத்மா மூன்றவத்தைகளையு மறிவது.

விவேகா:—ஞானபிதாவே! தாங்கள் கூறிய ஆத்ம லட்சண விஷயத்தில் சில சந்தேகங்களுண்டாகின்றன. அவற்றையு மகற்றி அடியேனை யாட்கொள்ளல் வேண்டும்.

குரு:—அப்பா! எவ்வித சந்தேகமிருப்பினும் பயப்படாமல் கேள்.

விவேகா:—ஆத்மா சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி யென்னும் மூன்றவத்தைகளையும் அறிகின்றதென்று கூறினீர்கள். சாக்கிர சொப்பனங்களை யறிகின்றதென்பது விளங்குகின்றது. சுழுத்தியை எவ்வாறறிகின்றதென்பது விளங்கவில்லை.

குரு:—(1) ஜாக்கிரம்:—சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, கிராணம் என்னும் ஞானேந்திரிய மைந்தும்—வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தம் என்னும் கர்மேந்திரிய மைந்தும்—மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்கும்—ஆகிய பதினான்கு இந்திரியங்களுடனும் வியவகாரம் நிகழும் காலம் விழிப்பு நிலை அல்லது ஜாக்கிராவத்தை எனப்படும். இது தூல சரீரத்து நிகழ்வதாம்.

(2) சொப்பனம்:—சாக்கிரத்திற்கு வேறாய், சாக்கிரத்திற் கண்டவையும் கேட்டவையும் அனுபவிக்கப்பட்டவையுமாகிய விஷயங்களை இந்திரியங்களினலன்றி மனோவிருத்தியால் அனுபவிக்கும் காலம் கனநிலை அல்லது சொப்பனவத்தை யெனப்படும். இது சூட்சும சரீரத்தில் நிகழ்வதாம்.

(3) சுழுத்தி:—ஜாக்கிர சொப்பனவத்தைகளுக்கு வேறாய் அஞ்ஞான மென்னும் இருள் மயமாய் நிற்கும் நிலை சுழுத்தியவத்தை யெனப்படும். மனிதன் தூங்கியெழுந்த பின் 'ஒன்று மறியாமல் சுகமாய்த் தூங்கினேன்' என்கிறானல்லவா? அப்படி ஒன்று மறியாமல் சுகமாய்த் தூங்குங்காலமே சுழுத்தியாம். இது காரண சரீரத்தில் நிகழ்வதாம்.

இனி, ஆத்மாவானது ஜாக்கிராவத்தையை, அது உள்ள காலத்து அறிகிறது; சொப்பன சுழுத்திகளில் ஜாக்கிராவத்தையினின்மையையு மறிகிறது. சொப்பனவத்தையை சொப்பன காலத்தில் அறிகிறது; ஜாக்கிர சுழுத்திகளில் அதனின்மையையு மறிகிறது. சுழுத்தியையும் அக்காலத்திலறிகிறது; ஜாக்கிர சொப்பன காலங்களில் அதன் அபாவத்தை (இன்மையை)யு மறிகிறது. நிற்க,

ஜாக்கிர சொப்பனங்களை யறிகின்றதென்பது விளங்குகின்றது; சுழுத்தியை யறிவதெவ்வாறென்பது விளங்கவில்லை என்று நீ கேட்டனையன்றோ? அதனைக் கூறுகிறேன். கேள்.

மனிதன் தூக்கத்தினின்று விழித்தவுடனே 'நான் ஒன்று மறியாமல் சுகமாய்த் தூங்கினேன்' என்று சொல்லுகிறான். இது ஒவ்வொருவருக்கும் அனுபவமான விஷயம். அறியாமையை (அஞ்ஞானத்தை)யும் சுகத்தையும் அங்கு (சுழுத்தியில்) அனுபவித்திராவிடின் அவன் அவ்வாறு கூறான். அனுபவியாத வொன்றை அனுபவித்ததாகக் கூறுவானோ? ஆனால் கிணற்றில் விழுந்திருக்கும் ஒரு பொருளை எடுப்பதற்காக அதற்குள் மூழ்கிய வொருவன் அப்பொருளைக் கண்டெடுத்தாலும் வெளியிலிருப்போர்க்குக் கூறமுடியாதவனாயிருந்து, வெளியில் வந்தபின்னர் கூறுகிறான்.

அதுபோல, சுழுத்தியில் சுக அஞ்ஞானங்களின் அனுபவ மிருப்பினும் அவற்றை அறிவதற்குக் கருவியாயுள்ள இந்திரிய அந்தக்கரணங்களின்மையால் அனுபவஞானம் உண்டாகின்றதில்லை. விழித்தபின் இந்திரிய அந்தக்கரணங்களிருத்தலால் அந்த ஸ்மிருதி (நினைவு) உண்டாகின்றது. சுழுத்தியினின்று மெழுந்த புருடனுக்கு 'எனக்கு ஒன்றுந் தெரியவில்லை' என்னும் ஞான முண்டாகின்றது. அந்த ஞானம் அனுபவரூபமன்று. சுழுத்தி காலத்தி லனுபவிக்கப்பட்ட அஞ்ஞானத்தின் ஸ்மிருதியாம்.

இவ்வாற்றால் ஆத்மா மூன்றவத்தைகளையு மறிகின்றதென்றறிக.

## சரீரத்திரயம்.

விவேகா:—எம்பெருமானே! தூலம் சூக்குமம் காரணம் என மூன்று சரீரங்களிருப்பதாகக் கூறினீர்கள். எனக்கிருப்பது மாமிசம் எலும்பு முதலியவற்றாலாகிய இந்த ஒரு சரீரமேயன்றோ? வேறு இரு சரீரங்கள் எங்கிருக்கின்றன?

குரு:—இம்மூன்று சரீரங்களின் தன்மையை யறிதற்கு முன்பு வேறு சில முக்கிய விஷயங்களை அறிதல் அவசியமாம். ஆயினும் இங்குச் சுருக்கமாகக் கூறுகிறேன்.

(1) நீ சொல்லியவாறு தசை என்பு முதலியவற்றாலாகியது இத்தூல சரீரமாம்.

(2) ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, பிராணாதி வாயுக்கள் 5, அந்தக்கரணம் 2. ஆகிய இவற்றின் கூட்டம் சூக்கும சரீரமாம்.

(3) ஸ்தூலம் சூட்சும மென்னு மிவ்விரண்டு சரீரங்களுக்கும் முதற்காரணமாயிருக்கும் அஞ்ஞானமே காரண சரீரமாம்.

## ஆத்மா மூன்று சரீரங்களினும் வேறு.

ஆத்மா இம்மூன்று சரீரங்களினும் வேறாம். எவ்வாறெனின், சொப்பனவஸ்தையில் இத்தூல சரீரம் விளங்குவதின்றாம்; அதனால் ஆத்மா தூல சரீரத்தினும் வேறாம். சுழுத்தி மூர்ச்சை சமாதி முதலிய காலங்களில் சூட்சும சரீரம் விளங்குவதின்றாம். ஆனால் ஆத்மா இல்லாமற் போவதில்லை. அதனால் ஆத்மா சூட்சும சரீரத்தினும் வேறாம். நிர்விகற்ப சமாதியில் காரணதேகம் விளங்குவதின்று; ஆனால் ஆத்மா ஆவரணம் (மறைப்பு) இன்றி விளங்குகின்றது. அதனால் ஆத்மா காரண சரீரத்தினும் வேறாம். இவ்வாறு ஐந்து கோசங்களாகவுள்ள மூன்று சரீரங்களினும் ஆத்மா வேறாம் என்றறிக.

### பஞ்சகோசங்கள்.

**விவேகா:**—கருணாநிதி! ஐந்து கோசங்களெவை?

**குரு:**—விவேகானந்தா! இப்பொழுது நான் சொன்ன முச்சரீரங்களும் பஞ்சகோச வடிவாயிருக்கின்றன. கோசமென்பது கத்தியின் உறைக்கும் கோசகாரமென்னும் ஓர் வகைப் புழுவின் கூட்டிற்கும் பெயராம். அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என்பவையே பஞ்சகோசங்களாம். இக்கோசங்கள் ஐந்தும் மூன்று சரீர வடிவாயிருந்து ஆத்மாவை மறைத்துக்கொண்டிருக்கின்றன.

**விவேகா:**—அஃது எவ்வாறு?

**குரு:**—(1) அன்னமயகோசம்:—இத்தூலசரீரமே அன்னமயகோசமாம். இது தாய் தந்தைகளுண்ட அன்னத்தினாலுண்டாகிய சோணிதத்தாலும் சுக்கிலத்தாலும் தோன்றி, அன்னமுண்பதால் வளர்ந்து, பின்னர் (மரணத்

திற்குப் பின்னர்) அன்னமயமாகிய பிருதிவியில் ஒடுங்கிப்போவதால் அன்னமய மெனப்படுகின்றது. இது ஆத்மாவை உறைபோல் மூடி மறைப்பதால் கோசமெனவும் கூறப்படுகின்றது. சுக துக்கங்களின் அநுபவமாகிய போகத்திற் கிடமாயிருப்பது. பிறத்தல் இருத்தல் மாறுதல் வளர்தல் குறைதல் நசித்தல் என்னும் ஆறு விகாரங்களையு முடையது.

(2) பிராணமயகோசம்:—கர்மேந்திரிய மைந்துடன் கூடிய பஞ்ச பிராணன் பிராணமயகோசமாம். இது அன்னமய கோசத்திற் குள்ளிருப்பதாம்.

(3) மனோமயகோசம்:—ஞானேந்திரிய மைந்துடன் கூடிய மனம் மனோமயகோசமாம். இது பிராணமய கோசத்திற் குள்ளிருப்பதாம்.

(4) விஞ்ஞானமய கோசம்:—ஞானேந்திரிய மைந்துடன்கூடிய புத்தி விஞ்ஞானமயகோசமாம். இது மனோமய கோசத்திற் குள்ளிருப்பதாம்.

(5) ஆனந்தமயகோசம்:—அஞ்ஞானவடிவ காரணசரீரமே ஆனந்தமயகோசமாம்

இவற்றுள், அன்னமயகோசம் தூலதேகத்திலும், பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் என்னும் மூன்று கோசங்களும் சூட்சும தேகத்திலும், ஆனந்தமயம் காரண தேகத்திலு மிருப்பனவாம்.

## ஆத்மா பஞ்ச கோசங்களினும் வேறு.

**விவேகா:**—இவ்வைந்து கோசங்களும் ஆத்மாவை எவ்வாறு மறைக்கின்றன? இவற்றை ஆத்மாவெனக் கருதுவோரு முண்டோ?

**குரு:**—ஆம், உண்டு. சிலர் தேகமே ஆத்மா வென்பர்; சிலர் இந்திரியமே ஆத்மா வென்பர்; சிலர் பிராணனே

ஆத்மா வென்பர்; சிலர் மனமே ஆத்மாவென்பர்; சிலர் புத்தியே ஆத்மா வென்பர்; சிலர் காரண சரீரமாகிய ஆனந்தமய கோசமே (அஞ்ஞானமே) ஆத்மா வென்பர். இவ்வாறு ஆத்மாவெனக் கூறும்படியாக இருந்து கொண்டு உண்மையான ஆத்ம சொரூபத்தை மறைப்பதனுலேதான் இவை கோசமெனப்படுகின்றன.

விவேகா:—சுவாமி! தேகம் ஆத்மா அன்று என்பதுண்மையே. பிராணன், மனம், புத்தி முதலியவற்றில் ஏதோனுமொன்று ஏன் ஆத்மாவாக இருக்கலாகாது? அவைகளும் ஆத்மாவல்லவென்ப தெவ்வாறு பொருந்தும்?

குரு:—தேகம் பிராணன் முதலியவற்றை ஆத்மாவெனக் கூறுவோர் அதற்குப் பலகாரணங் காட்டுவார். அவை விரிக்கிற் பெருகும். உனக்கும் அச்சந்தேகம் சிறிது இருப்பதால் அவ்வையம் நீங்கச் சில விஷயங்களைக் கூறுகிறேன். தூலம் சூக்குமம் காரணம் என்னும் முச்சரீரங்களும் ஆன்மாவன்று; ஆன்மா அம்மூன்று சரீரங்களையு மறிவதாய் அவற்றிற்குச் சாட்சியா யிருப்பதாம் என்று கூறியது ஞாபகமிருக்கின்றதா?

விவேகா:—ஆம், நன்ருய் ஞாபகமிருக்கின்றது.

குரு:—பிறகு, பஞ்ச கோசங்களைக் கூறினபோது, பஞ்ச கோசங்களின் லட்சணங்களையும், அவை மூன்று சரீரங்களில் எவ்வாறு அடங்கி யிருக்கின்றன வென்பதையும் கூறினேனல்லவா?

விவேகா:—ஆம்.

குரு:—நல்லது, ஆத்மா மூன்று சரீரங்களுக்கு வேறு என்று ஏற்பட்ட போதே அம்மூன்று சரீரங்களிலும் அடங்கியிருக்கும் பஞ்சகோசங்களுக்கும் வேறு என்பதும் ஏற்படவில்லையா? ஐந்து கோசங்களும் மூன்று சரீரங்

களுக்கு அன்னியமானவை யன்றே. மூன்று சரீரங்கள் ஆத்மா வாகாதபோது, அவற்றின் வேருகாத பஞ்ச கோசங்கள் ஆத்மாவாத லெங்ஙனம்? நன்கு யோசித்துப்பார்.

விவேகா:—தாங்கள் கூறுவதுண்மையே. இப்பொழுது நன்கு புலனுகின்றது.

குரு:—ஆயினும், திடநிச்சய முண்டாம் பொருட்டு ஆத்மா தேக மூன்றிற்கும் வேருந்தன்மையை இன்னும் சிறிது விளக்குகிறேன்.

தூலவுடல் சூக்குமதே கத்தி வில்லை
தூலவுடல் சூக்கவுட லிவ்வி ரண்டு
மாலயமாங் காரணதே கத்தி வில்லை
யவைமூன்றுந் துரியத்தி லிலவே யில்லை
கோலமுறுந் தேகமெலா மிலாத தாலுங்
கூறுபடாச் சின்மாத்ர சொரூபமொன்றே
காலமொரு மூன்றிலுமே யிருப்ப தாலுங்
களங்கமிலாச் சின்மாத்ர சொரூப மோநான்.

என்று ரிபுகீதை கூறுமாறு, சாக்கிராவத்தையில் தோன்றும் இத்தூலவுடல் சொப்பனத்தில் தோன்றுவதில்லை. இத்தூல சரீரம் செயலற்றுப் படுக்கையில் கிடக்கவும் சொப்பனத்தில் அநேக வியவகாரங்கள் நடை பெறுகின்றன. ஆத்மா தூல சரீரத்தினும் வேருனதாக இல்லாதிருப்பின் அங்கே வியவகாரங்கள் நடைபெறமாட்டா. அதோடு நினைத்தல் முதலிய காரியங்களும் நிகழ்வதால் மனம் முதலியவற்றின் சங்காத(கூட்ட)மாகிய சூக்கும சரீர மொன்றிருத்தல் வேண்டும். அச்சொப்பனத்திற் றோன்றும் விஷயங்களைத் தூங்கி யெழுந்தபின் பிறர்க்குக் கூறுவதால் அவற்றை ஆன்மா அறிந்துகொண் டிருந்ததென்பதும் விளங்குகின்றது. அங்ஙனமே சூக்கும சரீரத்தின் ஞானம் சுழுத்தி

யிலுண்டாதலில்லை. ஆனால் அங்கு சுகவடிவ ஆன்மா சுயம் பிரகாசமாக விளங்குகின்றது. சுழுத்தியில் சுகஞான மின்றேல் 'நான் சுகமாய்த் தூங்கினேன்' என்னும் ஸ்மிருதி விழித்த பின்பு உண்டாகலாகாது; ஆனால் உண்டாகின்றது. அதனால் சுழுத்தியில் சுகத்தின் ஞானமே இருக்கிறது. அச் சுகம் விஷயத்தாலுண்டானதன்று. ஆத்ம சொரூபமே.

நிர்விகற்ப சமாதியில் அஞ்ஞானமாகிய காரண சரீரம் விளங்குவதில்லை. ஆனால் அஞ்ஞானமாகிய ஆவரணமின்றி ஆத்மா விளங்குகிறது.

இதனால் மூன்று தேகங்களும் பிறழ்ச்சி (மாறுதல்) உடையனவாம். அதாவது ஒரு காலத்தைவிட்டு மற்றொரு காலத்து விளங்குவன வன்றும். ஆனால் ஆன்ம வஸ்துவோ மூன்றவத்தைகளினும் விளங்குவதாம். ஆதலால் அது வியாபகமாம்.

இவ்வாறு ஆத்மா மூன்று தேகங்களினும் வேறாயிருக்கின்றதென்றறிவதனால் பஞ்ச கோசங்களினும் வேறுமென்பதும் விளங்குதல் காண்க. தவிர, பிராணன் மனம் புத்தி முதலியவற்றின் தன்மைகளைப் பின்னர் கூறுகிறேன். அவற்றை அறிதலாலும் இஃது தெளிவாம்.

### அனாத்மலட்சணம்.

விவேகா:—அனாத்மாவின் லட்சணம் யாது?

குரு:—ஆத்ம லட்சணத்திற்கு மாறான லட்சணமுடையது அனாத்மாவாம். கண்டமாயும் அவயவமுடையதாயும் விகார முள்ளதாயும் அசத்தாயும் ஜடமாயும் துக்கமாயும் உள்ள தேகாதிப் பிரபஞ்சம் அனாத்மாவாம்.

### பிரஹ்ம லட்சணம்.

விவேகா:—பிரஹ்மம் எத்தகையது? அதன் சொரூப லட்சணம் யாது?

குரு:—பிரஹ்மம் எப்பொழுதும் உள்ளதாயும் பரிசுத்தமான தாயும் ரூப மற்றதாயும் சர்வ வியாபியாயும் (எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருப்பதாயும்) எல்லாப் பொரு ளையும் தன்னகத்தி லடக்கிக்கொண்டிருக்கும் ஆதாரப் பொருளாயும் மனம் வாக்குகளுக் கெட்டாததாயும் நிர்விகாரியாயும் சஜாதீய விஜாதீய சுவகத பேதமற்ற அத்துவித வஸ்துவாயும் சச்சிதானந்த வடிவினதாயும் விளங்குவதாம்.

விவேகா:—குருநாதா! தாங்கள் ஆத்மாவிற்குரிய லட்சணத் தையே பிரஹ்மத்திற்கும் கூறியிருக்கின்றீர்கள். ஆத்ம லட்சணம் கூறினபோதும் 'ஆத்மா பிரஹ்மம் என்னு மிரு பதங்களும் ஒரே வஸ்துவைக் காட்டுவன வென் றும், ஆகையால் பிரஹ்மமே ஆத்மா ; ஆத்மாவே பிரஹ் மம்' என்றும் கூறினீர்கள். அன்றியும்,

ஆத்மா இந்திரியங்களின் மூலமாக விஷயங்களை யறிவ தெனவும் கூறினீர்கள். ஆதலால் ஆத்மா இந்த என் சரீரத் திற்குள் ளிருப்பதாகின்றது. அந்த ஆத்மாவே என் வடிவ மாயிருப்பதாம். எனவே, அந்த ஆத்மாவே நான் என்பது விளங்குகின்றது. இவ்வாறு 'நான்' என்பதற்கு விஷய மாயுள்ள ஆத்மா எவ்வாறு பிரஹ்மமாகும்? அங்ஙனமாயின் நான் பிரஹ்மமோ? தவிர,

'ஆன்மா ஏகம்' என்றும் இயம்பினீர்கள். என் சரீ ரத்தி லிருப்பது போல ஒவ்வொரு சரீரத்திலும் ஒவ்வொரு ஆத்மா தனித்தனியாக இருத்தல் வேண்டுமன்றோ? என் னைக் காப்பாற்ற வந்த கருணையங்கடலே! இச்சந்தேகங் களை யகற்றுமாறு பிரார்த்திக்கின்றேன்.

குரு:—பிரஹ்மம் வியாபகப் பொருளெனக் கூறினேனன் றோ? வியாபகம் என்றால் என்னவென்று பார்ப் போம்.

தேசகால வஸ்து பாரிச்சேத மின்றியது வியாபகமாம்; அதாவது தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவாலும் முடிவில்லாதது வியாபகமாம். ஒரு வஸ்து—மலை யென்று வைத்துக்கொள்வோம்—ஒரு தேச(இட)த்தி லிருக்கின்றது; மற்றொரு தேசத்திலில்லை; ஆதலால் அது (மலை) தேசத்தால் முடிவுடையதாகும். எந்த வஸ்து ஒரு காலத்திலிருந்து மற்றொரு காலத்தி லில்லாமற் போகின்றதோ அது காலத்தால் முடிவுடையதாகும். படம் முதலிய வஸ்துக்களினும் வேறாய குடம் வஸ்துவால் முடிவுடையதாகும்.

இவ்வாறு தேசகால வஸ்துக்களால் முடைவுடைய பொருள் கண்டமாயும் காரியமாயுமிருக்கும். அன்றியும் அது அநித்யமாய் அழியுந்தன்மை யுடையதுமாகும். பிரஹ்மமும் ஆத்மாவும் வெவ்வேறு பொருள்களாயின் அவை கண்டமாயும் அநித்தியமாயும் ஒழியுந்தன்மை யுடையனவாம். அங்ஙனமாயின் 'ஆத்மா சச்சிதானந்த வடிவமா' மென்னும் வேத வாக்கியம் விருத்தமாம், ஆகலின் பிரஹ்மமே ஆத்மாவா மென்பது தெளிவாம். அன்றியும்,

பிரஹ்மம் ஆத்மாவின் வேறாகுமாயின் அது அனாத்மாவாம். ஆத்மாவல்லாதது அனாத்மாவாமன்றோ? அனாத்மாவாமாயின் ஜடமாயிருத்தல் வேண்டும். ஏனெனின் அனாத்மாவானது (ஆத்மாவின் லட்சணமாகிய சச்சிதானந்தத்திற்கு வேறாய) அநிருத ஜட துக்க லட்சண முடையது.

இக்காரணங்களால் ஆத்மா வேறு பிரஹ்மம் வேறு என்பது பொருத்த முடையதன்றாம்.

## நான்கு ஆகாச திருஷ்டாந்தத்தால் நான்கு சைதன்யங்கள்.

மேலும், விவேகாநந்தா!

"விண்ணென்றே மகாவிண் ணென்றும்
மேகவிண் ணென்றும் பாரின்

மண்ணென்ற கடவிண் ணென்றும்
மருவிய சலவிண் ணென்றும்
எண்ணுங்கற் பனைபோ லொன்றே
யெங்குமாம் பிரம மீசன்
கண்ணுங்கூ டஸ்தன் சீவன்
நான்குசை தன்ய மாமே.''

என்னுமாறு, ஒரே ஆகாசமானது தான் ஒன்றாகவே யிருப்பினும் உபாதியால் மகாகாச மென்றும் மேகாகாச மென்றும் கடாகாச மென்றும் ஜலாகாச மென்றும் கற்பனை யாக வெண்ணப்படுவது போல, இரண்டாவதற்றதாகிய ஏக சைதன்யமே உபாதியால் பிரஹ்மமெனவும் ஈசனென வும் கூடஸ்தனெனவும் சீவனெனவும் கற்பிதமாக வெண் ணப்படுகின்றது. எங்ஙனமெனின்,

## (1) மகாகாசம்.

பிரஹ்மாண்டத்தின் உள்ளும் புறமும் ஒரே தன்மை யாயும் வியாபகமாயு மிருப்பது பிரஹ்மமாம். அதுபோல,

## பிரஹ்மம்.

எங்கும் வியாபகமாயும் நிர்விகாரமாயு மிருப்பது பிரஹ் மமாம்.

## (2) மேகாகாசம்.

அந்த ஆகாசத்திற் காணப்படும் மேகமானது எவ்வளவு ஆகாசத்தைத் தனக்கிடமாகக் கொண்டிருக்கின்றதோ அந்த ஆகாசமும், அந்த மேகசலப் பிரதிபிம்பாகாசமும் சேர்ந்தது மேகாகாசமாம். அதுபோல,

## ஈசுவரன்.

ஆகாசத்தில் மேகம்போல் பிரஹ்மத்தினிடத்திலுள்ள மாயையிற் பிரதிபிம்பிக்கிற சைதன்யத்தின் ஆபாசமும், அம்

மாயையின் அதிஷ்டான சேதனமுமாகிய இரண்டும் கூடியது ஈசுவரனும்.

## (3) கடாகாசம்.

இங்கே ஒரு ஜலம் நிறைந்த கட மிருக்கின்றதெனவைத்துக்கொள்வோம். அக்கடத்திற்கு எவ்வளவு ஆகாசம் இடங்கொடுக்கிறதோ அவ்வளவு ஆகாசம் கடாகாசமாம். அதுபோல,

## கூடஸ்தன்.

அந்தக்காணம் அல்லது அவித்தையின் அதிஷ்டான சேதனம் கூடஸ்தனும்.

## (4) ஜலாகாசம்.

அக் கடத்திலுள்ள ஜலத்தில் ஆகாசத்தின் பிரதிபிம்பமுண்டாகின்றது. அவ்வாகாசத்தின் பிரதிபிம்பமும் கடாகாசமும் ஆகிய இரண்டும் கூடியது ஜலாகாசமாம். அதுபோல,

## ஜீவன்

சரீரத்திற்குள்ளிருக்கும் அந்தக்காணம் அல்லது அவித்தையில் பிரதிபிம்ப சேதனமும் அதன் அதிஷ்டான சேதனமுமாகிய இரண்டும் கூடியது ஜீவனும்.

**விவேகா:**—கூடஸ்தனுக்கும் ஜீவனுக்கும் - பிரஹ்மத்திற்கும் ஈசுவரனுக்கும் - பேதமென்ன ?

**குரு:**—கூடஸ்தன் ஜீவனுக்கு அதிஷ்டான பாகமாம். பிரஹ்மம் ஈசுவரனுக்கு அதிஷ்டானபாகமாம். ஜீவனும் ஈசுவரனும் அதிட்டானம் ஆசிரயம் ஆபாசம் என்னும் மூன்றின் சொரூபங்களாம். ஜீவசப்தமாயினும் ஈசுவரசப்தமாயினும் எங்கு வரினும் இம் மூன்றையும் பொருளாகக் கொள்ளல் வேண்டும். கொள்ளாக்கால் பாகத்தியாக லட்சணைக்கு விருத்தமுண்டாம்.

விவேகா:—சுவாமி! நான்கு ஆகாச திருஷ்டாந்தத்தால் சேதனத்தின் நான்கு பேதங்களையும் அறிவதால் தெரிந்துகொள்ளவேண்டிய தென்ன?

குரு:—ஒரு மகாகாசமே மடமாகிய உபாதியோடு கூடியதாய், அந்த மடத்திற்கு வேருய் நிர்விகாரமா யிருந்துகொண்டே மடாகாச மெனவும், மேலும் அந்த மகாகாசமே கடமாகிய உபாதியோடு கூடியதாய், அக்கடத்திற்கு விலட்சணமாய் நிர்விகாரமா யிருந்துகொண்டே கடாகாச மெனவும் வெவ்வேறு பெயர்களை யடைகின்றது. ஆயினும் அம்மடமும் கடமும் நசித்தமாத்திரத்தில் மடோபாதி கடோபாதி என்னுமிரண் டுபாதிகளும் நசித்து, (மடாகாசம் கடாகாச மிரண்டும் மகாகாசத்தினும் அன்னியமா யிராமையால்)மகாகாசமே யாவது போல, யாதொரு உபாதியு மின்றிய சச்சிதானந்த லட்சண முடைய பரப்பிரஹ்மமே மாயையாகிய உபாதியுடன் கூடி, அம்மாயையினும் விலட்சணமாய் நிர்விகாரமா யிருத்தலால் பிரத்தியகாத்மா வெனவும் வெவ்வேறு பெயர்களைப் பெறுகின்றது.

இவ்வாறு வெவ்வேறு பெயர்களா லழைக்கப்படினும் மாயை அவித்தை யென்னு மிரு வுபாதிகளையும் நீக்கிப் பார்க்கின் பிரத்தியகாத்ம பரமாத்மாக்களிரண்டும் சுத்த நிர்க்குண மாயாதீத பரிபூரண பரப்பிரஹ்மத்தை விட பின்னமாகாமையின், அவ்விரண்டும் பரப்பிரஹ்ம சொரூபமேயாம். ஆதலால் பிரத்தியகாத்ம பரமாத்மாக்கள் இரண்டும் பரப்பிரஹ்மத்தினும் வேறன்று. இரண்டாவதில்லாத பரப்பிரஹ்மமொன்றே உபாதியால் பிரத்தியகாத்மா வெனவும் கேவலாத்மா (பிரஹ்மம்) எனவும் கூறப்படுகின்றது. உபாதியை நீக்கிக் காணின் பேதமின்றி, சர்வம், நிர்விசேஷ சின்மாத்திரமாகிய சுத்த நிர்க்குண பரப்பிரஹ்மமே யாகும் என்றறி

யக் கடவாய். மேலும், கடாகாச திருஷ்டாந்தத்தால் அறியவேண்டிய மற்றொரு விஷயமு முளது. அஃதியா தெனின்,

எல்லாச் சரீரங்களினு முள்ளது ஒரு ஆத்மாவே.

உலகத்தில் கடங்கள் பலவாயிருத்தலின் கடாகாசங் களும் பலவாம். அதுபோல, உபாதிகளாகிய சரீரங்கள் பலவா யிருத்தலின் கூடஸ்த ஆத்மாக்களும் பலவா யிருத் தல் வேண்டு மென்னும் ஐயம் நிகழுமன்றே? இவ் வின விற்கு இப்பொழுது நீயே விடை கூறல் வேண்டும்.

ஓரே ஆத்மா எல்லாச் சரீரங்களினும் வியாபித்திருக் கின்றதா? அல்லது ஒவ்வொரு சரீரத்திலும் தனித்தனி யாக வெவ்வேறு ஆத்மாக்க ளுண்டா?

விவேகா:—எங்கெங்கு கடங்களாகிற உபாதிகளுண்டோ அங்கங் கெல்லாம் வெவ்வேறு கடாகாசங்களாக ஓரே ஆகாசம் காணப்படுதல் போல, எங்கெங்கு சரீரங்க ளாகிற உபாதிகளுண்டோ அங்கங்கெல்லாம் வெவ் வேறு கூடஸ்த ஆத்மாக்களாக ஓரே ஆத்மா காணப் படுகின்றது. (ஒரு ஆத்மாவே சரீரங்டோறும் வியா பித்திருக்கின்றது.)

குரு:—ஆம். நீ கூறியது சரியே. எங்ஙனம் ஓரே வாயு வானது உலக முழுதும் வியாபித்து தென்றற் காற் றென்றும் சுழற்காற்றென்றும் பிராணவாயு வென்றும் பலவிதமாய்த் தோன்றுகின்றதோ அங்ஙனமே ஒரு ஆத்ம சொரூபமே பிபீலிகாதி பிரமபரியந்த முள்ள எல்லாச் சரீரங்களினும் வியாபித்து அனேக ஜீவர்க ளாகத் தோன்றுகின்றது. சகல நதிகளும் சமுத்திரத் தில் விழுந்து பேதமற் றிருத்தல் போலவும், அவ்வாழி (கடல்) யிற் றோன்றும் அலைகளும் நுரைகளும் அக்

கடல் நீரினும் வேறாகாமல் ஒன்றாகவே யிருப்பது போலவும் சகல சராசர வடிவப் பிரபஞ்சமும் பிரஹ்மத்தை விட வேறாக வின்றாம்.

## சுக துக்க பேத காரணம்.

விவேகா:—சுவாமி ! எல்லாச் சரீரங்களிலும் வியாபித்திருப்பது ஒரே ஆத்மாவாயின், எல்லோருடைய பாவ புண்ணியங்களும், அவற்றின் பயனாகிய சுகதுக்கங்களும் எல்லோர்க்கும் சமமாகவன்றோ இருத்தல் வேண்டும் ? ஆனால் அனுபவத்தில் அங்ஙன மின்றே! வெவ்வேறாக் காணப்படுகின்றனவே. அஃதேன் ?

குரு:—கர்மத்தைச் செய்யும் கர்த்தாவும் அதன் பலனைப் புசிக்கும் போக்தாவும் ஆத்மாவன்று ; அந்தக்கரணமாம். அவ் வந்தக்கரணம் ஒவ்வொரு சரீரத்திலும் தனித்தனியாக உண்டு. ஆகலின் சுகதுக்காதிகள் சமமாக வின்றி பேதப்படுகின்றன.

## ஆத்ம சொரூபம் எங்கும் அறிவாகாரமாக் விளங்குவதில்லை.

விவேகா:—மற்றொரு சந்தேக முண்டாகின்றது. ஆத்மா சரீரத்தினிடத்து அறிவாகாரமாக விளங்குதல் போல மற்ற விடங்களில் விளங்காதது ஏன் ?

குரு:—சற்சீடனே ! நன்கு வினவினாய். ஆகாயத்தில் விளங்கும் சந்திரன் எங்கும் ஒரே விதமாய்ப் பிரகாசித்துக் கொண் டிருப்பினும் ஜலத்தில் மாத்திரம் காணப்படுகின்றதே யன்றி மற்ற விடங்களில் காணப்படுவதில்லை. அதுபோல, அந்தக்கரண வுபாதியால் அங்கு அறிவாகாரமாக விளங்குகின்றது. பிறவிடங்களில் அவ்வுபாதியின்மையால் அவ்வாறு விளங்குவதில்லை,என்று அறிக.

## மாயை அவித்தைகளின் பேதம்.

விவேகா:—ஈசுவரனுடைய உபாதி மாயையென்றும், ஜீவனுடைய உபாதி அவித்தையென்றும் முன்னர் தாங்கள்கூற அறிந்திருக்கிறேன். அவ்விரண்டிற்கும் உள்ள பேதம் யாது?

குரு:—மாயை அவித்தை அஞ்ஞானம் என்பவை ஒரே வஸ்துவிற் குரிய பெயர்களாயினும்,

சுத்த சத்துவகுண முடையது மாயை எனவும், மலின சத்துவ குணமுடையது அவித்தை எனவும் அழைக்கப்படும். இவற்றுள், தமோகுண ரஜோகுணங்களால் தான் அமிழ்த்தப்படாமல் அத் தமோகுண ரஜோகுணங்களைத் தான் அமிழ்த்தும் சத்துவம் சுத்த சத்துவமாம். ரஜோகுண தமோ குணங்களால் அமிழ்த்தப்படும் சத்துவம் மலின சத்துவமாம்.

## குணத் திரயம்.

விவேகா:—குணங்களெத்தனை?

குரு:—சத்துவம் இராசதம் தாமதம் எனக் குணங்கள் மூன்றாம்,

அவற்றுள்,

(1) சத்தியம், பொறுமை, ஜீவகருணை, ஈசுவரபக்தி, குருசேவை, இடம்பமின்மை, கள்ளாமை (திருடாமை) முதலியன சத்துவகுண லட்சணமாம்.

(2) "நான் கர்த்தா, நான் போக்தா" என்னும் அகங்காரமுடைமை இராசத லட்சணமாம்.

(3) சோம்பல், நித்திரை, ஆசை, கொலை, கள்ளுண்டல் முதலியன தாமதகுண லட்சணமாம்.

மேலும்,

சத்துவ குணம் உத்தமமாம்; இது நிவிர்த்தி மார்க்கத்தையும், பகவத்பக்தி, குருபக்தி, சற்சன ருறவு, பிரஹ்ம ஞானம் முதலியவற்றையு முண்டாக்குவதாம்.

இராசதகுணம் மத்திமமாம்; இது காமியகர்மானுஷ்டானம், தேவதோபாசனை முதலிய பிரவிர்த்தி மார்க்கத்தை உண்டு பண்ணுவதாம்.

தாமதகுணம் அதமமாம்; இது நாஸ்திக புத்தி, துரகங்கா்ரம், அவிவேகம் முதலியவற்றை உண்டு பண்ணுவதாம்.

## நான் எனப்படுவது எது?
## கூடஸ்த ஆபாசர்களின் காரியம்.

விவேகா:—குரு மூர்த்தியே! கடம் சம்பந்தப்பட்டவரையில் கடாகாசம் கடஜலப் பிரதிபிம்பாகாசம் என இரண்டு ஆகாசங்கள் காணப்படுதல் போல, சரீரோபாதியால் கூடஸ்தன் ஜீவன் என இரண்டு இருப்பதாகக் கூறினீர்கள். சேதனத்தின் பிரிவாகிய இவ்விரண்டில் 'நான்' என்னும் சொல்லுக்கு விஷயமாயிருப்பதெது? கூடஸ்தன் காரியமென்ன? ஆபாசன் காரியமென்ன?

குரு:—முற்கூறிய நான்கு ஆகாச திருஷ்டாந்தத்தால் தெரிந்து கொள்ளவேண்டிய மற்றொரு முக்கியமான விஷயமுளது. அதாவது; மேகநீரிலும் குடநீரிலும் தோன்றிய பிரதிபிம்பங்கள் பொய்யேயாமென் றறிதல் வேண்டும். இனி, 'நான்' என்னும் சப்தத்திற்கு வாச்சியார்த்தம் ஜீவனுயினும் லட்சியார்த்தம் கூடஸ்தனும்.

முன்பு ஜீவசொரூபம் கூறினபோது, புத்தியிலுள்ள ஆபாசனும் புத்தியின் அதிஷ்டான சேதனமுமாகிய இரண்

டிற்கும் ஜீவன் என்று பெயராமெனக் கூறியது ஞாபகமிருக்கும். ஆதலால், சிதாபாசன் கூடஸ்தன் என்னு மிரண்டிற்கும் பெயர் ஜீவனாம். ஆயினும், ஜீவத்தன்மையின் சகல கர்மங்களும் ஆபாசனிடத்திலிருக்கின்றன. புண்ணிய பாவங்களும்,: அவற்றின் பயனாகிய சுகதுக்கங்களும், சுவர்க்க முதலிய வேறு உலகங்கட்குச் செல்லுதலும், மீண்டு மிவ்வுலகத்திற்கு வருதலுமாகிய எல்லாவற்றையும் ஆபாச சகித புத்தி செய்கின்றது; கூடஸ்தன் செய்கிறதில்லை. ஏனெனில், 'கூடம்' என்பது. கொல்லன் பட்டடைக்குப் பெயராம். கொல்லன் பட்டடையானது தன்மீது எத்தனை இரும்புகளை வைத்து அடித்தாலும் யாதொரு விகாரமுமடையாதிருப்பதாம். அஃதே போல நிர்விகாரமாயிருப்பதால் கூடஸ்தன் எனக் கூறப்படுகின்றது. ஆனால் பிராந்தியால் எல்லாக் காரியங்களும் கூடஸ்தன் செய்வதாகத் தோற்றுகின்றன.

## பிராந்தி யாருக்குண்டாகின்றது ?

விவேகா:—சுவாமி! பிராந்தியால் தோற்றுகின்றதெனக் கூறுகின்றீர்களே. அந்தப் பிராந்தி யாருக்குண்டாகின்றது ?

குரு:—பிராந்தியும் புத்தி சகித ஆபாசனுக்குண்டாகின்றதேயன்றி கூடஸ்தனுக் குண்டாகின்றதில்லை.

விவேகா:—லோகாந்தரம் போதல் வருதலாகிய காரியங்கள் ஆபாசனிடத்து மாத்திரம் எவ்வாறுண்டாம்? கட ஜலத்தில் பிரதிபிம்பமாகவுள்ள ஆகாசமானது அசைதல் போதல் வருதல் முதலிய காரியங்களைச் செய்யுமோ ?

குரு:—விவேகானந்தா! நன்றாகக் கேட்டனை. இது அவசியம் அறியவேண்டிய விஷயமே. நீ கூறியவாறு கட ஜலத்திலுள்ள ஆகாசத்தின் ஆபாசம் சுதந்திரமாக ஒரு

காரியத்தையும் செய்வதில்லை. கடத்தின் சம்பந்தத்தால் செய்கின்றது. அதுபோல, ஊன்றிப் பார்க்குமிடத்து காமகர்ம ரூபமான ஜலத்தால் நிறைந்த புத்தி வடிவ கடம், புண்ணிய பாவ முதலிய சகல விகாரங்களையும் தரிக்கின்றது. அதன் சம்பந்தத்தால் சிதாபாசனும் தரிக்கின்றான். கடாகாசம் விகாரமின்றி யிருத்தல்போல கூடஸ்தன் விகாரமின்றி யிருக்கின்றான். ஆதலால், ஜீவத்தன்மையின் கர்மங்கள் சிதாபாசனிடத்தி லிருக்கின்றன. கூடஸ்தனிடத்தி லிருப்பதாகத் தோற்றுவது வெறும் பிராந்தியாம்.

## உபதேசம் யாருக்கு?

விவேகா:—எம்பெருமானே! 'நான் துக்கி' என்னும் எண்ணமும், தாங்கள் உபதேசித்தவாறு 'நான் பிரஹ்மம்' என்றறிதலாகிய ஞானமும் யாருக்குண்டாகின்றன? குருவின் உபதேசம் யாருக்கு? கூடஸ்தனுக்கா? ஆபாசனுக்கா? இச்சந்தேகங்கள் எனக்குண்டாகின்றன. அஞ்ஞான விருளைப் போக்க ஞானமாகிய ஒளியை உபதேசமாகிற கிரணங்களால் பரப்பும் ஞானசூரியனே! இவ்வையங்களையு மகற்றி அடியேனைக் கிருதார்த்தனாக்கி யருளல்வேண்டும்.

குரு:—'நான் கர்த்தா; நான் போக்தா' என்பவை முதலிய பிராந்தி கூடஸ்தனுக் குண்டாதலில்லை; ஆபாசனுக்கே உண்டாகின்றன வென்று முன்னர் கூறினேனன்றோ? அவ்விடையிலேயே இக்கேள்வியின் விடையுமடங்கி யிருக்கின்றது. ஆயினும், இப்பொழுதும் சிறிது விளக்குகிறேன்.

## ஜீவ சப்தாவஸ்தை.

ஆபாசனுக்குண்டாகும் அவஸ்தைகள் ஏழு. அவை அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்சஞானம், அப

மோட்சஞானம், சோக நிவிர்த்தி, நிரங்குச திருப்தி என்பனவாம். இவ்வேழின் சொரூபத்தையும் அறிதலால் உன் சந்தேகங்கள் நிவிர்த்தியாம். ஆகலின், கவனமாய்க் கேட்பாயாக.

(1) அஞ்ஞானம்:—

"புன்னெறிகொள் குடும்பியாய் வலியறுமோர் சித்துப்
போலியாஞ் சீவனுயர் சுருதிவிசா ரத்தின்
முன்னமொரு தன்சொருப மாகியபே ரொளியா
முதற்றுரிய நிலையறியா திருந்திடலஞ் ஞானம்."

(வேதாந்த சூடாமணி) என்றபடி,

புண்ணிய பாபங்களைப் புரிதலாகிய புன்னெறியை மேற்கொண்டு, குடும்பப் பற்றுள்ளவனாய், தனது நிஜவடிவை யறியாதிருக்கும் சித்துப்போலி (சிதாபாசன்) என்னும் ஜீவன், சற்குரு வாயிலாகத் தத்துவ விசாரஞ் செய்தற்கு முன், தனது நிஜவடிவாயுள்ள பிரத்தியகாத்மாவை அறியாதிருந்தமையே அஞ்ஞானமாம்.

(2) ஆவரணம்.

"பின்னொருகா லுயிரியல்பு கூறுமிடத் தின்று
பிரத்தியகான் மாத்தோன்று தெனுங்கலக்க மிரண்டும்
பன்னியவஞ் ஞானகா ரியமாகு மென்னப்
பகர்தருமா வரண மென்பர்."

பின்பொரு காலத்தில் பிரத்தியகாத்மாவி னிலக்கணத்தை ஓர் பெரியார் பேசக்கேட்டு, அவன், 'பிரத்தியகாத்மா இல்லை; இருந்தால் தோன்றாதா?' என்னும் இருவகை மறைப்பை அடைகிறான். இவையே முன்சொன்ன அஞ்ஞானத்தின் காரியமாகிய ஆவரணமாம். இவற்றுள்,

'பிரத்தியகாத்மா இல்லை' என்னும் வியவகாரத்திற்குக் காரணமாயிருப்பது, 'அசத்துத் தன்மையைச் சம்பாதித்தல்' என்னும் அசத்துவாபாதக ஆவரணமாம். (அசத்

துவ ஆபாதகம்=அசத்துத் தன்மையைச் சம்பாதித்தல்). இது 'நாஸ்தி' என்றும் நவிலப்படும்.

'அது இருந்தால் தோன்றாதா' என்னும் வியவகாரத்திற்குக் காரணமாயிருப்பது, 'விளக்கமின்மையைச் சம்பாதித்தல்' என்னும் அபானுபாதக ஆவரணமாம். (அபான ஆபாதகம்=விளக்க மின்மையைச் சம்பாதித்தல்). இது 'நபாதி' எனவும் படும்.

(3) விட்சேபம்:—

"கருத்தனுமொண் கருமபல போத்துருவுந் தானுக்
கருதியுடம் பபிமானி யாஞ்சீவன் றானே
யுரைத்தலரும் விட்சேபம்." (வே. சூ.) என்றபடி,

அவன் தன்னை (ஜீவனை)க் கருத்தாவாகவும் போக்தாவாகவும் கருதிச் சரீராபிமான முள்ளவனுயிருத்தல் விட்சேபமாம்.

(4) பரோட்ச ஞானம்:—

"சுருதிகுரு வுண்மை யுரையா லுண்டுயி ரெனவே
யறிதலசத் தென்னு
நிரைத்த முத லாவரண நிவர்த்தகமாம்
பரோட்சம்" (வே. சூ.) என்றபடி,

சுருதி குரு என்னும் இவர்களின் சத்திய வாக்கியங்களைக் கேட்டு, 'ஜீவசாட்சியாகிய பிரத்தியகாத்மா உண்டு' என்றறிதல் பரோட்ச ஞானமாம். இது 'குடம் இருக்கிறது' எனப் பிறர் கூறக்கேட்டறிதல் போன்றதாம். இது, பிரத்தியகாத்மா இல்லை (நாஸ்தி) என்னும் அசத்துவாபாதகமாகிய முதலாவரணத்தை நீக்குவதாம்.

(5) அபரோட்ச ஞானம்:—

"நீபிரம மெனும் வேதமொழி விசாரத்தால்
வாத்துரியன் தானெனவே யறிந்திடுத லபானுவரண
நிவர்த்தகமாகு மபரோட்ச ஞானம்." (வே. சூ.) என்றபடி,

பின்பு அவன், 'நீயே பிரஹ்மம்' என்னும் வேதாந்த வாக்கிய விசாரத்தினால், 'நானே பிரத்தியகாத்மா' என்று, தன் நிஜ சொரூப சாட்சாத்காரத்தை யடைதல் அபரோட்ச ஞானமாம். இது 'குடம் இருக்கின்றது' எனப், பிறர் கூறக் கேட்டதை நேரிற் காண்டல் போன்றதாம். இது 'அது இருந்தால் தோன்றாதா (நபாதி)', என்னும் அபானுபாதக ஆவரணத்தை நிவிர்த்திப்பதாம். அன்றியும்,

இந்த அபரோட்ச ஞானம், அஞ்ஞானம் ஆவரணம் விட்சேபம் இம்மூன்றையும் நசிக்கச் செய்வதாம்.

(6) சோக நிவிர்த்தி:—

"துரியநிலை யடைந்ததற்பின் நான்கருத்தன் நான்போத்
துருவென்னுஞ் சீவ வுருத்துக்க மகன்றிடுத
லரியதெனு மச்சோக நிவிர்த்தியாம்." (வே. சூ) என்றபடி,

அபரோட்ச (பிரத்தியட்ச) ஞானமென்னும் ஆத்ம சாட்சாத்காரத்தை யடைந்தபின், 'நான் கருத்தா, நான் போக்தா' என்னும் சீவத்தன்மையாகிய துக்கம் நீங்குதலே சோக நிவிர்த்தியாம். (ஜனன மரணாதிகளால் வரும் துக்கம் சோகமாம்.)

(7) நிரங்குச திருப்தி:—

"செய்தே யடைதலுறும் பலனனைத்து மடைந்தனமென்
றமைதல் பரிவி னிரங்குசத் திருப்தி
இரண்டு மபரோட்ச பலமாகும்." (வே. சூ) என்றபடி,

'நான் செய்ய வேண்டியவைகளை யெல்லாம் செய்து விட்டேன்; அடைய வேண்டிய வனைத்தையும் அடைந்து விட்டேன்; இனி செய்யத் தக்கதும் அடையத்தக்கதும் ஒன்று மில்லை' என்று, தனது இயல்பான சுகவடிவா யமைந்திருத்தலாம். (நிரங்குச திருப்தி=தடையற்ற ஆனந்தம்.)

சோக நிவிர்த்தி, நிரங்குச திருப்தி என்னும் இவ்விரண்டும் அபரோட்ச ஞானத்தின் பலனும்.

இவ்வவஸ்தைகள் யாவும், ஆராய்ந்து பார்க்குமிடத்து, ஜீவனிடத்து மில்லை; ஆபாசனிடத்துள்ளனவாம்.

## தசமன் கதை.

விவேகாநந்தா! இவ்வவஸ்தைகள் நன்கு விளங்கும் பொருட்டு ஆன்றோர் ஒரு கதையைத் திருஷ்டாந்தமாகக் கூறுவர். அந்தக் கதைக்குத் 'தசபுமான் கதை' என்பது பெயராம். அதனை உனக்குக் கூறுகிறேன், கேள்.

"பத்துமனிதர் ஒன்றாகக்கூடி ஊர்ப்பிரயாணம் போய்க் கொண் டிருந்தனர். வழியில் நதியொன்று குறுக்கிட்டது. அதில் ஜலம் சிறிது அதிகமாய்ப் போய்க்கொண் டிருந்தமை யால், அவர்கள் அதனைப் பயத்தோடு நீந்திக் கடந்து கரை யேறினர். ஏறியதும் பதின்மரும் பத்திரமாக வந்து சேர்ந்தோமா? என்றறிய வேண்டி, அவர்களி லொருவன் எண்ணினான். ஒன்பதின்மரை எண்ணினான்; ஆனால் தன்னை எண்ணிக்கொள்ளவில்லை. ஆதலின், ஒன்பதுபேர் மட்டும் இருப்பதாகக் கருதினனே யன்றி, அவ்வொன்பதுபேரை எண்ணின தான் பத்தாமவன் என்பதை அவன் அறியாதவ னாய் 'பத்தாமவன் இல்லை; இருந்தால் தோன்றமாட்டானா? அவன் ஆற்றில் மூழ்கி இறந்தான்' எனத் துக்கமுற்றான்.

அவ்வமயம் அவ்வழிசென்ற அன்னிய னொருவன் அவனது சோகத்தைக் கண்டு விசாரித்து, அவன் அறியாமைக்காக வருந்தி, 'தசமன் (பத்தாமவன்) இருக் கின்றான்' என மொழிய, அவன் வார்த்தையைக் கேட்டு தசமன் இருக்கிறா னென்றெண்ணி, அவ்வன்னிய னைப்பார்த்து, 'அப்பா! அப்பத்தாமவன் எங்கே?' என்று கேட்க, அவன், ஒன்பது பேரை வரிசையா யெண்ணி,

'இதோ, நீ தான் தசமன்' என்று காட்ட, அவன் உண்மை யுணர்ந்து 'நானே தசமன்' என்று தன்னைத் தானறிந்தான். அதனால் அவன் துக்கம் நீங்கி, தனது நிஜநிலையில் சுகவடிவாய் விளங்கினான்.

## தசமன் கதையில் சப்தாவஸ்தை.

இக்கதையில்,

ஒன்பதின்மரை எண்ணிய தானே தசமன் என்று தன்னை அறியாதிருந்ததே அஞ்ஞானம்.

'பத்தாமவனில்லை; இருந்தால் காணப்படானா?' என்றெண்ணியதே 'நாஸ்தி, நபாதி' என்னும் இருவகை ஆவரணமாம்.

'பத்தாமவன் ஆற்றில் மூழ்கி இறந்தான்' என்னும் வருத்தமே விட்சேபம்.

'பத்தாமவன் இருக்கிறான்' என, வழிப்போக்கன் சொன்னதைக் கேட்டறிந்தது பரோட்ச ஞானம்.

'பத்தாமவன் நீதான்' என்று அவன் காட்டிய போது, தன்னைத் தசமனாக அறிந்ததே அபரோட்ச ஞானம்.

'ஆற்றில் மூழ்கி இறந்தான்' என்றுண்டான துக்கம் நீங்கியதே சோக நிவிர்த்தி.

'பத்தாமவன் நானே' என்று, தன் நிஜநிலையில் சுகவடிவாக விளங்கியதே நிரங்குச திருப்தி.

அன்பனே! 'நான் துக்கி' என்னும் எண்ணமும், 'உடம்பினுள் ஜீவனைப் பார்த்துபதேச மோதுவாரே' என்று கைவல்ய நவநீதம் கூறுகிறபடி 'குருபதேசமும்,' 'நான் பிரஹ்மம்' என்னும் ஞானமும் சிதாபாசனுக்கேயாம் என்பது, இக்கதையால் வெள்ளிடை மலைபோல் விளங்கும். இன்னும் ஏதேனும் சந்தேக மிருக்கின்றதா?

**விவேகா:**—சற்குருவே! 'நான் பிரஹ்மம்' என்னும் ஞானம் ஆபாசனுக் குண்டாகுமாயின் அந்த ஞானம் எதார்த்த ஞான மாகாது; பிராந்தி ஞானமேயாம். ஏனெனின், கூடஸ்தனும் பிரஹ்மமும் ஒன்று; ஆபாசன் பிரஹ்மத்தினும் வேறு என்பது உண்மை. ஆனால், அந்த ஆபாசனுக்கு 'எனது அதிஷ்டானமாகிய கூடஸ்தன் பிரஹ்மமாம்' என்னும் ஞானம் உண்டாதல் வேண்டும். அவ்வாறு உண்டாகுமாயின் அது எதார்த்த ஞானமாம். ஆபாசனுக்கு உண்டாகும் ஞானம் எதார்த்த ஞானமெனப்பொருந்தாது. மித்தியா ஞானமே யாகுமன்றே? என்னும் இச்சங்கை எனக்கு உண்டாகின்றது.

**குரு:**—விவேகானந்தா! 'நான் பிரஹ்மம்' என்னும் ஞானம் கூடஸ்தனுக்கு உண்டாகாமல் புத்திசகித ஆபாசனுக்கு உண்டாயினும் அந்த ஆபாசன் கூடஸ்தனையும் தன் சொரூபத்தை (ஆபாசத்தை)யும் தன்னாத்மாவாக (தானாக)வே அறிகிறான். அந்த ஆத்மா 'நான்' என்னும் சொல்லால் கிரகிக்கப்படுகின்றது. இதுவே 'நான்' என்னும் சொற்குப் பொருளாம்.

### இருவகைச் சாமானாதி கரணியம்.

இப்பொழுது, 'நான்' என்னும் சப்தத்தினால், கூடஸ்தன் புத்தி சகித ஆபாசன் என்னும் இரண்டு வஸ்துக்கள் கிரகிக்கப்படுகின்றன.

இங்கு இவ்விஷயம் முக்கியமாக அறியத்தக்கதாம்:—அபேதம் இரண்டு வகைப்படும்.

ஒன்று, கடாகாசத்திற்கும் மகாகாசத்திற்கும் உள்ளது போன்ற அபேதமாம்; மற்றொன்று, முகத்திற்கும் கண்ணாடியிற் காணப்படும் அம்முகத்தின் பிரதிபிம்பத்திற்கு மிருப்பது போன்ற அபேதமாம். இவற்றுள்,

(1) கடாகாசத்திற்கு மகாகாசத்தோடு எப்போதும் அபேதமே யிருக்கின்றது. இதனைப் பெரியோர் முக்கிய சாமானுதிகாணியம் என்பர். ஒரு வஸ்துவிற்கு மற்றொரு வஸ்துவோடு எப்போதும் அபேத மிருக்குமாயின், அந்த வஸ்துவிற்கு அதனோடு முக்கிய சாமானுதிகாணியம் சொல்லப்படுகின்றது. இக்காரணத்தால் 'நான்' என்னும் சப்தத்தால் விளங்கும் கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு எப்போதும் அபேத மிருக்கின்றது.

(2) கண்ணாடியிற் காணப்படும் முகத்தின் பிரதிபிம்பத்தைப் பாதிப்பதால் (பொய்யென்று நிச்சயிப்பதால்), அப் பிரதிபிம்பத்திற்கு பிம்பத்தோடு அதாவது முகத்தோடு அபேத முண்டாகின்றது. இதனைப் பாதசாமானுதிகாணிய மென்பர். ஒரு வஸ்து பொய் யென்று நிச்சயிக்கப்படுவதால், அந்த வஸ்துவிற்கு மற்றொரு வஸ்துவோடு அபேத முண்டாயின், அந்த வஸ்துவிற்கு அதனோடு பாதசாமானுதிகாணியம் சொல்லப்படுகின்றது.

இக்காரணத்தால் 'நான்' என்னும் சப்தத்தினல் விளங்குகின்ற ஆபாசனுக்குப் பிரஹ்மத்தோடு தன் சொரூபத்தைப் பாதிக்க (ஆபாச வடிவம் அல்லது சாயை பொய் யென்று நிச்சயிப்பதால்) அபேத முண்டாகின்றது. ஆதலால், 'நான்' என்னும் சப்தத்தில் விளங்குகிற ஆபாசன் பிரஹ்மமாம்; வேறன்று. இவ்வாற்றால்,

(1) 'நான்' என்னும் சப்தத்தால் விளங்குகிற கூடஸ்தனுக்கு பிரஹ்மத்தோடு முக்கிய அபேத முண்டு.

(2) ஆபாசனுக்கு பாதத்தால் அபேத முண்டு.

ஆகையால், விவேகாநந்தா! ஆபாசனுக் குண்டாகும் 'நான் பிரஹ்மம்' என்னும் ஞானம் மித்தியாஞான மாகாது; எதார்த்த ஞானமேயாம் என்றறிக.

## பிரபஞ்ச சிருஷ்டி.

விவேகா:—சுவாமி! இத்தேகாதி வடிவப் பிரபஞ்சம் யாரால் சிருஷ்டிக்கப்பட்டது.

குரு:—ஈசுவரனால்.

விவேகா:—கடத்தினுற்பத்திக்குக் குயவன் நிமித்த காரணமாகவும் மண் உபாதான காரணமாகவும் இருத்தல் போல, ஒரு பொருளின் உற்பத்திக்கு நிமித்த காரணம் உபாதான காரணம் என்னும் இரண்டு காரணங்கள் தேவை. அதன்படி, ஈசுவரன் உலக சிருஷ்டிக்கு நிமித்த காரணனுவன். ஆயின், உபாதான காரணம் எது? ஈசுவரன் இரண்டாவதற்றவர். எதை உபாதான காரணமாகக்கொண்டு அவர் இவ்வுலகைச் சிருஷ்டித்தார்.

குரு:—ஈசுவரன் சர்வ வல்லமையுடையவ ராதலின், தாமே அபின்ன நிமித்த உபாதான காரணமா யிருக்கிறார். எங்ஙன மெனில்: எட்டுக்காற் பூச்சி என்னும் சிலந்திப் பூச்சியானது தன் வலைக்குத் தானே உபாதான காரணமாயும் நிமித்தகாரண மாயு மிருக்கின்ற தன்றோ? தன் சரீரப் பிரதானத்தால் உபாதான காரணமா யிருக்கின்றது; புத்திப் பிரதானத்தால் நிமித்த காரணமாயு மிருக்கின்றது. அதுபோல, ஈசுவரன், தன் சரீரமான மாயையின் பிரதானத்தால் ஜகத்திற்கு உபாதான காரணமாயும் சேதனப் பிரதானத்தால் நிமித்த காரணமாயும் இருக்கின்றாரென் றறிக.

விவேகா:—பிரஹ்மம் கிரியை யற்றதென முன்பு பிரஹ்ம லட்சணம் கூறுமிடத்துச் சொல்லி யிருக்கின்றீர்கள். பிரஹ்மம் கிரியை யற்றதாயின் உலக சிருஷ்டி செய்த தெங்ஙனம்?

குரு:—பிரஹ்மம் கிரியை யற்றதே. அந்தப் பிரஹ்மத்திஞல் உலக சிருஷ்டி யுண்டானதாகக் கூறவில்லையே. ஈசுவரனன்ரு சிருஷ்டிகர்த்தா.

விவேகா:—பிரஹ்மம் வேறு ஈசுவரன் வேரு?

குரு:—முன்பு, நான்கு ஆகாச திருஷ்டாந்தத்தால் ஒரே சேதனமானது பிரஹ்மமெனவும் ஈசுவர னெனவும் கூடஸ்த னெனவும் சீவ னெனவும் நான்கு பேதமாகக் கற்பிக்கப்பட்ட தெனக் கூறியதை மறந்தனைபோலும்! அவற்றை ஞாபகப்படுத்திக் கொள்க.

விவேகா:—ஆஞல், சீவர்கள் செய்யும் புண்ணிய பாவங்களுக்குத் தக்க பலன்களைத் தருவதும் ஈசுவரன் தாஞே?

குரு:—மாயை, அதிற் பிரதிபிம்பித்த சேதனத்தின் சாயை (ஆபாசம்), மாயையின் அதிஷ்டான சேதனம் இம் மூன்றும் சேர்ந்து ஈசுவர னெனவும், அந்த ஈசுவரன் மேகாகாசத்திற்குச் சமானமானவ னெனவும் முன்பு கூறினேன்.

கடாகாச ஜலாகாச திருஷ்டாந்தத்தால் கூறப்பட்ட கூடஸ்த ஜீவர்களில், ஜீவ சொரூபத்திலுள்ள ஆபாசாம்சமே புண்ணிய பாவங்களைச் செய்து அவற்றின் பலனை அனுபவிக்கிற தென்பதையும் நீ அறிவாய். அங்ஙனமே, ஈசுவரனிடத்துள்ள ஆபாசாம்சமே கர்ம பலத்தைத் தருவதாம் என்றறிதல் வேண்டும். ஆதலால்,

சீவனிடத்துள்ள சேதனும்சத்தில், கர்மம் அவற்றின் பலன் என்னு மிவற்றின் சம்பந்த மில்லை; ஈசுவரனிடத்துள்ள சேதனும்சத்தில் பலனைத் தருதலாகிய சம்பந்தமு மில்லை.

## ஜீவேசுவர பேதம்.

**விவேகா:**—ஈசுவரனை மேகாகாசத்திற்கும் ஜீவனை கடஜலா காசத்திற்கும் ஒப்பிட்டீர்கள். அவ்விரண்டு ஆகாசங் களுக்கும் பேத மிருப்பதாகத் தெரியவில்லை. ஏனெ னில், இரண்டும் சாயைகளே. ஆகலின் ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் பேதம் என்ன? ஈசுவரனுக்கு சிருஷ்டித்து வம் ரட்சகத்துவம் முதலிய சத்திக ளிருத்தல்போல ஜீவனுக்கு ஏன் இல்லை.

**குரு:**—சீவனுக்கும் ஈசுவரனுக்கும் சொரூபத்தில் பேத மில்லை யாயினும் உபாதியால் பேத முண்டு. எவ்வா றெனின்:

**ஈசுவரன்:**—சுத்த சத்துவ குணப் பிரதானமான மாயையை உபாதியாக வுடையவன்.

**சீவன்:**—மலின சத்துவகுணப் பிரதானமான அவித்தையை உபாதியாக வுடையவன்.

(சுத்த சத்துவ மலின சத்துவங்களின் தன்மை முன் னர் கூறப்பட்டது.)

சுத்த சத்துவ குணமானது பிரகாச வடிவமாயும் ஞானோற்பத்திக்குக் காரணமாயு மிருப்பதாம். ஆகலின், அதனை உபாதியாக வுடைய ஈசுவரன் சர்வசக்தி வாய்ந்தவ ராயும் சுவதந்திரராயும் எல்லாவற்றையும் அறியும் சர்வஞ்ஞ ராயு மிருக்கிறார். அவருக்குத் தன் சொரூபத்தில் மறைப் பில்லை. அவர் தம் சொரூபத்தை நன்குணர்ந்திருக்கின்றார். அவர் மாயையைத் தம் வசப்படுத்திக்கொண் டிருப்பவரே யன்றி அதன் வசப்பட்டவ ரல்லர். சொரூபாவரண மில்லா தவராகலின் அவர் பந்த மற்றவர். சதா முக்தரா யிருப் பவர்.

ஜீவோபாதியாகிய அவித்தை மலின சத்துவ குண முடையதாகலின், அந்த ஜீவனுடைய உண்மையான சொரூபம் அவனுக்குத் தோன்றாதவாறு அது மறைக்கின்றது. ஆவரணம் (மறைப்பு)செய்தல் அவித்தைக்கு இயற்கையாம். அதனால் ஜீவன் பந்த முடையவனாயும் அற்ப சக்தியுடையவனாயும் பரதந்திரனாயும் அற்ப அறிவுடையவனாயு மிருக்கின்றான். தவிர,

சுத்த சேனமாகிய பரப்பிரஹ்மமே தன்னிடத்துண்டான மூலப் பிரகிருதி என்னும் மாயாசக்தியோடு கூடி எல்லா உலகங்களையும் பிரமாதியரையும் சிருஷ்டித்து, தான் சர்வபரிபூரணராகலின் அப்பிரஹ்மாதியரிடம் அந்தர்யாமி (உள்ளீடா யிருப்பவர்) யாயிருந்து புத்தி முதலிய இந்திரியங்களை அதனதன் காரியங்களைச் செய்யுமாறு பிரேரேபிக்கின்றமையின் பிரஹ்மமே ஈசுவரனாம். அன்றியும்,

## சமஷ்டி வியஷ்டி பேதம்.

ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் சமஷ்டி வியஷ்டி வகையினும் பேதமுண்டு. இதுவே ஈசுவரனுக்கும் ஜீவனுக்குமுள்ள பேதமாம்.

விவேகா:—சமஷ்டி வியஷ்டி என்றால் என்ன? ஜீவேசுவரர்களுக்குள்ள சமஷ்டி வியஷ்டி பேதம் எத்தகையது?

குரு:—எல்லாவற்றையும் ஒன்றாகக் கூட்டிப் பார்ப்பது சமஷ்டி; தனித் தனியாகப் பார்ப்பது வியஷ்டி. அதாவது:- வனமெனல் சமஷ்டி; மரமெனல் வியஷ்டி. சீவன் ஒரு சரீரத்தைத் தனதென்று அபிமானிப்பவன்; ஈசுவரன் எல்லாச் சரீரங்களையும் தன் சரீரமென்று அபிமானிப்பவன்; அதாவது, எல்லாச் சரீரங்களும் ஈசுவரனுக்குச் சரீரமாம். இவ்வகையால் இருவர்க்கும் பேத முண்டு.

## ஜீவ சரீரத்திரயம்.

விவேகா:—இதனை நன்கு விளக்கிக் கூறல்வேண்டும்.

குரு:—(1) ஜீவன் வியஷ்டியாகிய ஒரு தூல சரீரத்தை 'நான்' என்று அபிமானித்துக் கொண்டிருக்கிறான். இதனால் விசுவன் எனவும் வியாவகாரிக ஜீவன் எனவும் சிதாபாசன் எனவும் கூறப்படுகிறான்.

இவன் 'தூலதேகமே நான்' என்னும் அபிமானங் கொண்டு அந்தக்கரண விருத்தியுடன் கூடி சாக்கிராவஸ்தையில் மனைவி மக்கள் வீடு நிலம் முதலிய வஸ்துக்களினிடத்தில் 'எனது எனது' என்னும் அபிமானமுடையவனாயிருத்தலால் விசுவனென்றும்,

தூல சரீரத்தின் மூலமாகச் சகல வியவகாரங்களையும் செய்தலால் வியாவகாரிக னென்றும்,

அந்தக்கரண பிரதிபிம்பனாயிருத்தலால் சிதாபாசனென்றும் பெயர்களுண்டாயின.

(2) ஜீவன் வியஷ்டி வடிவமாகிய ஒரு சூட்சும சரீரத்தை 'நான்' என்று அபிமானிப்பவன். அதனால் அவன் (சூட்சும சரீராபிமானியாகிய ஜீவன்), தைஜசன், பிராதிபாசிக ஜீவன், சொப்பன கற்பிதன் என்னும் பெயர்களையடைகிறான்.

ஜீவன் சொப்பனாவஸ்தையில் பிரகாச ரூபமான மனதுடன் கூடியிருத்தலின் தைஜசன் என்றும்,

சொப்பனத்திற் பிராதிபாசிக சத்தையாயுள்ள பெண்டு முதலியவற்றோடு சம்பந்தப்பட்டிருத்தலின் பிராதிபாசிக ஜீவன் என்றும்,

சொப்பனத்தைக் கற்பிப்பவனா யிருத்தலின் சொப்பன கற்பிதன் என்றும் பெயர்களுண்டாயின.

(3) ஜீவன் வியஷ்டி வடிவமாகிய ஒரு காரண சரீரத்தை 'நான்' என்று அபிமானிப்பதால், பிராஞ்ஞன், பாரமார்த்திகன் என்று அழைக்கப்படுகிறான்.

இந்த வியஷ்டி காரண சரீராபிமானி அஞ்ஞானாந்தகாரமாகிய நித்திராவஸ்தையில், தேகம் இந்திரியங்கள் அந்தக்கரணம் முதலியவை தோன்றா திருப்பினும், தான் மாத்திரம் ஞானப்பிரகாசனாய் விளங்குகின்றானாகலின் பிராஞ்ஞன் என்றும்,

அவனே, சாக்கிர சொப்பன சுழுத்தியாகிய மூன்று அவஸ்தைகளிலும் அனுசூதமாய் (உள்ளீடாய்) இருப்பதால் பாரமார்த்திக னெனவும் பெயர்களுண்டாயின.

## ஈசுவர சரீரத்திரயம்.

இனி, ஈசுவரனுடைய சரீரத்திரயத்தைக் கூறுகிறேன், கேட்பாயாக.

(1) ஈசுவரன் உலகத்திலுள்ள எல்லாத் தூல சரீரங்களையும் தன் ஸ்தூல சரீரம் என்று அபிமானித்துக் கொண்டிருப்பவன். ஆகலால், சமஷ்டிவடிவ சகல ஸ்தூல சரீரங்களும் அவனுக்குத் தூல சரீரமாம். அதனால் விராட்டு வைசுவானரன் வைராஜசன் என்னப்படுகிறான்.

சமஷ்டியாகிய எல்லாத் தூல சரீரங்களையும் 'நான்' என்று அபிமானித்து, சாக்கிராவஸ்தையை யடைந்து, தேவ மனுஷ பசு (மிருகம்) பக்ஷியாதி நாநா பேத சரீரங்களோடு நாநா பேத வடிவங்களாய் விளங்குதலால் விராட்டாம்.

எல்லா சரீரங்களிடத்தும் வியாபித்து விசுவாசமுடையவனா யிருத்தலால் வைசுவாநரனும்.

நாநாவித உருவங்களையும் நாமங் (பெயர்)களையும் உடையவனாய்ப் பிரகாசிப்பவனாகலின் வைராஜசனும்.

(2) ஈசுவரன் சமஷ்டியாகிய சூட்சும சரீரங்களெல்லாவற்றையும் தன் சூட்சும சரீரமாக அபிமானிக்கிறான். அதனால், இரணியகர்ப்பன் சூத்திராத்மா பிராணன் எனப்படுகிறான்.

சமஷ்டியாகிய எல்லாச் சூக்கும சரீரங்களையும் 'நான்' என்றபிமானித்து சொப்பனவஸ்தையில் ஞான சக்தியுடன் கூடியிருத்தலால் இரணியகருப்பனாம்.

ஓர் கயிற்றி (சூத்திரம்) னிடத்துக் கோக்கப்பட்ட முத்து மாலையில் அக்கயிறானது எல்லா முத்துக்களினுள்ளும் வியாபித்திருத்தல் போல, எல்லாவற்றிலும் வியாபித்திருத்தலால் சூத்திராத்மாவாம்.

கிரியா சக்தியுடன் கூடினவனாயிருத்தலின் பிராணனாம்.

(3) ஈசுவரன் சமஷ்டியாகிய காரண சரீரங்களெல்லாவற்றையும் 'நான்' என்றபிமானித்து, நித்திராவஸ்தை (சுழுத்தி)யில் எல்லா ஜீவர்களின் அந்தக்கரணங்களையும் அவற்றின் சம்பந்தமான வாசனைகளையும் தன்னிடத்தில் லயமாக்கிக்கொண்டு, மீண்டும் முன் போலவே சாக்கிர சொப்பனங்களையும், அந்த சாக்கிர சொப்பனங்களில் பிரபஞ்சங்களையும் தன் சக்தியாலுண்டாக்குகிறான். அந்த ஈசுவரனே ஆகாசாதி பஞ்சபூதங்களிலும் சகல ஜீவர்களின் புத்தியினிடத்தும் வியாபித்து, அவ்வத் தத்துவங்களை அதனதன் காரியத்தைச் செய்யுமாறு பிரேரேபிக்கின்றான். அதனால் அந்தரியாமி எனப்படுகிறான். மேலும், அவன் நித்திராவஸ்தையில் நாமரூபங்களற்றவனா யிருக்கிறான்.

இவ்வாறு ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் சமஷ்டி வியஷ்டி வடிவத்தாலும் பேதமுண்டென்றறிக.

## அந்தரியாமி.

**விவேகா:**—சுவாமி! தாங்கள் முன்பு ஜீவசாட்சியாயுள்ளவன் கூடஸ்தன் என்வும், அவனே பாப்பிரஹ்மத்தினும்

வேறாகாத ஆத்மாவெனவும் கூறினீர்கள். இப்பொழுது அந்தரியாமி என்னும் வேறு பெயரையுடைய ஈசுவரன் என்று சொல்கின்றீர்கள். இது சந்தேகமாயிருக்கின்றது.

குரு:—ஒரு ஆத்மாவே ஒவ்வொரு காரணத்தால் சாட்சி எனவும், சைதன்யம் எனவும், கூடஸ்தன் எனவும் அழைக்கப்படுகிறான். பெயர்களில் பேதமே யன்றிப் பொருளில் பேதமில்லை.

முற்கூறியவாறு, முத்துமாலையிலுள்ள முத்துக்களனைத்தினும் ஒரு சூத்திரமே வியாபித்திருத்தல்போல, சகல ஜந்துக்களின் சரீரத்தினும் ஒரு ஆத்மாவே வியாபித்திருக்கின்றது. அதனால் அது அந்தரியாமி எனப்படுகின்றது.

## மாயை அவித்தைகளின் லட்சணம்.

விவேகா:—கருணாநிதியே! மாயை அவித்தை என்பன யாவை? அவை எங்கிருக்கின்றன. அவற்றின் சொரூபமென்ன?

குரு:—ஞானகுமாரா! மாயை அவித்தை என்னும் பெயர்கள் ஒரு வஸ்துவிற்கே யுரிய பெயர்களாம். இம்மாயைக்குத் தமம், மோகம், அநிருதம், பிரகிருதி, சத்தி, அஞ்ஞானம், துச்சை, அநிர்வசனீயம் முதலிய வேறு பெயர்களு முண்டு. இது சுதந்திரமான தன்றாம். ஏனெனின், மாயை சத்தி வடிவமானது. சத்தி சத்தனைத் தவிர வேறாக இருப்பதன்று. ஆகலின், மாயையும் அக்கினியினிடத்துள்ள வெப்பசக்திபோல, சேதனத்தை ஆசிரயித்திருக்கின்றது. ஆயினும், இது, சர்வ சாட்சியாயுள்ள பிரஹ்மத்தினிடத்தில் ஜீவேசுவர ஜகத்தைக் கற்பித்தலால் சுதந்தரமு முடையதாம். அசத்து, ஜடம், துக்கம், அநித்தம், கண்டம் என்னும்

லட்சணங்களை யுடையது. சத்துவம், ரஜசு, தமசு என்னும் முக்குணங்களுடையது. அதனால் பலவகைப் பட்ட விசித்திரமாகிய நாம ரூபங்களையுடைய உலகத்தைச் சிருஷ்டிக்கும் சாமர்த்திய முடையது. மேலும்,

அது, சத்து மன்று, அசத்துமன்று, சதசத்து மன்று. சாவயவ (அவயவமுடையது) மன்று, நிரவயவ மன்று, சாவயவ நிரவயவமு மன்று. பின்ன மன்று, அபின்ன மன்று, பின்னா பின்னமு மன்று. எங்ஙனே யெனின்.

(1) தனது எதார்த்த சொரூபத்தை உணர்வதாகிய தத்துவ ஞானத்தாற் பொய் யென்று நிச்சயிக்கப்படுதலின் சத்தன்று.

(2) உலக காரணமாயிருத்தலாலும், 'நான் அஞ்ஞானி' என்னும் அனுபவ மிருத்தலாலும் அசத்தன்று.

(3) சத்தும் அசத்தும் ஒன்றுக் கொன்று மாறுபட்டவை யாகலின் சதசத்து மன்று.

(4) திரவியமாக வில்லா திருத்தலின் சாவயவமன்று. (திரவியத்திற்கே அவயவமுண்டு.)

(5) உலகவடிவாய்ப் பரிணமித்தலின் நிரவயவ மன்று.

(6) சாவயவமும் நிரவயவமும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை யாகலின் சாவயவ நிரவயவமு மன்று.

(7) பிரஹ்மத்திற்குப் பின்னமா (வேறு)க இல்லாமையின் பின்னமு மன்று.

(8) பிரஹ்மம் சித்தாகவும் மாயை ஜடமாகவும் இருத்தலின், சித்தும் ஜடமுமாக வுள்ள இரண்டிற்கு அபேதம் கூடாமையின் அபின்னமு மன்று.

(9) பின்னமாகவும் அபின்னமாகவும் ஒரு பொருளில்லாமையின் பின்னு பின்னமு மன்று.

ஆகலின், அது (மாயை) இன்ன தன்மையினை யுடையதென்று நிச்சயித்துக் கூற முடியாததா யிருக்கின்றது. அதனால் அநிர்வாச்சியமாம். 'அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா லவாச்சிய வடிவாகும்' என்று, கைவல்ய நவநீதம் கூறுவது ஈண்டு உணரற்பாலதாம். மேலும், அது உற்பத்தியற்ற தாகலின் அநாதியாம். அது அவஸ்துவாம். கயிற்றிற் றோற்று மரவு, கிளிஞ்சலிற் றோற்றும் வெள்ளி, கானல் நீர் முதலியவற்றைப் போல, கற்பிதமாயும் பிராந்தி வடிவமாயும் மித்தையாயும் இருப்பதாம்; அதனால் அவஸ்துவாம். அதுதான் மாயை.

## மித்தியா லட்சணம்.

விவேகா:—மித்தையாவ தென்ன?

குரு:— விசாரிக்காதபோது மெய்யாகவும், விசாரிக்கிற போது தனக்கென ஒரு பொருளில்லாததாயும் இருப்பது எதுவோ அது மித்தையாம். முக்காலத்தும் பொய் யென்று நிச்சயித்தற் குரியது மித்தையாம். எவ்வா றெனின், கயிற்றினிடத்துத் தோன்றும் பாம்பு விசாரணை யின்மையால் காணப்பட்டது. விசாரிக்குமிடத்து பாம்பு இல்லாமற் போகிறது. ஆகலின், கயிற்றிற் காணப்பட்ட அப்பாம்பு மித்தையானதாம். பாம்பாகக் காண்பதற்கு முன்னும் அங்கு பாம்பில்லை. பாம்பாகக் காணுங்காலத்தும் அங்கு பாம்பில்லை. விசாரணைக்குப் பின்னும் அங்கு பாம்பில்லை. ஆகவே, அங்குக்கண்ட பாம்பு முக்காலத்தும் பொய்யென்று நிச்சயித்தற் குரியதாம். ஆகலின் அது (பாம்பு) மித்தை

யாம். இந்த மித்தை கற்பித மென்றும் பிராந்தி யென்றும் கூறப்படுவது முண்டு.

விவேகா:—மித்தையாகிய மாயையை உண்டெனக் கொள்வதெப்படி ?

குரு:—மாயையின் காரியமாகிய உலக மிருத்தலாலும், 'நான் அஞ்ஞானி' என்னும் அனுபவ மிருத்தலாலும் மாயை உண்டென்று அறியலாம்.

விவேகா:—ஞானபானுவே! அடியேனுக்கு மற்றொரு சந்தேக முளது. அது யாதெனின்; பிரஹ்மமானது தேச கால வஸ்து பரிச்சேத மற்றதாகலின், இது இரண்டாவதற்ற ஏகவஸ்துவா மென்பதுண்மையே. அங்ஙனமாக, அதற்கு மாறான லட்சணமுடைய அனாத்ம வஸ்துவாகிய தேகாதிப் பிரபஞ்சம் இருக்கின்றதென் கிறீர்களே. அனாத்ம வஸ்துவாகிய தேகாதிப் பிரபஞ்சம் இருக்கையில் ஆத்மா ஏக வஸ்துவெனல் எவ்வாறு பொருந்தும்?

குரு:—பிரஹ்மம் பரிபூரண வஸ்துவாகலின், அதன்கண், உலகம் வேறு பொருளாக வின்றாம். ஆனால், கட்டையிற் கள்வனும் கானலினீரும் கயிற்றிலரவும் போலக் கற்பனையா யிருப்பதாம். இவ்வுண்மையை விளக்கச் சாத்திரத்திற் கூறப்பட்டுள்ள மூவகைப் பட்சங்களையும் கூறுகின்றேன். அவை சிருஷ்டி திருஷ்டி வாதம் (கிரம சிருஷ்டி), திருஷ்டி சிருஷ்டி வாதம் (யுகபத் சிருஷ்டி), அஜாதவாதம் என்பனவாம்.

## (1) சிருஷ்டி திருஷ்டி வாதம்.

முன்பு, மாயையின் லட்சணத்தைச் சொன்னபோது, அந்த மாயை அக்கினியிற் சூடிருப்பது போல பிரஹ்மத்தினிடத்துள்ள ஓர் சக்தி என்றும், அது கிளிஞ்சலில் வெள்ளி

போலக் கற்பனையா யிருப்பதென்றும், ஆதலின் அது இன்ன தன்மையினை யுடையதென்று எவராலும் நிச்சயித்துக் கூறத்தக்க தன்றென்றும், அதனுல் அதனைப் பெரியோர் அநிர்வசனீயமெனக் கூறுவரென்றும் சொன்னேனன்றே?

விவேகா:—ஆம்,

குரு:—விசாரியாத காலத்து மெய்போலத் தோன்றி விசாரிக்குங் காலத்துத் தனக்கென ஒரு சொரூபமுமின்றிக் கெடுமியல்பினை யுடையதாகிய அந்த மாயை சத்துவம் இராசதம் தாமதம் என்னும் மூன்று குணங்களை யுடையதாயிருக்கும். அவற்றுள்,

சத்துவத்திற்கு (1) மாயை என்றும், இராசதத்திற்கு (2) அவித்தை என்றும், தாமதத்திற்கு (3) பிரகிருதி என்றும் பெயராம்.

(1) அந்த மாயையில் பிரஹ்மம் நிர்மலஜலத்திற்காணப் படும் பிரதிபிம்பம் போன்று விளங்கும். அப் பிரதிபிம்பமே சர்வஞ்ஞத்துவாதி குணங்களையுடைய ஈசுவரனும். மேலும், அம்மாயை வியாபகமாகலின் பிரதிபிம்பனுகிய ஈசுவரனும் ஏகனும்.

(2) அவித்தையிலும் அவ்வாறே சைதன்யமானது கலங்கற்சலப் பிரதிபிம்பம்போல விளங்கும். அப் பிரதிபிம்பமே கிஞ்ஞிஞ்ஞத்துவாதி லட்சணமுடைய ஜீவன் எனப்படும். ஜீவர்களது அநாதியாகவுள்ள கர்மமானது சிருஷ்டிக்கு முன்பு மாயையில் (அவித்தையில்) ஒடுங்கிக் கிடத்தலின் சிருஷ்டி காலத்தில் ஜீவர்கள் அக்கர்மத்தோடு வெளிப்படுகின்றனர்.

அவித்தையானது கலங்கற் சலம்போலப் பிரகாசமின்றியதாயிருத்தலின் ஜீவனுக்கு மயக்கத்தைச் செய்வதா

யிருக்கும். மேலும், அது தன் அமிசத்தால் பலவாயிருத்தலின் ஜீவர்களும் பலராயிருப்பர்.

## ஜீவர்களின் பிரதம கர்மம்.

விவேகா:—ஜீவர்கள் கர்மவசத்த ரெனின், பிரதம (முதல்) சிருஷ்டியில் அவர்களுக்குக் கர்மம் எப்படி வந்தது?

குரு:—ஜீவர்களும் கர்மமும் நதிப்பிரவாகம் போல அநாதியாம். சிருஷ்டி என்றால், திடீரென்று ஒன்று உண்டாயிற்று எனக் கொள்ளலாகாது. ஜனனமும் மரணமும் இடைவிடாமல் சுற்றிச்சுற்றி வரும் ஓர் சக்கரமாம். அதன் சுழற்சியில் ஜனனபாகம் சிருஷ்டியாம். ஆகவே, கர்மம் அநாதியாம். அன்றியும், கர்மம் முதலா? ஜன்மம் முதலா? என்னுமாராய்ச்சி, வித்து முதலா? விருக்ஷம் முதலா? என்னும் ஆராய்ச்சி போல நிஷ்பலமாம். கிணற்றில் தவறி விழுந்தவன் அதினின்றும் வெளியேற முயலுதல் அறிவுடைமை யாகுமேயன்றி, வெளியேறு முன்னர் எப்படி விழுந்தேன்? ஏன் விழுந்தேன்? என்று யோசித்துக்கொண்டிருத்தல் பயனற்ற காரியமன்றோ? நிற்க,

## மூலப் பிரகிருதி.

ஜீவர்களின் கர்மத்தை யுத்தேசித்து, அவர்கள் அக்கர்மத்தை அநுபவிக்கவேண்டி யிருத்தலால், அவ்வநுபவத்தின் நிமித்தம் உலகத்தைச் சிருஷ்டிக்க வேண்டுமென்று ஈசுவரன் சங்கற்பிக்கின்றான். அச்சங்கற்பமாத்திரத்தால் மாயையானது மூலப் பிரகிருதி என்னும் தமோகுணப் பிரதானமாகிறது. (மூலப் பிரகிருதி: மூலம்=முதற்காரணம்; பிர=சத்துவம், கிரு=இராசதம்; தி=தாமதம். எனவே, உலகோற்பத்திக்கு முதற் காரணமாயும், சத்துவம் இராசதம்

தாமதம் என்னும் முக்குணங்களை யுடையதாயுமிருக்கும் சக்தி மூலப் பிரகிருதியாம்.) அது எப்படி யென்பதை விசார சாகரம் கீழ்வருமாறு கூறுகின்றது.

"கர்ப்பிணி ஸ்திரீ பிரசவத்திற்கு முன் தனக்கு சந்ததி யுண்டாகு மென்னும் எண்ணத்தால் சந்தோஷ முடையவள் போலிருக்கிறாள். அதனால் சத்துவகுணப் பிரதான முடையவள் போலிருக்கிறாள். பின், பிரசவ காலத்தில் வேதனை யுண்டாகிற காரணத்தினால் பிரசன்னத் தன்மை (சந்தோஷம்) மறைபட சூனியசித்த முடையவளாகிறபடியால் தமோகுணப் பிரதானம்போலாகிறாள். அது முன் வெண்ணிறமான மேகம் பின் மழைக்காலத்தில் கருநிற முடையதாதல் போலவாம். அவ்வாறு அநந்த ஜீவர்களோடு கூடிய பிரபஞ்ச வடிவ கர்ப்பமுடையதான சுத்த சத்துவப்பிரதான மாயை (ஈசுவரனது உபாதி) உளது. அது சிருஷ்டியினாரம்பத்தில் சுத்தசத்துவப் பிரதானம் மறைபட சிருஷ்டிக்கு யோக்கியமான தமோகுணப் பிரதானமான பிரகிருதியாகிறது.

## பஞ்ச பூதங்கள்.

அத் தமோகுணப் பிரதான மாயையிலிருந்து ஆகாசம் உண்டாயிற்று. ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவினின்று தேயுவும், தேயுவினின்று அப்புவும், அப்புவினின்று பிருதிவியும் முறையே உண்டாயின. இவ்வைந்தும் பஞ்ச பூதங்களெனப்படும்.

**விவேகா:**—இப்பூதங்கள் பிரகிருதி யென்னும் தமோ குணத்தினின்று முண்டாயின வென்று நிச்சயிப்பதெங்ஙனம்?

**குரு:**—இப்பூதங்கள் ஜடத்தன்மை யுடையவை. (தன்னையும் பிறவற்றையும் அறியாதது ஜடம் என்று முன்பே

கூறியிருக்கிறேன்.) இப்பூதங்கள் ஜடமாயிருத்தலால் அவற்றிற்குக் காரணமாயிருப்பதும் ஜடமாதல் வேண்டும். ஏனெனின், காரியவஸ்துவிற் காணப்படும் குணம் காரண வஸ்துவினுடையதேயாம் என்பது நியதி. அந்த ஜடத்தன்மை தமோ குணத்தினுடையதாம். ஆதலின், பூதங்கள் தமோகுணப் பிரதானப் பிரகிருதியினின் றுண்டாயின வென்றறிக.

### பஞ்சபூத குணங்கள்.

ஆகாசத்திற்கு - சப்தம் குணமாம்.

வாயுவிற்கு - சப்தத்தோடு பரிசமும் குணமாம்.

(வாயுவின் சொந்த குணம் பரிசம்; காரணத்தின் குணம் சப்தம். ஏனெனில், காரணத்தின் குணம் காரியத்திலுமிருக்குமன்றோ? வாயுவிற்கு - ஆகாசம் காரணமாதலின் அதன் குணம் வாயுவிலு மிருக்கின்றது. பிறவற்றிற்கும் இவ்வாறே கொள்க.)

தேயுவிற்கு - காரண குணங்களான சப்த பரிசங்களும் சொந்த குணமாகிய உருவமும் சேர்ந்து குணங்கள் மூன்று.

அப்புவிற்கு - காரண குணமான சப்தபரிச ரூபங்களும் சொந்த குணமான ரசமும் சேர்ந்து குணங்கள் நான்கு.

பிருதிவிக்கு - காரணகுணமான சப்த பரிச ரூப ரசங்களும் சொந்த குணமான கந்தமும் சேர்ந்து குணங்கள் ஐந்து.

இப்பூதங்கள் சூட்சுமமாயும் முக்குணங்களுடையனவாயும் ஒன்றோடொன்று கலப்பில்லாத (பஞ்சீகாணப்படாத)னவாயு மிருத்தலின், சூட்சும பூதங்களெனவும், முக்குண பூதங்களெனவும், அபஞ்சீகிருத பூதங்களெனவும் பெயர் பெறும்.

### சூட்சும சரீரம்.

இச்சூட்சும பூதங்களிலிருந்து சூட்சும சரீரமுண்டாகின்றது. எவ்வாறெனின்.

### (1) அந்தக்கரணம்.

பூதங்களின் சத்துவ குணம்சங்கள் ஒன்ருக(சமஷ்டியாக)ச் சேர்ந்து (1) மனம் (2) புத்தி (3) சித்தம் (4) அகங்காரம் என்னும் அந்தக்காணத்தை யுண்டு பண்ணுகின்றன. தேகத்தினுள்ளிருக்கும் கருவியாகலின் அந்தக்கரண மெனப்படுகின்றது.

(1) மனம் - நினைத்தலாகிய தொழிலைச் செய்வது.

(2) புத்தி - இது நன்மை இது தீமை என்னும் நிச்சயத்தைச் செய்வது.

(3) சித்தம் - சிந்தித்தலைச் செய்வது.

(4) அகங்காரம் - அகங்கரித்தலைச் செய்வது. (நான் என்னும் அபிமானத்தைச் செய்வது). இவற்றுள்,

சங்கற்பத்தை (நினைத்தலை)ப் போல சிந்தித்தலும் மனத்தின் தர்மமாகலின் சித்தத்தை மனத்திலும், தேகாதிகளை நானென்றபிமானித்தலாகிய அகங்காரத்தின் காரியம் புத்தியினிடத்தும் காணப்படுதலின் அகங்காரத்தைப் புத்தியிலும் அடக்கி அந்தக்கரணம் மனம் புத்தி என இரண்டேயென்பது முண்டு.

### (2) ஞானேந்திரியங்கள்.

பஞ்சபூதங்களின் தனித்தனி (வியஷ்டி)யாகிய சத்துவ குணமிசத்தினின்றும், சுரோத்திரம் (காது), துவக்கு (சர்மம்), சட்சு (நேத்திரம்), சிங்ஙுவை (நாக்கு),கிராணம் (மூக்கு) என்னும் ஞானேந்திரியங்களைந்தும் தோன்றும்.

விஷயங்களை யறிதலாகிய ஞானத்திற்குச் சாதனமா (கருவியா)யிருத்தலின் ஞானேந்திரிய மெனப்படுகின்றன.

## (3) பிராணாதி வாயுக்கள்.

பஞ்சபூதங்களின் ஒன்றாகக் கூடின (சமஷ்டி) இராஜோ குணமிசத்தினின்றும் பிராணம், அபானம், சமானம், உதானம், வியானம் என்னும் பஞ்ச வாயுக்களுண்டாம். இவற்றுள்,

(1) பிராணவாயு - பசி தாகங்களை யுண்டாக்கிக் கொண்டு இதயத்திலிருக்கும்.

(2) அபானவாயு - மல மூத்திரங்களைத் தள்ளிக்கொண்டு குதத்திலிருக்கும்.

(3) சமானவாயு - உண்ட அன்னத்தை நாடியின் மூலமாய்ச் சரீர முழுவதிலும் சமமாகச் செலுத்திக் கொண்டு நாபியிலிருக்கும்.

(4) உதானவாயு-அன்னபானாதிகளை உள்ளே செலுத்திக்கொண்டு கண்டத்திலிருக்கும்.

(5) வியானவாயு - மூட்டுகளைத் திருப்பிக்கொண்டு சரீர முழுதும் வியாபித்திருக்கும்.

## (4) கர்மேந்திரியங்கள்.

பஞ்ச பூதங்களின் தனித்தனி (வியஷ்டி)யான இராஜோ குணமிசத்தினின்றும் வாக்கு, பாணி(கை), பாதம், உபஸ்தம் (சலத்துவாரம்), குதம் (மலத்துவாரம்) என்னும் கர்மேந்திரியங்களைந்து முண்டாகின்றன.

கர்மத்தை (கிரியையை)ச் செய்யும் கருவிகளாயிருத்தலின் இவை கர்மேந்திரிய மெனப்படும்.

மனம் புத்தி 2; ஞானேந்திரியங்கள் 5; பிராணுதி வாயுக்கள் 5; கர்மேந்திரியங்கள் 5; ஆகப் பதினேழு தத்துவங்களும் சகல ஜீவர்களுக்கும் சூட்சும சரீரமாம். இச்சூட்சும சரீரமே சம்சாரத்திற்கு மூலமாம். போக சாதனமாம். இதன் சம்பந்த மின்றேல் விஷயபோகானுபவம் கூடாது. ஆகலின், ஜீவர்களின் விஷய போகத்தினிமித்தம் ஈசுவரனுல் உண்டாக்கப்பட்டதாம். இது லிங்கசரீர மெனவும் பெயர் பெறும்.

விவேகா:—அந்தக்கரணமும் ஞானேந்திரியங்களும் சூட்சும பூதங்களின் சத்துவ குணுமிசமானவை யெனவும், வாயுக்களும் கர்மேந்திரியங்களும் ரஜோகுணுமிசமானவை யெனவும் அறிவதெப்படி?

குரு:—சத்துவகுணம் நிர்மலமானதாயும் பிரகாசிக்கச் செய்யும் சக்தியுடையதாயு மிருப்பதாம். ஆதலின், விஷயங்களை யறியும் சாமர்த்தியம் (ஞானம்) அதற்கிருக்கின்றது. அந்தக்கரணத்தினிடத்தும் ஞானேந்திரியங்களினிடத்தும் இச்சக்தி யிருத்தலால் அவை சத்துவாமிசத்தினின்று முண்டாயின வென்று அறியலாம். இராசதகுணம் தொழில்களைச் செய்தலாகிய கிரியா (கர்ம) சக்தியுடையதாம். வாயுக்களிலும் கர்மேந்திரியங்களிலும் கிரியை காணப்படுவதால் அவை இராசதகுணுமிசத்தினின்று முண்டாயின வென்று அறிந்து கொள்ளலாம்.

விவேகா:—சுவாமி! அந்தக்கரணமும் பிராணுதி வாயுக்களும் பஞ்சபூதங்களின் சத்துவ இராசத குணங்களின் சமஷ்டியினின்று முண்டாயின வென்றும், ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் சத்துவ இராசத குணங்களின் வியஷ்டியினின்று முண்டாயின வென்றும் அறிவதெப்படி?

குரு:—அந்தக்கரணமும் பஞ்ச வாயுக்களும் ஒன்றின் தொழிலை மற்றொன்று அறிவனவாயும், ஒன்றுக் கொன்று சம்பந்த முடையனவாயு மிருத்தலானும்; ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் ஒன்றன் தொழிலை மற்றொன்று அறியாமல் தனித்தனியாக வெவ்வேறிடங்களிலிருத்தலானும் அறியலாம்.

விவேகா:—சூட்சும சரீர தத்துவங்களாகிய இப்பதினேழும் பஞ்ச பூதங்களினின் றுண்டாயின வென்று நிச்சயித்த லெங்ஙனம்?

குரு:—இத்தத்துவங்களில் பஞ்ச பூதங்களின் குணங்கள் காணப்படுதலால் நிச்சயிக்கலாம். அவற்றிற் சிலவற்றை இங்குக் கூறுகிறேன்.

(1) சுரோத்திரம் - சப்தத்தை யறிகிறது; ஆதலால் அது சப்த குணமுடைய ஆகாசத்தி னமிசமாம்.

(2) துவக்கு - பரிசத்தை யறிகிறது; ஆதலால் அது பரிச குணமுடைய வாயுவினமிசமாம்.

(3) சட்சு - உருவத்தை யறிகிறது; ஆதலால் அது ரூப குணமுடைய தேயுவினமிசமாம்.

(4) சிங்ஙுவை - ருசியை யறிகிறது; ஆதலால் அது ரச குணமுடைய அப்புவினமிசமாம்.

(5) கிராணம் - வாசனையை யறிகிறது; ஆதலால் அது கந்த குணமுடைய பிருதிவியி னமிசமாம்.

இவ்வாறே பிறவற்றினும் பஞ்ச பூதங்களிருக்கக் காணலாம். அதனுல் அவை பஞ்சபூத காரியமாமென்றறிக. நிற்க, இனி தூலசரீர சிருஷ்டி கூறுகிறேன், கேள்.

## தூலசரீர சிருஷ்டி.

ஜீவர்களின் கர்மானுபவத்திற்காகச் சூக்கும சரீரத்தை யுண்டாக்கி யருளிய ஈசுவரனுடைய கருணையினால் சூக்கும சரீரம் தங்குதற் கிடமாகத் தூலசரீரமும், போக்கியப் பொருள்களாகிய தூலப்பிரபஞ்சம் முதலானவைகளும் உண்டாதற் பொருட்டு, சூக்கும பூதங்களுக்குள் ஒன்றுக்கொன்று கலப்புண்டாகின்றது, அதனால் சூக்கும பூதங்கள் தூலபூதங்களாகின்றன. இவ்வாறு கலப்பதற்குப் பஞ்சீகரண மென்று பெயர். ஒவ்வொரு பூதமும் ஐந்து பாகமாகப் பிரிந்து மற்றைப் பூதங்களோடு சேர்வது பஞ்சீகரணமாம். பஞ்சீகரண மடைந்த பூதங்கள் பஞ்சீகிருத பூதங்களெனப் பெயர் பெறும். இப்பஞ்சீகிருத பூதங்களிலிருந்து தேவ மனுஷ்ய பசு பக்ஷியாதிய தூலசரீரங்களும், தூல பிரஹ்மாண்டமும், போக யோக்கியமான தானியம் முதலாகிய உணவுப் பொருள்களு முண்டாயின.

விவேகாநந்தா! இங்ஙனம் தூலசூக்கும பிரபஞ்சங்களின் சிருஷ்டியை யறியக்கடவாய். மேலும்,

ஜீவேசுவரர்களின் தூலசூக்கும காரண சரீரங்களும் அந்த மூன்று சரீரங்களிலும் ஐந்து கோசங்களும் அடங்கி யிருக்கும் விதமும் முன்பே கூறப்பட்டன.

**விவேகா:—** மூவகைச் சிருஷ்டிகளில் இது கிரம சிருஷ்டி. மற்ற விரண்டு சிருஷ்டிகளையும் கூறியருளல்வேண்டும்.

## (2) திருஷ்டி சிருஷ்டி வாதம்.

**குரு:—** அலை நுரை முதலியவை கடலினின்று கிரமமின்றி உண்டாதல் போலவும், சொப்பனவத்தையில் உலகமும் அதிலுள்ள சகல பதார்த்தங்களும் கிரமமின்றி மனத்தினின் றுண்டாதல் போலவும், தேகாதிப் பிர

பஞ்சம் கிரமமின்றி பிரஹ்மத்தினின்று முண்டாயிற் றெனல் யுகபத் கிருஷ்டியாம்.

(3) அஜாத வாதம்.

"சிவனே யுள்ளான் பிறிதில்லை என்று திரமா யறிவதுவே
பவமே யொழிக்கும் பாமார்த்தம்" என்றபடி,

சத்தியமாக என்று மழியாது முக்காலத்து முள்ளது பிரஹ்மமே; தேகாதிப் பிரபஞ்ச மெக்காலத்துமில்லை: என்பது அஜாதவாதமாம்.

விவேகா:—சிருஷ்டியின்வகை மூன்று விதமாகக் கூறப்படுவ தேன்? இவற்றில் எது உண்மை?

**சிருஷ்டி மூன்று வகையாகக் கூறப்படுவதன் காரணம்**

குரு:—அன்பனே! உலக சிருஷ்டி பலவகையாகக் கூறப்பட் டிருக்கின்றது. அஃதேதெனனின், வேதத்திற்குப் பிர பஞ்ச சிருஷ்டியைக் கூறுவதில் நோக்க மின்றும். அது (பிரபஞ்சம்) வாஸ்தவப் பொருளன்று, அவாஸ் தவப் பொருள்; மித்தை; என்று கூறுவதே அதன் நோக்கமாம். அதனால் பலவகையாகக் கூறிற் றென்க. இங்குக் கூறப்பட்ட மூன்று வகையும் அதிகாரி பேதம் நோக்கிக் கூறப்பட்டனவாம்.

(1) உத்தமாதிகாரிக்கு அஜாதவாதம்—உள்ளது பிரஹ் மமே; அஃதிரண்டாவ தில்லாதது; தேகாதிப் பிரபஞ்ச மோ முக்காலத்து மில்லாதது; என்று அவன்மனம் சமாதியில் ஸ்திரப்படும் பொருட்டு பாரமார்த்திக சத் தொன்றையே கூறும் அஜாதவாதம் சொல்லப்படுகின் றது.

(2) மத்திமாதிகாரிக்கு யுகபத் சிருஷ்டி:—பாரமார்த் திகமாக என்றும் உள்ளது பிரஹ்மமே; அஃதிரண்டாவ தில் லாதது. அதனின் வேறாகக் காணப்படும் தேகாதிப் பிர

பஞ்சம் தோற்ற மாத்திரமா யிருப்பது. ஆராய்ச்சியில் தனக்கென ஓர் வடிவில்லாதது. அலை நுரைகள் நீரினும் வேறானவையாகக் காணப்படினும் ஆராய்ச்சியில் நீரை யன்றி யில்லாமைபோல, தேகாதிப் பிரபஞ்சம் பிரஹ்மத்தி னும் வேறானதாகக் காணப்படினும் ஆராய்ச்சியில் பிரஹ் மத்தை யன்றி இல்லை. ஆகையால், தேகாதிப் பிரபஞ்சம் பிராதிபாசிகமாகக் காணப்படுகின்றது என்பதைக் கூறுவ தாகிய யுகபத் சிருஷ்டி சொல்லப்படுகின்றது. இதில் பார மார்த்திகம் பிராதிபாசிகம் என்னு மிரண்டு சத்தைகள் அங்கீ கரிக்கப்படுகின்றன.

(3) அதமாதிகாரிக்கு கிரமசிருஷ்டி:—தேகாதிப் பிர பஞ்சம் பிரத்தியட்சமாக அனுபவிக்கப்படுகின்றமையின், அதனைக் கிளிஞ்சலில் காணப்படும் வெள்ளியைப்போலப், பிராதிபாசிகமாகத் தோன்றுகின்றதெனக் கொள்வ தெங்ங னம் என்றுண்டாகும் ஐய மகலும்பொருட்டு, இப் பிரபஞ் சம் பிரஹ்மத்தினும் வேறான சத்தியப்பொருளாகக் காணப் படினும் அது ஓர் வாஸ்தவப் பொருளன்று என்பதை வற் புறுத்தற்காகக் கிரமசிருஷ்டியைக்கூறி, எவ்வெத் தத்துவம் எவ்வெத் தத்துவத்தினின்று தோன்றிற்றோ அந்த முறை யே அவ்வத் தத்துவத்தை அவ்வத் தத்துவத்தி லடக்கிக் காணுமிடத்து எஞ்சி நிற்பது பிரஹ்மவஸ்து ஒன்றேயாம்; ஆகலின், இப் பிரபஞ்சம் வியாவகாரிகமாகக் காணப்படுவ தே யன்றிப் பாரமார்த்திகமாக இல்லையாம்; ஆராய்ச்சியில் பிராதிபாசிகமாகவே கழியும் என்பதைக் கூறுவதாகிய கிரம சிருஷ்டி சொல்லப்படுகின்றது. இதில் பாரமார்த்திகம் வியாவகாரிகம் பிராதிபாசிகம் என்னும் மூன்று சத்தைகள் அங்கீகாரமாம்.

இம்மூவகைப் பட்சங்களில் அஜாத வாதமே உண்மை யதாம். ஏனைய இரண்டும் கற்பிதமாம் என்றுணர்வாயாக.

## மூவகைச் சத்தைகள்.

**விவேகா:**—பெருமானே! இம்மூவகைச் சத்தைகளின் இலக்கணம் என்ன?

**குரு:**—ஒரு பொருளின் இருப்பிற்குச் சத்தை என்று பெயர். அந்த இருப்பு மூன்று விதமாம். அவற்றுள்,

(1) **பாரமார்த்திக சத்தை:**—எது எல்லாக் கற்பனைகளுக்கும் அதிஷ்டானமாய், முக்காலத்தும் பொய் யென்று நிச்சயிக்கப்படாததாய் இருக்கிறதோ அது பாரமார்த்திகசத்தையாம். அவ்வாறிருப்பது பிரஹ்ம வஸ்துவேயாம். ஏனெனில், பிரஹ்மமே, மாயையும் அதன் காரியமாகிய தேகாதிப் பிரபஞ்சமும் என்னும் எல்லாக் கற்பனைகளுக்கும் அதிஷ்டானமாயும், உற்பத்தி நாசமில்லாததாயும், அதனால் முக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படாததாயு மிருப்பதாம். அதனால் அது பாரமார்த்திக சத்தாம்.

(2) **பிராதிபாசிக சத்தை:**—எது ஆத்மஞான மில்லாமலே பொய்யென்று நிச்சயிக்கப்படுகின்றதோ அது பிராதிபாசிக சத்தாம். சொப்பனப் பொருள், கானல்நீர், கயிற்றரவு முதலியன இதற்குத் திருஷ்டாந்தமாம்.

(3) **வியாவகாரிக சத்தை:**—ஆத்ம ஞானத்தால் பொய்யென்று நிச்சயிக்கப்படுவது வியாவகாரிக சத்தாம். அது சாக்கிராவத்தையிற் காணப்படுவதாம். (மாயை முதலியனவாம்.)

## லயக்கிரமம்.

**விவேகா:**—கிரம சிருஷ்டியினு லறியவேண்டிய லயக்கிரமத்தைச் சிறிது விளக்கி யருளல்வேண்டும்.

**குரு:**—ஜீவர்களின் ஸ்தூல சரீரங்களெல்லாம் தமக்காதாரமாகிய ஸ்தூல பூதங்களி லொடுங்கும். ஸ்தூல பூதங்களும் கலப்பு (பஞ்சீகரணம்) விட்டு சூட்சுமமான

தமோகுண பூதங்களாக நிற்கும். சூட்சும சரீர தத்துவங்களும் கட்டுவிட்டு, எதுவெது எவ்வெப் பூதத்தினின்றுந் தோன்றிற்றோ, அதுவது அவ்வப் பூதத்திற் கலந்து சத்துவகுணமும் ரஜோகுணமுமாக ஒடுங்கும். அப்போது முன்போலவே முக்குண சூக்கும பூதங்களாம். இவற்றுள் பிருதிவி அப்புவிலும், அப்பு தேயுவிலும், தேயு வாயுவிலும், வாயு ஆகாசத்திலும் உதித்த முறையே ஒடுங்கும். ஆகாசமும் மாயையிலொடுங்கும். மாயையும் ஆரோபமாகலின், பாம்பென்னும் பெயர் போய் பழுதையாய்க் கண்டாற்போலத் தனக்காதாரமான பிரஹ்ம சைதன்ய மாத்திரமாக வொடுங்கும்.

இவ்வாறு, உடல்முதற் சுபாவ மீறுகவுள்ள தத்துவங்களை முன்பு ஒன்றினொன்று உதித்த முறையே ஒன்றினொன்றொடுக்கி உண்மையைக் காண்டல் வேண்டும்.

கிரம சிருஷ்டி அத்தியாரோப மென்றும், கிரமலயம் அபவாதம் என்றும் சொல்லப்படும். இவ்விரண்டும் யுக்திகளாம். இவ்விரண் டுக்திகளில்

> பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
> மருளானும் மாணாப் பிறப்பு.

எனப் பொய்யா மொழியார் புகன்றவாறு, பொய்யை மெய்யாகக் காணுதலாகிய அத்தியாரோப யுக்தியால் பந்தமினைய தெனவும், பொய்யைப் பொய்யாக நீக்கி மெய்யைக் காணுதலாகிய அபவாத யுக்தியால் மோட்ச மினைய தெனவும் வேதாந்த நூல்கள் நுவலும்.

### உலகு அநித்தியம்.

விவேகா:—ஆயின், உலகு உண்மைப்பொருளன்றோ?

குரு:—முயற்கொம்பினால் குத்துண்டு யானை இறந்த தென்பதும், கானல் நீரைப் பருகி தாகந்தணிந்த தென்பதும்,

கிளிஞ்சலிற் காணப்படும் வெள்ளியால் ஆபரணம் செய்யப்பட்டதென்பதும், ஆமையின் உரோமத்தால் திரிக்கப்பட்ட கயிற்றால் யானை கட்டுண்டதென்பதும், கனவிற்கண்ட பொருள் நனவில் அநுபவிக்கப்படுவதும், மலடிமகன் சுகமாக வாழ்ந்துகொண்டிருக்கிறானென்பதும் உண்மையாகுமானால் உலகும் உண்மையாம்.

## பிரபஞ்ச மித்தியாத்துவ நிர்ணயம்.

**விவேகா:**—சுவாமி! பிரத்தியட்சமாகக் காணப்படும் உலகைப் பொய் யென்பதெங்ஙனம்?

**குரு:**— ஞானகுமாரா! நன்றாகக் கவனி. 'உலகம் பொய்' என்று சொல்வதில் அனேக வகை யுண்டு. மூவகைச் சிருஷ்டியைக் கூறினபோது பொருள்களி னிருப்பு மூவகைப் படுமென்று மூவகைச் சத்தைகள் திருஷ்டாந்தங்களுடன் காட்டப்பட்டன. அவற்றில், உலகம் பாரமார்த்திகமாய் இல்லை; வியாவகாரிகமாயும் பிராதிபாசிகமாயும் இருக்கின்றதென்று கூறினேன். ஆதலால்,

'உலகம் பொய்' என்றால், மலடிமகன்போல முழுதும் இல்லாதது என்று கொள்ளலாகாது கயிற்றரவுபோல மித்தையா யிருப்பதாம் என்றறிதல் வேண்டும். மேலும், உலகம் சத்து (அழியாது என்று மிருப்பது) என்னும் எண்ண முடையோர்க்கு, அவ்வெண்ணம் சரியன்று, என்று மறுத்தற்பொருட்டு 'உலகம் சத்தன்று; அசத்து' என்னப்படுகின்றது. ஆனால்

சத்துமாகாமல் அசத்துமாகாமல் சதசத்துமாகாமல் இன்ன தன்மையினை யுடையதென்று நிச்சயித்துக் கூறமுடியாத அநிர் வசனீயமாகிய மாயையினின்றுந் தோன்றினமையின் இவ் வுலகமும் அநிர்வசனீயமென்று சொல்லத்

தக்கதே. ஆயினும், அம்மாயை பிரஹ்மத்தி னிடத்துக் கயிற்றரவுபோலக் கற்பிதமாயிருத்தலின் அதன் காரியமான உலகமும் கற்பிதமேயாம்.

"பழுதை யதனிற் றோன்றியிடும் பாம்பை யுள்ள படிநோக்கின்
பழுதை யாயே தோன்றியிடும் பாம்பு மதுவாய் விடுமஃதின்
பழுதில் சிவத்திற் றோன்றியிடும் பன்மை யுலகை நோக்கியிடின்
பழுதில் சிவமே யாய்த்தோன்றும் பன்மையுலகு மதுவாய்ப்
[போம்."

என்று, அத்துவித வுண்மை கூறுமாறு,

பாம்புபோலக் காணப்படும் சக்தி கயிற்றினிடத்தில் அபேதமா யிருத்தல்போல, தேகாதிப் பிரபஞ்ச வடிவாதற் குரிய சக்தியாகிய மாயையும், கற்பிதத்தில் பரப்பிரஹ்மத்தி னும் வேறுனதாகக் காணப்படினும் வாஸ்தவத்தில் அபின் னமேயாம். ஆதலால் கயிறு, சக்தி, சர்ப்பம் என்னும் மூன்றில்,

(1) சர்ப்பம்:—மித்தை; கயிற்றை யறியாமையால் தோன்றியது; கயிற்றைக் கண்ட விடத்துக் காணப்படா தது. உள்ளது கயிறேயாம்.

(2) சக்தி:—அநிர்வசனீயம்.

(3) கயிறு:—இதுவே வாஸ்தவப்பொருள்; முக்கா லத்து முள்ளது.

என்றறிதல்போல, 'இவ்வுலகமும் மித்தையாம்; உள் ளது பிரஹ்மம் ஒன்றே' என்றறிதல் வேண்டும். தவிர,

உலகம் காரியம், கடம்போல; காரணமின்றிக் காரிய மில்லையாகையால், இக்காரியப் பிரபஞ்சத்திற்குக், குடத்திற் குக் குடமாகும் சக்தியை யுடைய மண்போல, ஓர் உபாதான காரண மிருத்தல் வேண்டும். அவ்வாறு உபாதான காரண மாக விருப்பது மாயை யென்னும் சக்தியையுடைய பரவஸ்

துவேயாம். அப் பரவஸ்து இரண்டாவதற்ற தாகலின் குடத்தை வனையக் குயவன் நிமித்தகாரணமாய் வேறாக விருத்தல் போல, வேறுவஸ்து வில்லாமையால், அப் பரப் பிரஹ்மமே நிமித்தகாரணமாகவும் உபாதான காரணமாகவு மிருக்கின்றது. ஆதலால் அதுவே அபின்ன நிமித்தோபா தான காரணமா யிருப்பதாம். இனி,காரணகாரியங்க ளிரண் டின் தன்மையை ஆராய்வோம்.

காரியம் சொல்மாத்திரமா யிருப்பதேயன்றித் தனக் கென ஓர் பொருளில்லாததாம். காரியமாகிய குடத்தை ஆராயின் மண்ணைத்தவிர குடத்திற்குப் பொருளின்றாம்; வெறும் சொல்மாத்திரமாகவே யிருப்பதாம். காரணமாகிய மண்ணே முக்காலத்து மிருப்பதாம். குடமாவதற்கு முன்பு இருந்ததும் மண்ணே; குடம் அழிவதாகிய எதிர்காலத்தி லிருப்பதும் மண்ணே; குடம் எனச் சொல்லப்படுகின்ற நிகழ்காலத்தி லிருக்கின்றதும் மண்ணே. அதுபோல, உல கமாகிய காரியமும் சொல்மாத்திரமே; முக்காலத்து முள் ளது பிரஹ்மமே.

விவேகா:— எனது அஞ்ஞானாந்தகாரத்தை அகற்ற வந்த ஆதித்தியரே! 'இது சர்ப்பமல்ல' என்றறிந்த விடத்துச் சர்ப்பம் தோன்றுவதில்லை. 'உலகம் மித்தை' என் றறிந்த பின்பும் காணப்படுகின்றதே; சுகதுக்காதி களும் தோன்றுகின்றனவே. 'அங்ஙனமாக, இதனைப் பொய் யென்பது எப்படி?

குரு:—இதற்குச் சமாதான மியம்புதல் வெகு எளிதாம். தோன்றல் மாத்திரத்திற்குக் கயிற்றரவு திருஷ்டாந்தம் உபயோகமாம். கானலை நீரெனக் கண்டவனொருவன் அது நீரன்றென வறிந்த விடத்தும் மீண்டும் நீராகவே காணப்படுதல் போல, இப்பிரபஞ்சம் மித்தை யென்

றறிந்த விடத்தும் தோன்றிக் கொண்டே யிருக்கின்றது. இனி,

சுக துக்காதிகள் தோன்றுவதைப் பொய் யென்றறிதல் எங்ஙனமெனச் சங்கித்தனை. நித்திரையில் மோகத்தினால் சுக துக்கங்கள் காணப்படுகின்றனவே அவை உண்மையானவையோ? விழித்த பிறகு அவை காணப்படுமோ? படாதன்றோ? அவ்வாறே, ஞானமுண்டான பிறகு அத்துக்கங்கள் காணப்படமாட்டா. பிரத்தியட்சமாகக் காணப்படுகின்றனவே எனக் கூறினை. உண்மையே, கோட்டான் கண்ணிற்குப் பகற்கால மிருண்டதாகப் பிரத்தியட்சமாய்க் காணப்படுகின்றதே! பிரத்தியட்சமான அவ்விருள் நிஜமாகுமா? சூரியன் நம் பார்வைக்கு உள்ளங்கை யளவினதான மிகச்சிறிய பொருளாகக் காணப்படுகின்றதல்லவா? அஃது உண்மையாமா? ஆகாயம் வளைந்த வீடிவினதாயும் நீலநிற முடையதாயும் காணப்படுகின்றதல்லவா? ஆகாயத்திற்கு உருவ முண்டா? உருவ மில்லாததற்கு நிற மெப்படி யிருக்கும்? தவிர, ஓர் குளக்கரையில் நின்று தண்ணீரைப் பார்ப்பவனுக்கு அக்குளத்தின் கரையிலிருக்கும் மரம் முதலிய பொருள்களெல்லாம் தலை கீழாயிருப்பதாகக் காணப்படுகின்றனவே! அது வாஸ்தவமா? அதுவும் பிரத்தியட்சமாகக் காணப்படுவதுதானே. ஆதலால், பிரத்தியட்சத்தைச் சத்தியமென்று உறுதியாக நம்புவதெப்படி? அவ்வாறே, பிராந்தியால் காணப்படும் பொருள் பிராந்தியுள்ளவனுக்கு உண்மையானதாகக் காணப்படினும் பிராந்தியில்லாதவனுக்கு மித்தையே யாகும்.

## சுவர்க்க நரகங்கள்.

**விவேகா:**—சுவாமி! ஜீவர்கள் செய்யும் புண்ணி பாவங்களைச் சுவர்க்க நரகங்களில் அனுபவிப்பதாகக் கூறுவது உண்

மையன்று? உண்மையாயின் எவ்வாறனுபவிக்கின்ற னர்?

குரு:—இந்த உலகம் எந்த வகையில் மெய்யோ அந்த வகையில் அவ்வுலகங்களும் கற்பனையாக மெய்யேயாம். பிராந்தியால் இவ்வுலக சுகதுக்கங்கள் எப்படி மெய்யோ அப்படியே அவைகளும் மெய்யேயாம். பிராந்தி யில்லாதவனுக்கு யாவும் மித்தையே. அவ்வுலகங்களும் மாயையின் காரியமாகலின் மித்தையே யாமென்பதில் அணுவளவும் ஐயமின்றாம்.

ஜீவனுக்குள்ள மூன்று சரீரங்களில் ஸ்தூல சரீரம் இவ்வுலகத்தே தானே விழுந்து அழிந்து போகின்றமையின், ஜீவன் சூக்கும சரீரத்தோடு பூதசாரமென்னும் சரீரத்தில் பிரவேசித்து சுவர்க்கத்தையும், யாதனு சரீரத்தில் பிரவேசித்து நரகத்தையும் அடைகிறான். திரும்பவும் பூர்வகர்மானுசாரமாக அச் சரீரத்தை விட்டு சூக்கும சரீரத்துடன் பூமியில் மாதாவின் கர்ப்பத்தில் ஸ்தூல சரீரத்திற் பிரவேசித்துக் குழந்தையாகப் பிறக்கிறான். இவ்வாறு உலகத்திற்கும் சுவர்க்க லோகத்திற்கும் பன்முறையும் போவதும் வருவதுமாய் ஜனன மரணங்களா லலைப்புண்டு துக்கிக்கிறான்.

இங்ஙனம் ஸ்தூல சரீரத்தைவிட்டுப் போதலே மரணமும் தாயின் உதரத்திலிருந்து ஸ்தூல சரீரத்துடன் வெளிப்படுதலே ஜனனமுமாம். அந்த ஸ்தூல சரீரமும் கர்மத்திற்கேற்றவாறு மனித சரீரம் மிருகசரீரம் முதலிய வெவ்வேறு வகைப்பட்ட சரீரங்களாக விருக்குமாயினும் சூட்சும சரீரம் மாத்திரம் வேறுபடுத லில்லை. ஜீவன் இடைவிடாமல் எப்போதும் சூட்சும சரீரத்துடன் கூடியே யிருப்பானகையால் அதுவே அவனுடைய சரீரமாம். ஸ்தூல சரீரம் சரீர மாகாது. அச் சூட்சும சரீரம் நெருப்பில் வேகாது; மழையில்

நனையாது; காற்றால் அலையாது; எவ்வித ஆயுதத்தாலும் வெட்டுப்படாது.

## சூட்சும காரண சரீர நாசம்.

ஆனால், சூட்சும சரீரம் எப்போது அத்தியந்த நாசமுறும் எனின், அதற்குக் காரணமாகவுள்ள அஞ்ஞானமென்னும் காரண சரீரம் நாசமடையின், அப்பொழுதுதான் சூட்சுமசரீரமும் அத்தியந்த நாசமுறும். காரணசரீரம் நாசமுறுதிருக்கும் வரையில் சூட்சும சரீரமும் நசியாது. சூட்சும சரீர முள்ளவரையில் ஜனன மரண துக்கம் ஒழிவ தில்லை. காரண சரீரமாகிய அஞ்ஞானம் எதனால் நசிக்கு மெனின், ஞானாக்கினியால் அழிவுறும்; பிறிதொன்றானும் அழித லின்று. எப்பொழுது ஞானத்தீயால் காரணசரீரம் நசித்து அதனால் சூட்சும சரீரமும் நசிக்கிறதோ அப்பொழுதே ஜீவன் பிறப் பிறப்பாகிய கடலைக் கடந்து வீட்டை யடைகிறான். ஆகவே, ஒவ்வொருவரும் காரணசரீரம் நசித்தற் பொருட்டுப் பாடுபட்டுப் பிரயத்ன பூர்வகமாக ஞானத்தை யடைதல் வேண்டும்.

## ஞான அஞ்ஞானங்களின் லட்சணம்.

விவேகா:—ஞானமென்றா லென்ன? அஞ்ஞானமென்பது யாது? ஞானாஞ்ஞானங்களின் லட்சணங்களை யுணர்த்தி அடியேனைக் கிருதார்த்த னாக்கவேண்டும்.

குரு:—"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்று வள்ளுவனார் மெய்யுணர்தல் (தத்துவ ஞானம்) என்னும் அதிகாரத்திற் கூறியபடி, ஜீவ சொரூபியாகிய நான் தேகேந்திரியங்களுக்கு வேறாயிருத்தலின், தேகேந்திரியங்கள் நானல்ல. நான் பரமாத்மாவி னம்சமாயிருத்தலால்

'நானே பரமாத்மா; பரமாத்மாவே நான்' என்றிவ்வாறு அறிதலே பிரஹ்ம ஞானமாம். ஆகவே, ஜீவப் பிரஹ்மங்களின் அபேத நிச்சயமாய் ஞானத்தின் சொரூபமாம்.

"பிரமமாந் தனைமறந்த பேதைமை யேயஞ் ஞானம்."

"பிரமபா வனையை மூடிப் பேதங்காட் டுவதஞ் ஞானம்."

என்றபடி, ஜீவன் வேறு; பிரஹ்மம் வேறு எனப் பாவித்தலே அஞ்ஞானமாம். இந்த அஞ்ஞானத்தால் ஜீவன் ஜனன மரணங்களை யடைகிறான்.

**விவேகா:**—'நான் சச்சிதானந்த வடிவ பிரஹ்ம சொரூபியாயிருக்கிறேன்' என்று தனதெதார்த்த நிலையை ஒருவன் அறியாமற் போவதற்குக் காரணம் யாது?

**குரு:**—மைந்தா! ஜீவர்களின் காரண சரீரமாகிய அவித்தை அஞ்ஞான வடிவினதாம். அஞ்ஞானத்தினிடத்து மறைக்குந் தன்மை (ஆவரண சக்தி) யிருக்கின்றது. அவ்வாவரணமே உண்மை யுணர்தலாகிய ஞானக் கண்ணை மூடுகின்றது. ஞானக்கண் மறைபடுவதால் நிஜவடிவை யறியாமல் ஜீவன் மயங்குகிறான். ஆதலால் ஒவ்வொருவரும் அந்த ஆவரணத்தை யொழிக்கப் பிரயத்தன பூர்வகமாகப் பாடுபடல் வேண்டும்.

## ஆவரணத்தை யகற்று முபாயம்.

**விவேகா:**—அந்த ஆவரணம் அகல்வ தெவ்வாறு?

**குரு:**—"மாறாத வஞ்ஞானம் முழுதுமகல் வதுகூறின்
வையந் தன்னின்
வேறானாற் காலகலும்; உடல்மூன்றும் சீவனுக்கு
வேற தானால்
நீறாகும்பாதி; தற்சாட்சியைக் காணின் முக்காலு
நீங்கும்; தானாய்ப்
பேறான சொரூபபரி பூரணமானால் முழுதும்
பேசொணாதே."

என, உபநிடதங் கூறுகிறபடி, உலக வியவகாரங்களி னின்று நீங்குவதால் காற்பங்கு கழியும்; ஸ்தூலம் சூட்சுமம் காரணமென்னும் மூன்று சரீரங்களின் வியவகாரங்களி னின்றும் நீங்குவதால் மற்றொரு காற்பாகம் ஒழியும். 'சீவ சாட்சியாகிய கூடஸ்தனே நான்' என்று தன் நிஜ சொரூ பத்தை யறிதலால் மற்றொரு காற்பாகம் தொலையும். 'சீவ சாட்சியாகிய கூடஸ்தன் பிரஹ்மமே' ஆதலின், 'நான் பிரஹ் மமே; பிரஹ்மமே நான்' என்றுள்ளவா றுணர்தலால் எஞ் சிய கால்பாகமும் நசிக்கும். இவ்வாற்றால் ஆவரணம் முழு வது மகலும்.

இவ்வாறு அஞ்ஞானமாகிய ஆவரணத்தை யகற்றி னோரே ஞானிகளாவர். அவர்தம் பெருமை அளவிடற் கரியதாம்.

**விவேகா:**—உலக வியவகாரங்களினின்றும், சரீரத்திரய வியவ காரங்களினின்றும் நீங்குவதெங்ஙனம்? சீவ சாட்சி யாகிய கூடஸ்தனே நான் எனவும், அந்தக் கூடஸ்தன் பிரஹ்மத்தினும் பின்ன மாகாமையின் கூடஸ்தனாகிய நானே பிரஹ்மமெனவும் அறிவதெப்படி?

**குரு:**—அறிவிற் சிறந்த அன்பனே! உலகம் பஞ்சீகிருத (ஸ்தூல) பஞ்ச பூதங்களாலான தாகலின், இவ்வுலகம் நானல்ல; என்னுடையது மல்ல; இதற்கு மெனக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை என்று விசாரணையின் மூல மாக வறிந்து, அதனிடத்து எவ்வித பற்றுமின்றி யிருத்தலே உலகவியவகாரத்தை நீக்குதலாம்.

தூல சரீரமும் தூல பூதங்களின் காரியம்; சூக்கும தேகமும் சூக்கும பூதங்களின் காரியம்; காரண சரீரமாகிய அஞ்ஞானமோ என்னிடத்திற் கற்பிதமாயிருக்கின்றது. ஆக லின், இம்மூன்று சரீரங்களும் நானன்று; என்னுடையனவு

மன்று; இவற்றிற்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமு மின்றும் என்று அவற்றின் சொரூபத்தை யறிதல் மூலமாக அவற்றினிடத்து எவ்வித பற்றுமின்றி யிருத்தலே சரீரத்திரய வியவகாரங்களினின்று நீங்குதலாம்.

'நான் தூல சரீரமன்று; சூக்கும சரீரமன்று; காரண சரீரமன்று; இத்தேகம் மூன்றிற்கும் நான் வேறாயிருக்கிறேன்; நான் சச்சிதானந்த வடிவினன்' என்றறிந்து சமாதி அப்பியாசஞ் செய்து, அவ்வப்பியாச முதிர்ச்சியால் தனது எதார்த்த சொரூபமாகிய ஆத்மாவைக் காண்டலே தனது நிஜவடிவைக் காணுதலாம்.

கடாகாசத்திற்கும் மகாகாசத்திற்கும் உண்மையில் பேதமில்லாதது போல, பிரஹ்மத்திற்கும் கூடஸ்தனாகிய வெனக்கும் உண்மையில் பேதமின்றாம்; 'அதுவே நான்; நானே அது' என்று தன்னைப் பிரஹ்மத்தினும் அபேதமாகக் கண்டு, பிரஹ்ம சொரூபமாக விளங்குதலே இறுதியாகிய நானே பிரஹ்ம மென்றறிதலாம்.

## அஞ்ஞான காரியங்கள்.

**விவேகா** :—அஞ்ஞானத்தா லுண்டாம் அனர்த்தங்களெவை?

**குரு**:—சீவன் அஞ்ஞானத்தினால் சத்து சித்து ஆனந்தங்களாகிய ஆன்மதருமங்களை அனாத்மாவாகிய தேகேந்திரியங்களின் தருமங்களென்றும், அநிருத (அசத்து), ஜட, துக்கங்களாகிய அனாத்மாவின் தருமங்களை ஆத்மாவின் தருமங்களென்றும் மாறுபாடாக அறிகிறான். அந்தப் பிராந்தி (திரிபுணர்ச்சி) யால் நான் மனிதன், நான் பிராஹ்மணன், நான் கிருகஸ்தன், நான் புண்ணியன், நான் பாவி, நான் சுகி, நான் துக்கி, நான் பிறக்கிறேன், நான் இறக்கிறேன் என்னு மிவைபோன்ற

தேகாதி யந்தக்கரணங்களின் காரியங்களை ஆத்மாவினு டைய தென்று ஆரோபித்துக் கூறுகிறான்.

இத்தலைகய அவிவேகம் அஞ்ஞானத்தா லுண்டாகின் றது. இவ்வவிவேகத்தால் சரீராதிகளினிடத்து அபிமான முண்டாகின்றது. இவ்வபிமானத்தால் இராகத் துவேஷாதி களையடைந்து கர்மத்தைச் செய்கிறான். கர்மத்தால் சரீரமும் சரீரத்தால் துக்கமும் நேரிடுகின்றன.

## அத்தியாசம்.

**விவேகா:**—ஆத்மாவின் தர்மங்கள் அநாத்மாவினிடத்தும் அநாத்மாவின் தர்மங்கள் ஆத்மாவினிடத்தும் எப்படி ஆரோபிக்கப்படுகின்றன?

**குரு:**—ஆரோப மெனினும் அத்தியாச மெனினும் கற்பனை யெனினும் ஒக்கும். 'ஒரு பொருளில் மற்றொரு பொ ருளின் தோற்றம்' அதன் இலக்கணமாம்.

உதாரணம்:—கயிற்றிற் பாம்பும், கிளிஞ்சலில் வெள்ளியும் காணப்படுதலாம். இவ்வாறே ஆத்மாவின் தர்மம் அநாத்மாவினிடத்தும் அநாத்மாவின் தர்மம் ஆத்மாவி னிடத்தும் அத்தியாசமாகக் காணப்படுகின்றன என் றறிக.

**விவேகா:**—தாங்கள் சொன்ன அத்தியாச லட்சணத்தின் படி ஆத்மாவினிடத்து அநாத்மாவி னத்தியாச முண் டாதல் கூடாது. கயிற்றில் அரவின் அத்தியாசமும் கிளிஞ்சலில் வெள்ளி யத்தியாசமும் தோன்றுவதெப் படி யெனில்; கயிறும் பாம்பும், கிளிஞ்சலும் வெள்ளி யும் திருசிய (காணக்கூடிய) வஸ்துக்கள். மேலும் சமான தருமமுடையவை. எவ்வாறெனில், பாம்பும் நீளமாயிருக்கிறது; கயிறும் நீளமாயிருக்கிறது. பாம்பும் வளைவுடையது; கயிறும் வளைவுடையது. ஆகவின்

ஒன்றில் மற்றொன்று காணப்படுவது சகஜமே. அப்படியே வெள்ளியும் வெண்மையாயும் பிரகாசமாயுமிருக்கின்றது; கிளிஞ்சலும் வெண்மையாயும் பிரகாசமாயு மிருக்கின்றது. இவ்வாறு இரண்டிற்கும் சமான தர்மமிருத்தலால் கயிற்றில் பாம்பும் கிளிஞ்சலில் வெள்ளியும் தோற்றுகின்றன. இதனால்,

காணக் கூடியவையாயும் சமான தரும முடையவையாயு மிருக்கும் வஸ்துக்களிடத்திற்றான் அத்தியாசம் பொருந்துமே யன்றி, காணக்கூடாதவையாயும் சமான தருமமின்றியவையாயு மிருக்கும் வஸ்துக்களினிடத்து அத்தியாசம் பொருந்தா தென்பது பெறப்பட்டது.

ஆத்மாவோ திருசிய வஸ்து வன்று. காணப்படாத வஸ்துவில் அத்தியாச முண்டாவ தெங்ஙனம்? மேலும், ஆத்மா சச்சிதானந்த லட்சணமுடையது; அநாத்மாவோ அசத்து ஜடதுக்க லட்சணமுடையது. ஆதலால் சமான தருமமுமின்று; விரோத லட்சணமுடையவை. ஒளியும் இருளும்போல விரோதலட்சணமுடைய வஸ்துக்களில் ஒன்றில் மற்றொன்று தோன்றும் பிராந்தி அல்லது அத்தியாசம் எங்ஙனம் பொருந்தும்?

குரு:—ஞான குமாரா! உன் கேள்வி தக்கதே. ஆத்மா காணப்படாத வஸ்துவன்று. ஆனால் கண்ணாற் காணத்தக்க வஸ்துவன்று. கண்ணானது அவயவமுடைய வஸ்துவைக் காண்பது. ஆத்மா அவயவமுடையதன்று; ஆதலால், கண்ணாற் காணப்படாத தாயினும், ஆத்மாவானது 'நான்' என்னும் ஞானத்திற்கு விஷயமாகின்றது. 'நான் இருக்கிறேன்' என்னும் ஞானம் அனைவர்க்கும் அனுபவசித்தமா யிருக்கின்றது. அதனால் ஆத்மா இருக்கின்றது என்பதை நிரூபிப்பதற்கு

(தன் இருப்பிற்கு) வேறு பிரமாணம் அவசியமின்றும். கண்பார்வையிற்படாத ஆகாசமானது நீலநிறமுடைய தென்றும் வளைந்த வடிவினையுடைய தென்றும் கூறு கின்றனர் மூடர்கள். இந்த அத்தியாசம் எவ்வாறுண் டாயிற்று? மேலும்,

அத்தியாசம் (1) சோபாதிகம் (உபாதியுடையது), (2) நிருபாதிகம் (உபாதியில்லாதது) என இருவகையாம். இவற் றுள்,

(1) எவ்வத்தியாசமானது அதிஷ்டானத்தை யுணர்ந்த பின்னும் தோற்றுகின்றதோ அது சோபாதிகப் பிராந்தி யாம். உதாரணம்: கானற்சலம் முதலியன.

(2) எவ்வத்தியாசமானது அதிஷ்டானத்தை யுணர்ந்த பின்னர் தோற்றுவதில்லையோ அது நிருபாதிகப் பிராந்தி யாம். உதாரணம்: கயிற்றரவு முதலியன. (உபாதி என்னும் பதம் நிமித்தம் என்னும் பொருளது.)

நிருபாதிகம் சாதிருசியத்தை அபேட்சிக்குமே யன்றி சோபாதிகம் அபேட்சியாது. ஆத்மப் பிராந்தியும் இங்ஙன மே நிருபாதிகமா மென்றறிக. ஆயினும் ஆத்ம அநாத்மாக் களுக்குச் சிறிது சாதிருசியமு முளதாம். அஃதெங்ஙன மெனின்: நிர்மலமாகவுள்ள ஸ்படிக மணியானது பிரகாச வடிவ சூரியனது சன்னிதான விசேஷத்தால் சூரியன் போலப் பிரகாசிக்கின்றது. அதுபோல, நிர்மலமாயும் பிர காச சொரூபமாயுமுள்ள ஆத்மாவின் சன்னிதான விசேஷத் தால் சத்துவ சொரூபமாயும் நிர்மலமாயுமுள்ள புத்தியும் ஆத்மாவைப் போலப் பிரகாசிக்கின்றது. புத்தியின் சன்னி தான விசேஷத்தால் மனமும் புத்தியைப் போலப் பிரகாசிக் கின்றது. மனத்தின் சன்னிதான விசேஷத்தால் இந்திரியங் கள் மனத்தைப் போலப் பிரகாசிக்கின்றன. அவ்விந்திரியங்

களின் சன்னிதான விசேஷத்தால் சரீரமும் இந்திரியங்கள் போல் பிரகாசிக்கின்றது. இவ்வாற்றால், ஆத்மாவின் தர்மம் அதனினும் வேறாகிய தேகேந்திரியாதிகளில் அத்தியாசமாகத் தோன்றுகின்றது. ஆத்ம அநாத்மாக்களுக்கு இருப்பதாக இப்பொழுது சொன்ன இந்த சாதிருசியமும், பாலர்கள் கண்ணாடியிற் காணப்படும் பிரதிபிம்பத்தைக் கண்டு, அதனை வேறொரு குழந்தையாகப் பாவித்தல்போல, அவிவேகிகளுக்குத் தோற்றுவதே யன்றி விவேகிகளுக்குத் தோற்றுவ தின்றாம். இனி,

ஒருவனுக்குக் கயிற்றினிடத்துப் பாம்பு என்னும் பிராந்தி தோன்றுவதற்கு அவன் அதற்கு முன் பாம்பைப் பார்த்திருத்தல் வேண்டும். அவ்வாறு பார்த்ததனாலாகிய சம்ஸ்காரமே பிராந்திக்குக் காரணயாம். அவ்வாறு இங்கு சம்ஸ்காரம் யாது என்னும் சங்கைக்குச் சமாதானம் கூறுகிறேன், கேள்.

மனிதர் தூக்கத்தி லிருந்தேனும் மூர்ச்சையிலிருந்தேனும் எழுந்தவுடன் உலகவியவகாரத்தில் பிரவிர்த்திக்கின்றனர். அதனால் அஞ்ஞானமும் அநாதி; அவ் வஞ்ஞானத்தாலுண்டான வாசனையும் அநாதியா மென்றறிக.

இவ்வாறு, ஆவரண சக்தியானது பரிசுத்தமாகிய ஆத்ம வடிவத்தை மறைத்தலால், ஆத்மாவின் நிஜவடிவந் தோன்றாமல் 'சரீராதிகளே நான்' என்பதாகிய அநாத்மாவினிடத்து ஆத்மபாவம் ஆரோபிக்கப்படுகின்றது. அவ்வத்தியாசத்தால் (பிராந்தியால்) சம்சார பந்தமும் பந்தத்தால் ஜனன மரண துக்கங்களு முண்டாகின்றன.

இந்த அத்தியாச மகன்றால் சம்சாரம் தோன்றுதலில்லை. விவேகிகள் அத்தியாசத்தை அத்தியாசமென்று (பொய்யைப் பொய்யென்று) அறிந்தவர்களாகலின்; பிரபஞ்ச வியாபா

ரத்தினிடத்து ஆசக்தியில்லாதவர்களா யிருப்பர். மூடர்கள் அத்தியாசத்தை அத்தியாசமா யறியாமல் வாஸ்தவப் பொருளாக (பொய்யை மெய்யாக)க் கருதுவோ ராகலின், உலக வியாபாரத்தினிடத்து ஆசக்தி யுடையோரா யிருப்பர். இவ்வாறு உண்மையை யறிந்து ஆசக்தி யற்றிருத்தலே முக்தியாம்; உண்மையை யுணராமல் ஆசக்தி யுற்றிருத்தலே பந்தமாம்.

விவேகா:—குருநாதா! அத்தியாசம் பொய்யன்ருே? அசத்தாகிய (பொய்யாகிய) அத்தியாசத்தால் காரியப் பிரவிர்த்தி எவ்வாறுண்டாம்?

குரு:—கயிற்றில் அத்தியாசமாக வுள்ள அசத்தாகிய பாம்பைக் கண்ட வுடனே 'இதோ பாம்பு' என்று நினைக்கிருன்; கூவுகிருன்; அவன் சரீரம் முழுதும் நடுங்குகின்றது; மனம் துடிக்கின்றது; தடி எடுத்துக்கொண்டோடிவருகின்ருன்; அவன் சத்தத்தைக் கேட்டுப் பிறரும் ஓடிவந்து பார்த்து பயந்து அதனை யடிப்பதற்காகக் கல்லுங் கட்டையும் தேடுகின்றனர். அசத்தாகிய அரவு இக்காரியங்களை யெல்லாம் எப்படிச் செய்வித்ததோ அப்படியே அந்த அத்தியாசமும் உலக வியவகாரத்தை யுண்டாக்கிறது.

விவேகா:— சுவாமி! உலகம் மித்தையாகிறபோது இவ்வுலகிற் காணப்படும் குரு வேதம் முதலியனவும் பொய்யே யன்ருே ?

குரு:— ஆம்.

போய்யான வேதகுருக்களால் சம்சாரம் நிவிர்த்தியாம்.

விவேகா:—ஆயின், பொய்யான குருவாலும் பொய்யான வேதத்தாலும் சம்சாரதுக்கம் நிவிர்த்தியாவதெங்ஙனம் ?

குரு:— பொய்யான குருவாலும் பொய்யான வேதத்தாலுந் தான் சம்சாரதுக்கம் நிவிர்த்தியாம். ஏனெனில், சம் சாரமும் பொய்யா யிருத்தலால். பொய்யாகிய சம்சா ரம் பொய்யாகிய வேத குருக்களால் நிவிர்த்தியாகுமே யன்றி மெய்யான வேதகுருக்களால் நிவிர்த்தியாகாது. சமுசாரம் மெய்யாயிருக்குமாயின் அதன் நிவிர்த்திக்கு மெய்யான் வேத குருக்கள் தேவை. அங்ஙன மில் லாமையால் இது பொருந்தும். அன்றியும், ஒருவன் சொப்பனத்தில் புலியைக்கண்டு பயந்து அலறிக்கூச்ச லிட்டு விழித்துக்கொள்கிறான். அவன் கண்ட புலி பொய்யே யாயினும் அவன்விழிப்பும் இதயத்துடிப்பும் கூக்குரலும் மெய்யே யன்றோ? அதுபோல, வேத குருக்கள் பொய்யே யாயினும் முத்தியுண்டாதல் சத் தியமாம்.

விவேகா:— சமுசாரம் பொய்யாயின் அதனை நீக்க முயல்வ தேன்?

குரு:—ஒருவன் நித்திரையில் அடிக்கடி தீய சொப்பனம் கா ணுதலும் பயப்படுதலுமா யிருக்கிறான். அதன் நிவிர்த் தியின் பொருட்டு ரட்சைகட்டுதல் முதலிய உபாயங் களைச் செய்கிறான். ஆனால் சொப்பனம் பொய் என்ப தை அவன் அறியாதவனன்று. அறிந்து அவ்வாறு செய்கிறான். அதனால் அச்சொப்பனங்க ளொழிகின் றன. அதுபோல, சமுசாரம் பொய்யாயினும் அதன் நிவிர்த்தியின்பொருட்டு உபாயம் அவசியம் செய்யப் படல் வேண்டும்.

விவேகா:— கருணாமூர்த்தியே! தாங்கள் இதுகாறும் திரு வாய் மலர்ந்தருளிய விஷயங்களின் சாரத்தை அடி யேன் உய்யுமாறு கூறியருளல் வேண்டும்.

## உபதேச சாரம்.

குரு:—'நீ சரீரமன்று, பிராண னன்று, மன மன்று, புத்தி யன்று, இவற்றிற் கெல்லாம் அதீதமானவன். ஆதலால் உனக்கு ஜனன மில்லை, மரண மில்லை, துக்க மில்லை, பந்த மில்லை, நீ சச்சிதானந்த வடிவினன், அசங்கன், பிரஹ்ம சொரூபி. இச்சமுசாரம், துக்கம், ஜாதி முதலிய யாவும் உன்னிடத்தில் கற்பனையாக உன தறியாமையால் (உன் நிஜவடிவம் இன்னதென் றுணராமையால்) காணப்படுகின்றனவே யன்றி உண்மையி லில்லை;' என்பவையே இதுகாறுங் கூறிவந்த விஷயங்களாமென் றறிவாயாக.

## அஷ்டப் பிரமாணங்கள்.

விவேகா:— என் பிறவியைப் போக்கவந்த பெருமானே! நான் பிரஹ்ம சொரூபியா யிருக்கிறேன் என்பதை யறிதற்குப் பிரமாண முண்டோ?

குரு:—பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம், அருத்தாபத்தி, உவமானம், அநுபலத்தி, சம்பவம், ஐதிகம் எனப் பிரமாணங்கள் எட்டாம். இவற்றுள், வேதாந்திகளால் அங்கீகரிக்கப்படும் பிரமாணங்கள் முதல் ஆறேயாம். இப் பிரமாணங்களில் ஆகமப் பிரமாணத்தாலன்றி வேறு எப் பிரமாணத்தாலும் வஸ்து நிர்ணயம் செய்தலியையாது. ஏனெனில்,

(1) பிரஹ்மமானது கண் முதலிய இந்திரியங்களால் காணமுடியாத தாகலின் பிரத்தியட்சத்தா லறிய முடியாததாம்.

(2) தீயின் காரியமாகிய புகையைக்கண்டு அங்கே தீயுண்டென்றறிதல் அனுமானம். பிரஹ்மமானது காரண காரியமற்றதாகலின் அனுமானத்தா லறிய முடியாததாம்.

(3) பசுப்போலிருக்கும் காட்டுப்பசு என்றறிவது உவமானமாம்.

உவமானத்தாலறிவதற்குப் பிரஹ்மம்போல மற்றொரு பொருள் இருத்தல் வேண்டும். பிரஹ்மம் சுஜாதிய விஜாதிய சுவகத பேதமற்றதாகலின் உவமானத்தாலுமறிய முடியாததாம்.

(4) பகலுண்ணுதவன் பருத்திருப்பதை நோக்கி இரவிலுண்கிறான் என்றறிவது அருத்தாபத்தியாம். அதாவது குறியாலறிதல். பிரஹ்மம் குறிகடந்ததாகலின் அருத்தாபத்தியாலும் அறியமுடியாததாம்.

(5) ஒரு வஸ்து ஓரிடத்தில் தோற்றுமையைக் கொண்டு, அது அங்கு இல்லை என்றறிவது அனுபலத்தியாம்.

பிரஹ்மம் எக்காலத்தும் சதோதயமாக விளங்குவதாகலின் அனுபலத்தியாலும் அறியமுடியாததாம்.

(6) காலங்களுக்கு அதீதமாகலின் ஐதிகத்தாலுமறிய முடியாததாம்.

(7) நூறு என்னும் எண்ணின்றி, ஆயிரம் என்னும் எண் சம்பவியாது. ஆகலின் ஆயிரத்தில் நூறு இருக்கிறது என்றறிதல் சம்பவமாம்.

பிரஹ்மம் பிண்டப்பொருளுமன்று; பிண்டித்த பொருளுமன்று. ஆதலால் சம்பவப் பிரமாணத்தாலுமறிய முடியாததாம்.

இவ்வாறு வேறெப் பிரமாணத்தாலும் அறியப்படாமல் ஆகமப் பிரமணத்தால் மாத்திரம் அறியக் கூடியதாமென்றுணர்க.

விவேகா:— ஆகப் பிரமாண மாவது யாது ?

குரு:—"உடமையுண ராத்தனுரை யானதிதீ ராதியுற
கனியாதிக ளுண்மை ஞான மாகமமாம்." என்கிறபடி, ஆற்றங்கரை முதலிய விடங்களில் பழம் முதலியன விருத்தலை யறிந்த, உண்மையை யுரைப்போனது வாக்கியத்தால், ஆற்றங்கரை முதலிய விடங்களில் பழம் முதலிய பொருள்களிருத்தலை யறிவது ஆகமப் பிரமாணமாம். இதன்படி, பரமேசுவரனுல் சொல்லப்பட்ட வேதங்களும் அவற்றை யனுசரித்துள்ள சாஸ்திரங்களும் கூறும் வாக்கியங்களால் அறிவது ஆகமப் பிரமாணமாம்.

விவேகா:—அன்புள்ள பிதாவே! அந்தவேதம் என்ன கூறுகின்றது?

## நால்வேத மகாவாக்கியம்.

குரு:—இருக்கு-யசுர்-சாமம், அதர்வணம் என வேதம் நால் வகைப்படும். இந்நான்கு வேதங்களும் நான்கு வாக்கியங்களைக் கூறும். அவை இவை: (1) பிரஞ்ஞானம் பிரஹ்மம்—இது இருக்குவேத வாக்கியம். (2) அகம் பிரஹ்மாஸ்மி—இது யசுர்வேத வாக்கியம். (3) தத்துவமசி—இது சாமவேத வாக்கியம். (4) அயமாத்மாப் பிரஹ்மம்—இது அதர்வண வேத வாக்கியம். இவை மகா வாக்கியங்களெனவும் படும்.

விவேகா:— குருநாதா! இந்நான்கு வாக்கியங்களின் பொருள் என்ன?

குரு:—(1) பிரஞ்ஞானம் பிரஹ்மம் = ஞானவடிவ ஆத்மா பிரஹ்மம்.

(2) அகம் பிரஹ்மாஸ்மி = நான் பிரஹ்மமா யிருக்கிறேன்.

(3) தத்துவமசி = அது நீயா யிருக்கின்ருய்.

(4) அயமாத்மாப் பிரஹ்மம் = இந்த ஆத்மா பிரஹ்மம். இவையே அவற்றின் பொருளாம்.

விவேகா:—இவ்வாக்கியங்களிற் சிறந்த தெது?

குரு:—சாமவேதத்தில் சாந்தோக்கிய உபநிடதத்திலுள்ள தாகிய 'தத்துவமசி' மகாவாக்கியமே சிறந்ததாம். இதுவே உபதேச வாக்கியமுமாம்.

விவேகா:—தத்துவமசி மகாவாக்கியம் மாத்திரம் சிறந்த தெனப் படுவதேன்?

குரு:—மற்றைய வாக்கியங்கள் அநுபவ வாக்கியங்களாம்; தத்துவமசி மகாவாக்கியம் உபதேச வாக்கியமாம். அதனால் அது சிறப்புடையதாம்.

## வேதவாக்கிய வகை.

விவேகா:—இவற்றை யன்றி வேதத்தில் வேறு வாக்கியங்க ளில்லையோ?

குரு:—உண்டு. வேதத்திலுள்ள வாக்கியங்கள் விதிவாக்கி யம், நிஷேத வாக்கியம், சித்தார்த்த போதக வாக்கியம் என மூன்று வகைப்படும்.

(1) விதி வாக்கியம் :— யாகத்தைச் செய்யவேண்டும் கருமத்தைச் செய்யவேண்டும் என்பனபோல்வதாம். (இதைச்செய் இதைச்செய் எனக் கூறுவதாம்.)

(2) நிஷேத வாக்கியம் :—சூதாடலாகாது, கள்ளுண்ட லாகாது என்பன போல்வனவாம். (இதைச் செய்யா தே இதைச்செய்யாதே எனக் கூறுவதாம்.)

(3) சித்தார்த்த போதக வாக்கியம்:—விதி நிஷேதங்க ளின்றி, சர்வ சித்தமாக எப்பொழுதும் பெறப்பட்ட பொருளாகிய பிரஹ்மாத்ம ஐக்கிய அர்த்தத்தைப் போதிக்கும் வாக்கியமாம். இதுவே மகாவாக்கியமாம்.

விவேகா:—சுவாமி! இத் தத்துவமசி மகா வார்க்கியார்த்தத்தை நன்கு விளங்கக் கூறி யருளல்வேண்டும்.

குரு:—மிக்க விவேகசாலியாகிய விவேகாநந்தா! தத்துவமசி மகா வாக்கியத்தின் அர்த்தத்தை யறிவதால் உனக்கு நிச்சயஞான முண்டாகும். இதை விசாரியாத வரைக்கும் மனிதர்களுக்கு ஜனன மரண வடிவ சமுசார துக்கம் தொலைவதில்லை. இந்த மகாவாக்கிய விசாரத்தினால் சத்புருஷர் பரப்பிரஹ்ம சொரூபமாதலாகிய மோட்சம் எய்துகின்றனர். முக்தியையடைய விரும்புவோர்க்கு மகாவாக்கிய விசாரமே உத்கிருஷ்ட மார்க்கமாகும். ஆகலின், விளங்குமாறு கூறுகிறேன். மனத்தை ஒருமுகப்படுத்திக் கேட்பாயாக.

## மகாவாக்கியார்த்தம்.

'தத்துவமசி' என்னும் மகா வாக்கியமானது தத்+துவம்+அசி என்னும் மூன்று பதங்களை யுடையதாம். இதன் பொருள் தத்=அது, துவம்=நீ, அசி=இருக்கின்றாய். எனவே, 'அது நீயாயிருக்கின்றாய்' என்பது இதன் திரண்ட பொருளாம். இனி 'தத், துவம்' பதங்களின் வாச்சியார்த்த லட்சியார்த்தங்களைக் கூறுகிறேன், கேள்.

விவேகா:—சுவாமி! வாச்சியார்த்த மென்று லென்ன? லட்சியார்த்த மென்று லென்ன?

## வாச்சியார்த்தம்.

குரு:—நம்மால் பேசப்படும் வாக்கியங்களி லுள்ள ஒவ்வொரு பதத்திலும் பொருளின் ஞானத்தை யுண்டு பண்ணும் சக்தி யொன்றிருக்கின்றது. கடம் என்று சொல்லுகிற பொழுது, கடம் என்னும் பதமானது குடம் என்னும் ஒரு பொருளின் ஞானத்தை உண்டுபண்ணுகின்றது. அந்த ஞானத்தை யுண்டுபண்ணும் சாமர்த்தியம் எது

வோ அதுவே சக்தியாம். அந்தச் சக்தியையுடைய அந்தப்பதத்தின் அர்த்தம் சக்கியார்த்தமாம். அச்சக்கியார்த்தம் வாச்சியார்த்த மென்றும் முக்கியார்த்த மென்றும் சொல்லப்படும். இதில், சொல்லுக்கும் அர்த்தத்திற்கும் நேரான சம்பந்த மிருக்கின்றது.

## லட்சியார்த்தம்.

அந்த வாச்சியார்த்தத்தினுல் பொருள் பொருத்த முண்டாகாதாயின் அவ்விடத்தில் கற்றுணர்ந்த பெரியோர் பொருள் பொருத்த முண்டாவதற்காக வாச்சியார்த்தப் பொருளை விட்டு லட்சியார்த்தத்தாற் பொருள் கொள்வர். பதத்தின் சக்தியால் அர்த்தம் ஏற்படாமல், அந்த அர்த்தத்தின் மூலமாக, அந்த அர்த்தத்தோடு சம்பந்த முடைய வேறு அர்த்தத்தைக் காட்டுவது லட்சியார்த்தமாம். இந்த லட்சியார்த்தத்தில் பதத்திற்கும் அதன் பொருளுக்கும் நேரான சம்பந்த மில்லாமல், சக்கியார்த்தத்தின் மூலமாக வேறு பொருளோடு பரம்பரையாகச் சம்பந்த மிருக்கின்றது. அதாவது,

ஒரு சொல்லிற்கும் அதன் அர்த்தத்திற்கும் உள்ள சம்பந்தம் சப்தத்தின் விருத்தி எனப்படும். அந்த் விருத்தி சக்தி விருத்தி லட்சணவிருத்தி என இருவகையாம். பதத்திற்கும் அதன் அர்த்தத்திற்கு முள்ள நேரான சம்பந்தம் சக்தி விருத்தியாம். சக்திவிருத்தியினு லறியப்படும் அர்த்தம் எதுவோ அது வாச்சியார்த்த மெனப்படும். வாச்சியார்த்தத்தோடு சம்பந்த முடையது லட்சண விருத்தியாம். அந்த லட்சண விருத்தியா லறியப்படும் அர்த்தம் லட்சியார்த்தமாம்.

**விவேகா:**—பெருமானே! லட்சியார்த்தத்தை நன்குணரும் பொருட்டு உதாரணமுகத்தால் விளக்கியருளப் பிரார்த்திக்கிறேன்.

## லட்சணையின் பேதங்கள்.

குரு:—பின்னர் விளக்கப்படும் உதாரணங்களால் நன்கு புலனும். நிற்க, அந்த லட்சணை விட்ட லட்சணை, விடாத லட்சணை, விட்டு விடாத லட்சணை என மூவகைப்படும். அவை முறையே ஜஹத் லட்சணை, அஜஹத் லட்சணை, ஜஹத ஜஹத் லட்சணை அல்லது பாகத்தியாக லட்சணை எனவும் கூறப்படும். இனி, இம்மூன்று லட்சணைகளையும் உதாரணத்தோடு விளக்குகிறேன், கவனி.

### (1) விட்ட லட்சணை.

வாச்சியார்த்தம் முழுவதையும் விட்டு அதன் சம்பந்தத்தை அறிவிப்பது விட்ட லட்சணையாம். உதாரணமாக:

ஒருவன் 'கங்கையில் இடைச்சேரி இருக்கின்றது' என்கிறுன். இங்கு, கங்கை என்னும் பதத்திற்கு கங்காநதியின் பிரவாகம் வாச்சியார்த்தமாம். அந்தப் பிரவாகத்தில் இடைச்சேரி இருக்கமுடியாது. ஆனுல், அக் கங்கையின் கரையில் இருக்கும். ஆதலால், வாச்சியார்த்தம் முழுவதையும் விட்டு அக்கங்கையோடு சம்பந்தமுடைய கரை என்று பொருள் படுகிறது. இதுவே விட்ட லட்சணையாம்.

### (2) விடாத லட்சணை.

வாச்சியார்த்தத்தை விடாமலே அதன் சம்பந்தத்தையு மறிவிப்பது விடாத லட்சணையாம். உதாரணமாக:

ஒருவன் 'சிவப்பு ஓடுகிறது' என்கிறுன். இவ்வாக்கியத்தில் 'சிவப்பு' என்பது ஓர் நிறத்தின் பெயராம். நிறம் ஓடுதல் முடியாது. ஆதலால், சிவப்பு நிறமுடைய மாடு ஓடுகின்றது என்று பொருள்படுகின்றது. இது விடாத லட்சணையாம். இதில் சிவப்பு நிறத்திற்கும் அந்நிறத்தையுடைய எருதிற்கும் சம்பந்தமிருக்கின்றது. மேலும், சிவப்பு என்னும்

பதம் வாச்சியார்த்தத்தை விடாமலே அதன் சம்பந்தியான வேறு பொருளையு முணர்த்துவ தறிக.

## (2) விட்டுவிடாத லட்சணை.

பதத்தின் வாச்சியார்த்தத்தில் ஒரு பாகத்தை விட்டு ஒரு பாகத்தை மாத்திரம் அறிவிப்பது விட்டுவிடாத லட்சணையாம். உதாரணமாக:—

ஒருவன் ஒரு காலத்தில் சென்னையில் பிரபல வியாபாரியாயிருந்த ஒருவனைப் பத்து வருடங்களுக்குப் பின்பு தஞ்சையில் சன்யாசக் கோலத்தோடு பார்த்தான். ஆயினும், இன்னனென் றறிந்து 'அவனே இவன்' என்று நிச்சயித்தான். 'அவனே இவன்' என்பதில் 'அவன்' என்பதற்கு சென்னையில் பத்து வருடங்கட்கு முன் வியாபாரியா யிருந்தவ னென்பதும், 'இவன்' என்பதற்கு, தஞ்சையில் இப்பொழுது சன்யாசியாக வுள்ளவ னென்பதும் வாச்சியார்த்தமாம்.

இவ்வாச்சியார்த்தத்தில் விரோதபாக மிருக்கின்றது. எவ்வாறெனின்,

இறந்த காலத்திற்கும் நிகழ்காலத்திற்கும், சென்னைக்கும் தஞ்சைக்கும், வியாபாரத் தொழிலிற்கும் சன்யாசத் தொழிலிற்கும் விரோதம் இருக்கின்றது. இவ்வாறு, இரு பதங்களிலும் விரோதமாக வுள்ள வாச்சிய பாகங்களை விட்டு, விரோத மில்லாத ஆள்மாத்திரத்தைக் கொள்ளல் வேண்டும். இதுவே விட்டு விடாத லட்சணையாம். இனி, 'தத்', 'துவம்' பதங்களின் வாச்சியார்த்த லட்சியார்த்தங்களைக் கூறுகிறேன்.

## 'தத்' பதவாச்சியார்த்தம்.

'தத்துவமசி' என்னும் மகாவாக்கியத்திற்கு 'அது நீயாயிருக்கிறாய்' என்பது திரண்ட பொருளாம் என முன்னர்

கூறினேன். இதில் 'தத்' (அது) என்னும் பதம் ஈச்வரனைக் குறிக்கின்றது. ஆகவே மாயை, அதிலுள்ள சேதனத்தின் ஆபாசம், அதன் அதிஷ்டான சேதனம் இம்மூன்றும் கூடிய சர்வ சக்தித்துவம் சர்வஞ்ஞத்துவம் சர்வ சுதந்திரத்துவம் சர்வேசுவாத்துவம் முதலிய தர்மங்களையுடைய ஈசுவரனே 'தத்' பதத்தின் வாச்சியார்த்தமாம்.

## 'துவம்' பத வாச்சியார்த்தம்.

'துவம்' (நீ) என்பது ஜீவனைக் குறிக்கின்றது. ஆகவே, வியஷ்டி அவித்தை, அதிலுள்ள சேதனத்தின் ஆபாசம், அதன் அதிஷ்டான சேதனம் இம்மூன்றும் கூடிய அற்ப சக்தி, அற்ப அறிவு முதலிய தர்மங்களையுடைய ஜீவனே 'துவம்' பதத்தின் வாச்சியார்த்தமாம்.

## 'அசி' பதார்த்தம்.

'அசி' என்னும் பதம் 'தத்,' 'துவம்' பதங்களின் ஐக்கியத்தை யுணர்த்துவதாம்.

## தத் துவம் பத வாச்சியார்த்த விரோதம்.

வாச்சியார்த்தத்தின்படி 'தத், துவம்' பதங்களுக்கு ஏகத்துவம் பொருந்தாது. ஏனெனில்,

ஈசுவரன் சர்வசக்தி யுடையவன்; ஜீவன் அற்பசக்தி யுடையவன்.

ஈசுவரன் எல்லாவற்றையும் அறியும் பேரறிவுடையவன்; ஜீவன் அற்ப அறிவுடையவன்.

ஈசுவரன் மாயையைத் தன்வசத்தில் வைத்திருப்பவன்; ஜீவன் மாயையின் வசப்பட்டவன்.

ஈசுவரன் சமஷ்டி சரீர முடையவன்; அதனுல் வியாபகன்; ஜீவன் வியஷ்டி சரீரமுடையவன், அதனுல் பரிச்சின்னன்.

இவ்வாறு ஒன்றற்கொன்று நேர் விரோதமான தர்மங்களையுடைய இவ்விருவரும் ஒன்றெனச் சொல்லுதல், 'ஒளியும் இருளும் ஒன்று' எனக் கூறுவதை யொக்கும். ஆனால், வேதமோ ஐக்கியத்தைப் போதிக்கின்றது. வேதம் பொய் பேசாது. ஆதலால், வாச்சியார்த்தத்தை விட்டு லட்சியார்த்தத்தால் பொருள் கொள்ளல் வேண்டும்.

லட்சணையிலும், விட்ட லட்சணை விடாத லட்சணைகளால் பொருள் பொருத்த முண்டாகாது. ஏனெனின்,

## விட்ட லட்சணையால் அர்த்தம் சம்பவியாமை.

விட்ட லட்சணையில் வாச்சியம் முழுதும் விடுபட்டு அதன் சம்பந்தியான வேறு பொருள் கிரகிக்கப்படுகின்றது. அதன்படி மகா வாக்கியத்திலும் வாச்சியபாகம் முழுதும் விடுபட்டு வேறு பொருள் கிரகிக்கப்படல் வேண்டும். அவ்வாறு கிரகிப்பதாயின் அவ்வாச்சியார்த்தத்தினும் வேறான சூனியம் கிரகிக்கப்பட வேண்டியதாகும். ஆதலின் விட்ட லட்சணையால் அர்த்தம் சம்பவியாது.

## விடாத லட்சணையால் அர்த்தம் சம்பவியாமை.

விடாத லட்சணையில் வாச்சியார்த்தம் விடுபடாமல் அதிகமான ஒரு பொருளும் கிரகிக்கப்படுகின்றது. அதன்படி மகா வாக்கியத்திலும் வாச்சியபாகம் முழுதும் இருத்தல் வேண்டும். ஆனால் வாச்சியபாகம் விரோதத்தன்மையுடையதாயிருக்கின்றது. ஆதலால் அதனை முழுதும் விடாதிருத்தலால் விரோதம் நீங்காது. அன்றியும், அதிகப்பொருள் கிரகிக்கப்பட வேண்டுமானால் பிரஹ்மத்தினும் வேறான பொருளைச் சேர்த்தல் வேண்டும். அதுவும் அசங்கதம். இவ்வாற்றால் விடாத லட்சணையாலும் பொருள் கிரகிக்கப்படாது.

## விட்டுவிடாத லட்சணையால் அர்த்த சம்பவம்.

வாச்சியத்திலுள்ள விரோதபாகத்தை விட்டு விரோதமில்லாத பாகத்தைக் கொள்ளுதல் விட்டுவிடாத லட்சணையாம் என்பது முன்னர் கூறப்பட்டது. அதன்படி, ஆபாச சகிதமாயையும் அவித்தையும் மகாவாக்கிய வாச்சியத்தில் விரோதபாகமாதலின் அவ்விரண்டையும் நீக்கி, விரோதமின்றிய பாகமாகிய சேதனத்தைக் கொள்ளல்வேண்டும். அங்ஙனம் கொள்ளுமிடத்து கடாகாச மகாகாசங்களுக்கு அபேதமிருத்தல்போல, சீவ சாட்சியாகிய கூடஸ்தனும் ஈசுவர சாட்சியாகிய சேதனமும் ஒன்றே என்பது பெறப்படும். இதுவே தத்துவமசி மகாவாக்கியத்தின் பொருளாம்.

விவேகானந்தா! தத்துவமசி வாக்கியத்தின் பொருள் இப்பொழுது நன்கு விளங்குகின்றதா? இனி ஏதேனும் கேட்கவேண்டிய திருப்பின், கேள்.

**விவேகா:**—என தஞ்ஞானத்தை யகற்றவந்த ஆசிரியோத்தமா! தங்கள் அருளால் மகா வாக்கியப்பொருள் நன்கு விளங்கிற்று. சுவாமி! இனி நான் செய்யவேண்டியதென்ன?

## குந்திபுத்திர திருஷ்டாந்தத்தால் உண்மை நிலையுணர்தல்.

குந்தி புத்திரனை கர்னன் மிக்க புஜபலபராக்கிரமமுடையவனாயிருந்தும், தான் இன்னானென் றறியாமையால், தன்னை ஓர் தேர்ப்பாகன் மகனெனக் கருதி மனவாட்டமுற்றிருந்தான். ஒரு நாள் குந்தியானவள் அவனிடஞ் சென்று, அவன் தேர்ப்பாகன் மகனல்லவென்றும், தன்னுடைய மகன்தான் என்றும் தக்க திருஷ்டாந்தங்களால் தெரிவித்தாள். அதனால் அவன், 'நான் சாரதியின் மகன்' என்

றெண்ணியிருந்த எண்ணத்தைவிட்டு இராஜ குமாரனென்று கருதி களிப்படைந்தான். அது போல,

தன் நிஜநிலையை யறியாமையால் தான் ஜீவனென்றும் ஜனன மரணாதி துக்கங்களை யுடையவனென்றும் கருதித் துன்புற்றிருந்த ஜீவன் மகா வாக்கியோபதேசத்தால் நான் ஜீவனல்ல; ஜீவசாட்சியாகிய கூடஸ்தவடிவப் பிரஹ்மமே நான்; நான் சச்சிதானந்த வடிவினன்; நான் மூன்று தேகங்களுக்கும் வேறாயிருப்பவன்; நான் மூன்றவஸ்தைகளுக்கும் சாட்சியாயுள்ளவன்; நான் பஞ்ச கோசங்களுக்கும் அப்பாற்பட்டவன்; ஜனன மரணம் முதலிய துவந்துவங்கள் எனக்கில்லை; நான் நித்திய முக்தன் என்றறிந்து,

"கடமடமா முபாதிகளை நேதி செய்யிற்
கடவானு மடவானு மொன்றே போல
மடமைமுத லுபாதிகளை நேதி செய்யின்
மாசற்ற வான்மாவும் பரமு மொன்றே
யிடமருவும் வேதாந்த விசாரத் தாலே
யிருமைதரு முபாதியெலா நேதி பண்ணித்
திடமருவு மான்மபர வைக்கி யத்தைத்
தடையறவே முமுட்சுவெலா மறிய வேண்டும்."

என்று ரிபுகீதையிற் கூறப்பட்டுள்ளபடி, கடம் மடம் என்னும் உபாதிகளிருப்பதால் கடாகாச மென்றும் மடாகாச மென்றும் வெவ்வேறு பெயர்களுண்டாயின. அவ்விரண்டு உபாதிகளையும் நீக்கிப்பார்க்கின் கடாகாசமும் மகாகாசமும் ஒன்றாகவே யிருத்தல்போல, மாயை முதலிய உபாதிகளை நீக்கிப் பார்க்கின் ஜீவனும் பிரஹ்மமும் ஒன்றேயாம் என்னும் ஜீவப் பிரஹ்ம ஐக்கிய ஞானத்தை அடைதல் வேண்டும்.

"ஆன்மாவிற் கற்பிதமாய்க் காண்ப தெல்லா
மான்மாவுக் கயலாக வென்று மில்லை

ஆன்மாவுக் கயலாகப் பிரம மில்லை
யப்பிரமந் தனக்கயலா யான்மா வில்லை
யான்மாவே பிரமமதாம் பிரமந் தானே
யான்மாவா மணுவுமிதி லைய மில்லை
யான்மாவா மகம்பிரம மென்றெப் போது
மான்மபர வைக்கியமே யறிய வேண்டும்."

என்றபடி, ஆராய்ந்து பாராமையால் ஆன்மாவினிடத்துக் கற்பிதமாகக் காணப்படும் இவ்வுலகம் ஆன்மாவிற்கு அன்னியமாக அணுவளவு மின்றாம். அந்த ஆன்மாவும் பிரஹ்மத்தினும் வேறானதன்றாம். ஆதலால், 'எனக்கு மன்னியமா யுலகமொன்றில்லை'; எல்லாம் என்வடிவமாகவே யிருக்கின்றன; எல்லாம் பிரஹ்ம சொரூபமே. நான் வேறு, அவன் வேறு, அவள்வேறு, அதுவேறு என்னும் துவைத புத்தியினாலேயே எனக்கித் துக்கம் உண்டாயிற்று என்றிவ்வாறு உன் நிஜவடிவை யறிந்து, எல்லாம் உன்வடிவாகவே கண்டு பிரஹ்மானந்த வாரியில் திளைத்திருப்பாயாக.

விவேகா:—சுவாமி! 'எனக்கு மன்னியமாய் உலகமொன்றில்லை' என்றீர்களே. அதனை விளக்கி யருளவேண்டும்.

குரு:— உத்தம மாணவக! இது காறும் நாம் செய்துவந்த சிறு ஆராய்ச்சியால் பிரஹ்ம மொன்றே வாஸ்தவப் பொருள் (முக்காலத்து முள்ள சத்தியப் பொருள்) என்றும், நாநாபேதங்களாகக் காணப்படும் பிரபஞ்சம் அவாஸ்தவப்பொருள் என்றும், அப்பிரபஞ்சம் கயிற்றிற் பாம்பு கற்பிதமா யிருத்தல் போலப் பிரஹ்மத்தினிடத்துக் கற்பிதமா யிருப்பதென்றும், அந்தப்பிரஹ்மமும் ஆத்மாவிற் கன்னியமாக விராமல் ஆத்ம சொரூபமாகவே யிருத்தலின் 'பிரஹ்மமே ஆத்மா; ஆத்மாவே பிரஹ்மம்' என்றும் அறிந்தோமன்றோ? அதன்படி மித்தையாகிய பாம்பு எதினின் றுண்டாயிற்று?

விவேகா:— கயிற்றினிடத்தில்

குரு:— ஆகவே, கயிறு அச்சர்ப்பத்திற்கு அதிஷ்டானமாம். அதுபோல மித்தையாகவுள்ள பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானம் எது ?

விவேகா:— பிரஹ்மம்.

குரு:— அது உன்னினும் வேறோ?

விவேகா:— அன்று.

குரு:— ஆகலின் நீயே பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமாயிருக்கின்றாயென்பதில் இழுக்கென்னை? அன்றியும், கயிற்றை யறியாமையால் மித்தியாசர்ப்பம் தோற்றுகிறது. கயிற்றைக் கயிறெனக் கண்டவிடத்து அங்ஙனம் தோன்றுவதின்று. அஃதேபோல, உன் நிஜ சொரூபத்தை யறியாமையால் இவ்வுலகம் தோற்றுகின்றது. உன்னைப் பிரஹ்மமாகக் கண்ட விடத்து ஜகத்துத் தோன்றுவதில்லை. ஆதலால் இம் மித்தியாப் பிரபஞ்சத்திற்கு நீயே அதிஷ்டான மென்றறியக் கடவாய்.

விவேகா:— சுவாமி! அதிஷ்டானமாகிய கயிறு தோன்றுவதில்லையாயின் பாம்பு தோன்றுவதில்லை. கயிறு காணப்படுமாயின் அப்பொழுதும் பாம்பு தோன்றுவதில்லை. அதுபோல, ஆத்ம சொரூபத்தை ஆவரண சக்தியானது அறியவொட்டாமல் மறைத்திருக்குமாயின் உலகம் தோன்றலாகாது. ஞானத்தால் ஆவரணத்தை நீக்கி ஆத்ம சொரூபத்தைக் கண்டகாலத்தும் உலகம் தோன்ற லாகாது. ஆனல், இரண்டு காலத்தும் தோற்றுகின்றது. இவ்வைசயத்தை ஐயனே! அகற்றியருளவேண்டும்.

குரு:—விவேகாநந்தா! இங்கு இவ்விஷயம் அறியத்தக்கதாம். சாமானியம் விசேஷம் என ஆதாரம் இருவகைத்தாம்.

கயிற்றில் பாம்பை யுணரும் பிராந்தி காலத்தும் 'இது பாம்பு' என்கின்றனர். கயிற்றைக் கயிருகக் கண்ட பிராந்தி யின்றிய காலத்தும் 'இது கயிறு' என்கின்றனர். ஆகவே, பிராந்தி காலத்தும் பிராந்தி நீங்கிய காலத்து முள்ள 'இது' என்னப்படுவது ஆதாரத்தின் சாமானிய வடிவாம். அவ்வாறே,

ஒருவன் ஞான மெய்துதற்கு முன்னரும் மனிதனுகிய 'நான் உளன்' எனக்கூறுகிறுன்; ஞானமெய்திய பின்னரும் சச்சிதானந்த சொரூபியாகிய 'நான் உளன்' எனக் கூறுகிறுன்; அந்த 'நான்' உளன் என்னப்படுவது சாமானிய வடிவமாம். பிராந்தியால் 'இதுபாம்பு என்றறிந்த காலத்து, பாம்பு என்றது கற்பிதவிசேஷ வடிவமாம். 'இது கயிறு' என்று உண்மையைக் கூறுமிடத்து 'கயிறு' வாஸ்தவ விசேஷ வடிவமாம். அவ்வாறே,

'நான் மனிதன்' என்பது போன்றவைகளால் தன்னைக் கூறியபொழுது, மனிதன் என்பது கற்பித விசேஷ வடிவமாம். நான் சச்சிதானந்த வடிவின னெனத் தன் நிஜவடிவைக் கண்டபொழுது, சச்சிதானந்த வடிவின னென்றது வாஸ்தவ விசேஷ வடிவமாம்.

ஆவரண சக்தியானது இவற்றில் விசேஷ வடிவை மறைக்கும் ஆற்றலுடைய தாகுமே யன்றி சாமானிய வடிவத்தை மறைக்கும் வல்லமை யுடையதன்ரும். ஆகவே, உலகம் தோற்றும விருத்தற்கு ஏதுவின்ரும். கானலை நீரன்றெனக் கண்ட காலத்தும் நீராகக்காணப்படுதல்போல, ஆதாரத்தைக் கண்டகாலத்தும் ஆதேயம் தோன்ரு திருப்ப தில்லையாம் என்றறிக.

விவேகா:—சர்ப்பத்திற்கு ஆதாரமாகிய கயிற்றை அக்கயிற்றினும் வேருயுள்ள புருஷனே காணக்கூடுமன்றி அக்

கயிறே அப்பாம்பைப் பார்த்தலியலா தன்றே! அது போல, ஜகத்திற்கு ஆதாரம் ஆத்மாவாயின் அந்த ஆத்மாவே ஜகத்தைக் காண்டல் கூடாது. அவ் வாத்மாவினும் வேறான் ஒருவனே ஜகத்தைக் காணுதல் வேண்டு மன்றோ?

குரு:— சொப்பனத்திற் காணப்படும் உலகம் முதலிய சகல பொருள்களுக்கும் ஆதார மெது? ஆத்மாவே யன்றோ? அச் சொப்பன பதார்த்தங்களைக் காண்போன் யார்? ஆத்மாவே யல்லவா? சொப்பன பதார்த்தங்களுக்கு ஆதாரமாயிருக்கும் ஆத்மாவே அவற்றைக் காண்பவனு யிருத்தல்போல, ஜகத்திற்கு ஆதாரமாகிய ஆத்மாவே அதனைக் காண்பவனு மாவன்; வேறொருவன் வேண்டுவதின்றாம். ஆதாரம் ஜடப் பொருளாயின் அதனைக் காண அதனினும் அன்னியமாகவொருவன் வேண்டும். ஆதாரம் சேதனமா யிருப்பின் வேறொருவன் வேண்டுவதின்று.

விவேகா:—சுவாமி! எல்லாவற்றையும் காண்பவனாகிய நான் என்னைக் காண்பதெப்படி? முக்கிய விஷயமாகிய இதனை அடியேனுக்கு அறிவிக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

குரு:— ஞானகுமாரா! உன்னை நீ காண்பதென்றால் ஒன்றை எதிரிட்டுக் காண்ப தென்று நினையாதே. உன்னால் பார்க்கப்படுவன வனைத்தும் உனக் கன்னியமாகலின் நீ யன்று. நீ அறியப்படு பொருளு மன்று; அறிபடாப் பொருளு மன்று. எல்லாவற்றையும் அறியும் அறிவே நீ. சொப்பிரகாசமான சூரியனைக் காண்டற்கு வேறொரு பிரகாசம் வேண்டுவதின்று. அதுபோல, சொப்பிரகாச ரூபமான உன்னைக் காண்பதற்கு வேறொரு பொருள் வேண்டுவ தின்றாம். ஆகலின்,

"தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவும் நழுவாமல் நழுவி நிற்கும்
ஆனாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வார்
அதுவானா லதுவாவ ரதுவே சொல்லும்.

என்றபடி, சொப்பிரகாச ஞானனந்த வடிவினனாகிய நீ உனது சொரூபத்தை உள்ளவா றுணர்ந்து உன்னை நீயே அனுபவித்தறிதல் வேண்டும். இதுவே சொரூப சாட்சாத்கார நிலையாம்.

விவேகா:—அந்நிலை எத்தகையது?

குரு:—ஞாதுரு ஞானம் ஞேயம் (காண்பான்—காட்சி—காட்சிப் பொருள்) என்னும் திரிபுடியற்ற நிலை; சகல சேவலங்களற்ற நிலை; இராப்பகலற்றநிலை; சும்மாவிருக்கும் நிலை; தூங்காமல் தூங்கும் நிலை. அதுவே உனதெதார்த்த நிலை.

விவேகா:—குருநாதா! அந்நிலையை நான் எப்பொழுதேனும் அனுபவித்திருப்பேனா?

குரு:—ஒவ்வொருவரும் பலமுறையும் அனுபவிக்கின்றனர். கவனித்துணராமையின் அறிவதில்லை. எவ்வெச் சமயங்களில் அந்த நிலை புலனாமென்பதைக் கூறுகின்றேன். முக்கியமாக மூன்று சமயங்களில் அதனை யறியலாம்.

(1) நித்திரைக்குச் செல்லுங்காலம். ஒருவன் தூங்குவதற்காகப் படுக்கையிற் படுத்தவுடன், உலக வியவகாரங்களைச் சிறிது நேரம் சிந்தித்துக்கொண்டிருப்பான். பின்பு உலக எண்ணங்கள் சிறிது சிறிதாகக் குறைவுபட்டுப் போ

கும். உலகை மறக்கிறான். சரீரத்தோற்றமு மிருப்பதில்லை; ஆனால் தூங்கவில்லை. தான் என்னும் எண்ணம் மட்டும் இருக்கின்றது. தன்னை யறிந்துகொண் டிருக்கிறான். அந்த நிலையே அவனது நிஜநிலையாம்.

(2) அங்ஙனமே நித்திரையினின்று விழிக்கும் பொழுதும் முதலில் உலகத்தோற்றமும் சரீரத்தோற்றமு மின்றி 'நான்' என்னும் உணர்ச்சி மாத்திரம் தோன்றுகிறது. அந்த 'நான்' என்னு முணர்ச்சியோடிருந்த நிலையே அவனது நிஜ நிலையாம்.

(3) சாக்கிராவத்தையில் ஒரு விஷயத்தைக் குறித்து நினைத்துக்கொண் டிருக்கையில், சில சமயங்களில், திடீரென்று அந்நினைவு நீங்கி வேறொரு நினைவு தோன்றுகிறது. அவ்விரண்டிற்கும் இடையிலிருந்த நிலையே அனது நிஜநிலையாம்.

ஆனால், அது மின்னல்போல நொடியிற்றோன்றி மறைந்து விடுதலின் நுட்பமாக ஊன்றிக் கவனித்தாலன்றித் தோன்றுவ தன்றாம். அதுவே சகலமும் (சாக்கிரமும்) கேவலமும் (நித்திரையும்) அற்ற நிலையென்றும், இரவும் (நித்திரையும்) பகலும் (சாக்கிரமும்) அற்ற நிலையென்றும், நனவிற் சுழுத்தியென்றும், நினைப்பு மறப்பு அற்ற விடமென்றும் கூறப்படும். இதுவே பிரஹ்மானந்த நிலையாம்.

"சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே."

"செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே."

"தூங்காமற் றூங்கிநான் சுகம்பெறுவ தெக்காலம்."

"கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெது."

"இராப்பக லில்லாவிடத்தே வெண்ணிலாவே நானும்
இருக்க வெண்ணி வாடுகிறேன் வெண்ணிலாவே."

என்றும் இன்னும் பலவாறு புகழ்ந்து அதனை யடை யவே அரும்பாடு பட்டிருக்கின்றனர் ஆன்றோரெல்லாம்.

**விவேகா:**—தேசிகோத்தமரே! அந்த நிலையை யடைவதெங் ஙனம் ?

**குரு:**—சமாதி அப்பியாச வாயிலாக அடைதல் வேண்டும்.

**விவேகா:**—சமாதி யாவதென்ன? அதனை விளக்கமாகக் கூறி யருளவேண்டும்.

**குரு:**—விஷயாந்தரங்களில் ஓடி யுழலும் மனத்தின் சகல வியவகாரங்களை (விருத்திகளை) யும் தடுத்து 'நான் பிரஹ்ம' மென்னும் ஆத்மாகார விருத்தியை எழுப்பித் தற்சொரூபத்தில் அசைவற நிறுத்தித் தானே தானாக நிலைத்திருத்தலே சமாதியாம்.

## சமாதியின் வகை.

அந்த சமாதி (1) சவிகற்ப சமாதி (2) நிருவிகற்ப சமாதி என்று இருவகைப்படும்.

(1) **சவிகற்ப சமாதி:**—ஆத்ம சாட்சாத்காரத்தை யடைய விரும்புமொருவன் மனித சஞ்சாரமில்லாததாயும் சுத்தகாற்று உலாவுவதாயும், கொசுகு முதலியவை இல்லாததாயுமுள்ள ஏகாந்த ஸ்தானத்தில், எவ்வாறிருந்தால் சுகமாயிருக்குமோ அவ்வாறிருப்பதாகிய சுகாசனமிட் டுட்கார்ந்து, கழுத்தும் மார்பும் வளைந்திராதபடி தறி (கட்டை) போல் நிமிர்ந்திருந்து கொண்டு, கண்ணை முழுவதும் மூடாமல் அரைப்பார்வை யாக்கி, பார்வையை நாசி நுனியில் நிறுத்தி, உலக வியவகாரங்களில் ஓடியுழலும் மனத்தை அங்ஙனம் ஓடவிடாமல் தடுத்து ஆத்ம சொரூபத்தில் நிலைத்திருக்கச் செய்யப் பழகவேண்டும்.

இது ஆரம்பத்தில் சிரமமாக விருப்பினும் இடைவிடா அப்பியாசத்தால் காரியசித்தி யுண்டாம். அப்பியாச காலத்தில் மனம் திடீரென்று லட்சியத்தில் நிலைபெறாது படிப்படியாகச் சென்று முடிவில் லட்சியத்தை யடையும். அந்த நிலையைப் பெரியோர் 'விருத்தி' என்பர்.

லட்சியம் இதுதான் என்று நன்கு விளங்கும்பொருட்டு அந்நிலைகளின் வேறுபாடுகளை யறிதல் அத்தியாவசியமாம். அவற்றில் முதலாவது நிலைக்குச் சவிகற்ப சமாதி யென்பது பெயராம். (விகற்பத்தோடு கூடியது சவிகற்பம்). அதாவது அந்தக்கரணமானது அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் உள்ளதாயினும் திரிபுடியின் தோற்றத்தோடு கூடியதாயிருக்கும்.

(அந்தக்கரணமானது ஆத்மாவைக்காண வேண்டுமென்னும் எண்ணத்தோடிருக்கும். அதனால் அங்கே காண்பவன் ஒருவன்—காணப்படும் பொருள் ஒன்று—இரண்டிற்கும் இடையே யுள்ள காட்சி ஒன்று இம்மூன்றின் தோற்றமும் உண்டு. இதுவே திரிபுடியாம்). அதனால் அது சவிகற்பமாம்.

அந்தச் சவிகற்ப சமாதி காலத்தில் 'அகம் பிரஹ்மாஸ்மி' ('நான் பிரஹ்மமா யிருக்கிறேன்') என்று தன் காதிற்கு மாத்திரம் கேட்கும்படி மனதிற்குள் சிந்தித்துக்கொண்டே தொடங்குதல் வேண்டும். செல்லச் செல்ல அச்சிந்தனையும் தானாகவே நழுவிவிடும். ஆதலால் சவிகற்ப சமாதியும்,

(1) சப்தானுவித்த சவிகற்பசமாதி:—(சப்த + அநுவித்தம்=சப்தத்தோடு கூடியது)

(2) சப்தாநநுவித்த சவிகற்ப சமாதி :—(சப்த + அநநுவித்தம்=சப்தத்தோடு கூடாதது) என இருவகைப்படும்.

(2) நிர்விகற்ப சமாதி:—சவிகற்ப சமாதியின் முதிர்ச்சி நிர்விகற்பமாகின்றது.

அந்தக்கரண விருத்தியானது திரிபுடித் தோற்றமின்றி அகண்ட பிரஹ்மாகாரமான நிலையை யடைவது நிர்விகற்ப சமாதியாம். இதிலும் இருவகை யுண்டு.

(1) சமாதி அப்பியாச முதிர்ச்சியால் திரிபுடித் தோற்றமின்றி 'நான் அத்துவைதப் பிரஹ்மமாயிருக்கிறேன்' என்னும் சொற்ப உணர்ச்சி மட்டும் இருக்கும். அது அத்துவைதபாவனரூப நிர்விகற்ப சமாதி எனப்படும்.

(2) இந்த அத்துவைத பாவனரூப சவிகற்ப சமாதியின் திடமான அப்பியாசத்தால் அந்தப் பிரஹ்மாகார விருத்தியும் நழுவி, அப்புவிற் (நீரிற்) கலந்த உப்பைப்போல பிரஹ்மத்தில் லயமாய்விடுகிறது. இதனை அத்துவைத அவஸ்தானரூப நிர்விகற்ப சமாதி என்பர்.

## சவிகற்ப நிர்விகற்ப சமாதி பேதம்.

(1) சவிகற்ப சமாதியில் திரிபுடித்தோற்ற மிருப்பதால் துவைதம் இருக்கிறது. ஆனால் பிரஹ்ம ரூபமாக விளங்குகிறது.

(2) நிற்விகற்ப சமாதியில் திரிபுடியாகிய துவைதம் தோன்றுவதில்லை. மேலும், இவ்விரண்டில் சவிகற்பம் சாதனம்; நிர்விகற்பம் சாத்தியம் அதாவது பலன்.

## நனவிற் சுழுத்தி.

இம்முடிந்த நிலையே நனவிற் சுழுத்தியென்றும் தூங்காமல் தூங்கும் நிலையென்றும் கூறப்படும். அதனால் சுழுத்தி காலத்தில் நாம் எந்த நிலையை யடைகின்றோமோ அந்த நிலையை சாக்கிர காலத்தில் அடைதல் வேண்டுமென்பது விளங்குகின்றது. ஆயினும் சுழுத்திக்கும் சமாதிக்கும் வேறுபாடுண்டு. அஃதியாதெனின்:—

## சுழுத்தி நிர்விகற்ப சமாதிகளின் பேதம்.

(1) சுழுத்தியில் அந்தக்கரண விருத்தி பிரஹ்மாகாரமாவதில்லை. மேலும், விருத்தியோடு கூடிய அந்தக்கரணமிருப்பதில்லை. அஞ்ஞானத்தில் லயமடைந்திருக்கும்.

(2) நிர்விகற்ப சமாதியில் பிரஹ்மாகார விருத்தியோடு கூடிய அந்தக்கரண மிருக்கின்றது. ஆனால் தோன்றுகிறதில்லை. பிரஹ்மத்தில் லயமாகின்றது,

## சமாதியில் மனமுண்டு.

**விவேகா:**—சமாதியில் மனமுண்டோ?

**குரு:**—உண்டு. இன்றேல் சமாதி செய்வோனது சரீரம் தூங்குவோனது சரீரம்போலக் கீழே சாய்ந்துவிடும். ஆகலின் சமாதி செய்வோன் இந்த விஷயத்தில் மிக்க எச்சரிக்கையா யிருத்தல்வேண்டும். இது வெகு சூட்சுமமான நிலை.

"ஏறுமயிர்ப் பாலமுணர் விந்தவிட யங்கனெருப்
பாறெனவு நன்று வறிந்தேன் பராபரமே."

எனத் தாயுமானவர் அருளியபடி, நெருப்பாற்றின்மேல் கட்டப்பட்டிருக்கும் மயிர்ப்பாலத்தின்மேற் செல்வோனுடைய நிலையைப்போன்றதாகும் இந்த நிலை. சிறிது தவறினால் விஷயங்களும் நித்திரையுமாகிய அக்கினியாற்றில் விழவேண்டியதே. நித்திரையி லிழுத்துக்கொண்டு போகுங் காலத்து சரீரம் சாயும். அவ்வாறுகாதவாறு எச்சரிக்கையோ டிருத்தல்வேண்டும்.

இவை சமாதிக்குத் தடையாம். இத்தடை (விக்கினங்)களின் தன்மையை யறிந்து அவற்றை உடனே நிவிர்த்திக்கும் பொருட்டுப் பெரியோர் அவ்விக்கினங்களை நான்கு வகையாகப் பிரித்துக் கூறியிருக்கின்றனர். அவற்றை யுனக்

குக் கூறுகிறேன். அன்புள்ள விவேகாநந்தா! கவனமாய்க் கேள்.

### சமாதி விக்கினங்கள்.

(1) லயம் (2) விக்ஷேபம் (3) கஷாயம் (4) ரஸாஸ்வாதம் என்னும் இந்நான்கும் நிர்விகற்ப சமாதிக்கு விக்கினங்களாம். இவற்றுள்,

(1) லயமாவது:— சமாதி யப்பியாசகாலத்தில் மனமொருமுகப் படுங்கால் நித்திரை வந்துவிடுமென்றும், அல்லது மனம் திடீரென்று உலக வியவகாரங்களிற் பாய்ந்துவிடுமென்றும் சொன்னேனல்லவா. அவ்வாறு நித்திரையில் விருத்தி ஒடுங்கிவிடுமாயின் அதாவது லயித்து விடுமாயின் அது லயம் என்னும் விக்கினமாம்.

(2) விட்சேபமாவது:—வெளி (பகிர்முக)ப்பட்டு விடுமாயின் அது விட்சேபமாம்.

(3) கஷாயமாவது :— அங்ஙனம் பகிர்முகப்படும் விருத்தி மனைவி மக்கள் முதலானவர்களிடஞ் சென்று ராகம் (ஆசை)முதலாகிய தோஷங்களை யடையுமாயின் அது கஷாயமாம்.

(4) ரஸாஸ்வாதமாவது:—அப்பியாசியானவன் விருத்தி பிரஹ்மாகாரமாகி நிர்விகற்ப சமாதியடையும் பொருட்டு முயன்று முற்கூறிய மூன்று விக்கினங்களையும் நிவிர்த்திக்கிறான். அப்பொழுது அவ்விக்கின நீக்கத்தால் அவனுக்கு ஓர்வித ஆனந்தம் பிராப்தமாகிறது. (மிக்க கஷ்டப்பட்டுச் சுமை தூக்கிச்செல்பவன் அச்சுமையை இறக்கினவுடன் ஓர்வித ஆனந்தத்தை யடைவதுபோல.) ஆனால், அது நிர்விகற்ப சமாதியாலுண்டான பிரஹ்மானந்தாகார விருத்தியன்று. இவ்வுண்மையை ஊகித்தறியாது, துக்கநீக்கத்தா

லுண்டாகும் அவ்வானந்தத்தையே அவன் அனுபவித்துக் கொண்டிருந்து விடுவானாயின் அவனுக்குப் பிரஹ்மானந்தப் பிராப்தி யுண்டாவதல்லை. இவ்வாறு நிர்விகற்ப சமாதிக் குத் தடையாதற்பற்றி துக்க நிவிர்த்தியாலுண்டாகும் ஆனந் தமும் தடையெனப்படுகிறது. இதுவே ரஸாஸ்வாத மென் னும் விக்கினமாம்.

ஆதலால் அன்புள்ள அனகனே! அப்பியாசியானவன் இந்த நான்கு விக்கினங்களு முண்டாகாதபடி நிவிர்த்தித்து நிர்விகற்ப சமாதியை யடைதல்வேண்டும்.

## சமாதி விக்கின நிவிர்த்தி.

விவேகா:—சுவாமி! இவ்விக்கினங்களை நிவிர்த்திப்ப தெப் படி?

குரு:—(1)லய நிவிர்த்தி:—எப்பொழுது பிரஹ்மாகார விருத் தியானது சோம்பல் நித்திரை முதலிய காரணங்களால் அந்தக்கரணத்தில் லயமாகின்றதோ அப்பொழுதே நிதானமாய் அவற்றை யகற்றிப் பிரஹ்மாகார விருத் தியை எழுப்புதல் வேண்டும். அவ்வாறு பிரஹ்மாகார விருத்தியை யெழுப்புவதனால் லயம் நிவிர்த்தியாய் விடும். (இவ்வாறு எழுப்புவதைச் சித்த சம்போதனம் என்பர் கௌடபாதாசாரியர்.)

(2) விட்சேப நிவிர்த்தி:—விருத்தி பகிர்முகப்பட்டு விஷயங்களிற் செல்லுமாயின், உடனே அவ்விஷயங்களி லுள்ள தோஷங்களை யறிதல்வேண்டும். அப்பொழுது விருத்தி அவற்றினிடம் செல்லாது உள் நோக்கும் (அந்தர் முகமாகும்). அக்கால் அவ்விருத்தியைச் சொரூபத்தில் நிறுத்தவேண்டும். அதனால் விட்சேபம் நிவிர்த்தியாகும்.

(3) கஷாய நிவிர்த்தி:—ராகத்துவேஷங்களின் சம்ஸ் காரமாகிய கஷாயமானது அந்தக்கரண முள்ளளவரையில் நீங்

காது. சமாதி காலத்திலும் அந்தக்காணத்தில் இருந்து கொண்டே யிருக்கும். ஆனால் வெளிப்படாமல் அமுழ்ந்திக் கிடக்கும். அது சமாதிக்குத் தடையாகாது. அதன் வெளிப் பாடே சமாதிக்குத் தடையாம். ஆகையால் அவ்வாறு வெளிப்படுங் காலத்தில் அப்பியாசியானவன் அதனு லுண் டாகும் தோஷங்களை யறிந்தால் அது அடங்கிவிடும். அத னால் கஷாய நிவிர்த்தி யுண்டாம்.

(4) ரஸாஸ்வாத நிவிர்த்தி:—சமாதியில் விருத்தியானது விட்சேப நிவிர்த்தியா லுண்டான ஆனந்தாகாரமா யிருத் தலை யூகத்தாலறிந்து, இங்கு 'நான் ஆனந்தத்தை யனுபவிக் கிறேன்' என்னும் உணர்ச்சி யிருத்தலின் திரிபுடி யிருக்கின் றது. ஆதலால் இது என் நிஜநிலை யன்றும் எனத் தெளிந்து உடனே சொரூப சிந்தனையால் பிரஹ்மாகார விருத்தியை யெழுப்பி சொரூபத்தில் திரிபுடியற்றிருத்தல் வேண்டும். அதனால் ரஸாஸ்வாதம் நிவிர்த்தியாம்.

## விவகார வேளையெல்லாம் சமாதி.

**விவேகா:**—சுவாமி! சமாதிவாயிலாக ஆத்ம சாட்சாத்காரத் தைப் பெற்றவர்களது மனம் சமாதி நீங்கியகாலத் தெவ்வா றிருக்கும்?

**குரு:**—"கண்ணிற் காண்பதுன் காட்சி கையாற் றொழில்
பண்ணல் பூசை பகர்வது மந்திரம்
மண்ணொ டைந்தும் வழங்குயிர் யாவையும்
அண்ண லேயுன் னருள்வடி வாகுமே."

எனத் தாயுமானசுவாமிகள் மொழிந்தருளியவாறு, அவர் கள் 'சர்வம் பிரஹ்ம' மென்னும் பாவனையுடையோ ராகலின் சமாதியின்றிய காலத்தும் அவர் தம் மனமானது பலவாறு விகாரப் படுதலின்றி யிருப்பதாகும். ஆகலின் அதுவும் சமாதி நிலையேயாகும்.

## மனமே பந்த மோக்ஷ காரணம்.

**விவேகா:**—தன் நிஜ நிலையாகிய ஆத்ம சாட்சாத் காரத்தை யெய்துதலாகிய சமாதி கைகூடுவதற்கு முக்கிய சாதன மெது?

**குரு:**—'மனிதர்களுக்கு பந்த மோட்சங்களுக்குக் காரணமா யிருப்பது மனமேயாம். மனம் விஷயாதிகளி லீடுபடு வதே பந்தமாம்; பந்தத்தி லகப்படாம லிருப்பதே மோட்சமாம்' என்னும் உபநிஷத் வாக்கியத்தின்படி, சற்சீடனே! பந்தத்திற்கும் அங்ஙனமே மோட்சத்திற் கும் மனமே காரணமாம். ஆகையால் மனோ நாசமே சமாதி கைகூடுவதற்குச் சிறந்த சாதனமாமென் றறிக.

## இருவகை மனம்.

**விவேகா:**—பந்தத்திற்குக் காரணமாயுள்ள மனமே மோட் சத்திற்கும் காரணமாவ தெங்ஙனம்?

**குரு:**—மனம் அசுத்தமனம் சுத்தமனம் என இருவகைப் படும். இவற்றுள்,

(1) அசுத்தமனம்:—காமக்குரோதாதி சங்கற்பங்களோடு கூடியது. இதுவே பந்தத்திற்குக் காரணமானது.

(2) சுத்தமனம்:—காமக் குரோதாதி சங்கற்பங்களற்றது. இதுவே மோட்சத்திற்குக் காரணமானது.

## மனத்தின் லக்ஷணம்.

**விவேகா:**—சுவாமி! மனத்தின் தன்மையை அறிய விரும்பு கின்றேன்.

**குரு:**—'மனம்' என்பதற்கு 'நினைப்பது' என்பது பொரு ளாம். எப்பொழு தெப்பொழுது சங்கற்பம் (நினைவு) எழுகின்றதோ அப்பொழுதப்பொழுது மனமிருக்கிற தென்றறிதல் வேண்டும். ஆகவே, மனம் சங்கற்ப

வடிவாயுள்ளது. அது தனக்கிஷ்டமான விஷயங்களைச் சங்கற்பித்துக் கொண்டு அவ்விஷயங்களினிடத்தே பிரவிர்த்தித்துக் கொண்டேயிருக்கும். ஒரு கணமேனும் ஓரிடத்தில் நிலைத்திராமல் காற்றாடிபோ லலைந்துகொண் டிருப்பதைத் தன்னியற்கையாகக் கொண்டுள்ளது.

"மாயையென் றொருத்திதன்பால் மனமெனும் மைந்தன்தோன்றி
தூயநல் லறிவன் றன்னைத் தோற்றமின் றாக்கி வைத்தான்
தாயொடு தந்தைமக்கள் தாரமென்றிவர் பால்வைத்த
நேயமு மவன்றனாலே நிகழ்ந்ததோர் நினைவு கண்டாய்."

என்றவாறு, ஆத்ம சொரூபத்தை யறிய வொட்டாமற் செய்வதும் மனமே. பிரபஞ்ச கற்பனைக்குக் காரணமாயுள்ளதும் மனமே. சகல சம்சாரத்திற்குக் காரணமாயிருப்பதும் மனமே. ராகத்துவேஷ காமக்குரோதாதி விருத்திகளாயிருப்பதும் மனமே. மேலும்,

## மனமே மாயை.

"மனமாயை மாயை மாயை மயக்கம்
மனமாயை யன்றி மற்றொன் றுமில்லை
பிணையாய வேண்டா பிதற்றவும் வேண்டா
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே."

என்றபடி, மனமே மாயை; மாயையே மனம். ஆகவே, சங்கற்பமே வடிவமாகவுள்ள மனத்தை யொழிக்கவே ஒவ்வொருவரும் முயலல்வேண்டும். ஆனால்,

## மனத்தை யடக்கலே மாபெருங்காரியம்.

அது எளிதான காரியமன்று. வெகு கஷ்ட சாத்தியமான காரியமாம். எல்லாக் காரியங்களினும் கடினமானது மனத்தை யடக்குதலே யாம். மனத்தை யடக்கினவனே மகாவீரன்; அவனே தீரன்; அவனே சூரன்; அவனே சுய

ராஜ்ய சித்திபெற்றவன்; அவனே உலகிற் பெரியோன் இது நோக்கியே,

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்."

என்றார் பொய்யா மொழியாரும்.

## மனம் அசுத்தமான தேன்?

**விவேகா:**—சுவாமி! மோட்சத்திற்குக் காரணமாயுள்ளதாகிய இம்மனமானது இவ்வாறு வெறுக்கப்படத் தக்கதாய் அசுத்தமாய் பந்தத்திற்குக் காரணமா யிருப்ப தெத ஞல்?

**குரு:**—"பொன்போல விலங்குமனஞ் சஞ்சலத்தாற் குரங்காம்
புத்திவிசா ரித்தறியும் பொலிவதனு லரவாம்
தன்போல விலையெனலா லகங்கார மதமா
தனைநிகராஞ் சித்தமொரு தன்மையினுல் நாயாம்
மின்போலு மலையுமனஞ் சலியாமல் நிறுத்தி
விசாரிக்கும் புத்தியினை மெய்ப்பொருட்பால் விடுத்து
வன்போடு வருமகங்கா ரத்தினையுங் கடிந்தால்
வைத்தவிடத் திருந்துசித்த மகத்துவமுந் தருமே."

என்று உபநிடதங் கூறுவதை யுய்த்துணரின் மோட்சத்திற் குக் காரணமான மனம் எதனுல் பந்தத்திற்குக் காரணமா யிற்றென்பது இனிது விளங்கும்.

**விவேகா:**—இச்செய்யுளின் பொருளை விளங்கக் கூறல்வேண் டும்.

**குரு:**—மன (அந்தக்கரண) மானது சூக்கும பூதங்களின் சத்துவகுண சமஷ்டியினின் றுண்டானதென்று முன் னரே கூறியிருக்கிறேன். ஆதலால் மனம் இயல்பாகவே சத்துவகுண முடையதாம். அச்சத்துவகுண வெழுச் சியினுல் வைராக்கிய மயமான (நிராசை வடிவமான)

*சாந்த விருத்தி யுடையதாம். (வைராக்கியம் பொறுமை முதலியன சாந்த விருத்தியாம்.)*

*இத்தகைய சத்துவகுண மனத்தினிடத்து காமம் குரோதம் முதலிய கோர விருத்தியாகிய இராசத குணமும், மயக்கம் கலக்கம் முதலிய மூடவிருத்தியாகிய தாமத குணமும் வந்து கலந்துள்ளன. அக்கலப்பினுல் மனமானது அசுத்த மடைந்தது. எங்ஙனமெனின்;*

*இராசதகுண வெழுச்சியால் சஞ்சலமடைந்து குரங்கு போல் பலவித வியாபாரங்களைச் செய்வதாயும், இது இன்ன விதமானது இது இன்ன விதமானது என்று விஷயங்களை விசாரித்தறிந்து பாம்புபோல் நாம ரூபங்களை யறிவதாயும் (இது புத்தி), மேலும் அவ்விராசதகுண மேலீட்டால் தான் விரும்பிய விஷயங்களை விடாது பிடித்து, தான் விரும்பிய வினை விடாமல் தொடர்ந்து செல்லும் நாய் போல் அவ்விஷயங்களைத் தொடர்ந்து செல்வதாயும் (இது சித்தம்), தமோகுண வெழுச்சியால் மதங்கொண்ட யானைபோல் தனக்குச் சமமானவர் ஒருவருமிலர் என்னும் அகங்காரத்தை யுடையதாயும் (இது அகங்காரம்), அதனுல் மமகாரத்தையுடையதாயுமாயிற்று. இவ்வாற்ருல் பரிசுத்தத் தன்மையை யிழந்து அபரிசுத்தத் தன்மையை எய்தலாயிற்று என்றறிக.*

விவேகா :— *கோரமூட விருத்தி வடிவ இராசத தாமத குணங்களை அகற்ற லெங்ஙனம்?*

குரு:—*அதிகாரி புருஷனுனவன் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் இவற்றின் தன்மைகளை யறிந்து, சற்குருவின் அனுக்கிரகத்தை யடைந்து, சொரூப தியானத்தால் சலன மடையாமல் நிறுத்தி, விஷய விசாரஞ் செய்யும் தன்மையினதாகிய புத்தியை மெய்ப்பொருளாகிய ஆத்மாவினிடத்துச் செல்லுமாறு செய்து,*

'யான் அசங்கன், யான் நிர்க்குணன், யான் அத்து விதன்' என்பன போன்ற பாவனையால் தாமத விருத்தியாகிய அகங்காரத்தை யொழித்துவிடல் வேண்டும். இது விரைவில் ஆகக்கூடியதன்று. மனம் பகிர் முகத்தில் எவ்வளவு காலம் சென்று பழக்கமடைந்திருக்கின்றதோ அவ்வளவு காலப்பழக்கம் இவ்வந்தர்முக நாட்டத்திற்கும் வேண்டும். நீண்டகாலப் பழக்கத்தால் மனம் செயற்கையாகிய இராசத தாமதகுண விருத்திகளை விட்டு தனதியற்கை நிலையாகிய சாந்தாகாரத்தையடையும். அதனால் களங்கமற்ற ஆகாயம் போல நிர்மலமாம். அப்பொழுது, எப்படி அப்பில் (நீரில்) போடப்பட்ட உப்பானது அதனோடு இரண்டறக் கலந்துவிடுகிறதோ அப்படி பிரஹ்மத்தினிடத்தில் வேற்றுமையின்றி நிலைத்து நிற்கும். அந்நிலையே நிர்விகற்ப சமாதி நிலையாம். ஆகவே, நிர்விகற்ப சமாதிக்கு மனோநிக்கிரகமே சிறந்த உபாயமாம். இதனை,

"சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே." எனவும்,

"நின்னை யறப்பெறு கிற்கிலே னன்னெஞ்சே
பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்—நின்னை
அறப்பெறு கிற்பேனேல் பெற்றேன் மற்றீண்டு
துறக்கந் திறப்போர் தாள்." எனவும்,

கூறப்பட்டுள்ள ஆன்றோ ரமுத மொழியானு மறிக.

## மனத்தின் இருவகை நாசம்.

**விவேகா:**—மனோநிக்கிரகம் என்றால் மனத்தின் நீக்கம் அல்லது மனோ நாசம் என்பது பொருளாம். மனத்தை நாசஞ் செய்தல் எங்ஙனம் கூடும்?

குரு:—மனோ நாசம் (1) உருவ நாசம் (2) அருவ நாசம் என இருவகையாம்.

(1) உருவ நாசம்:—மனம் தன் இயற்கை வடிவான சத்துவ மாத்திரமாய்ச் சேடித்து நிற்க, இராசத தாமத குணங்களே தனதுருவமாகலின் அவற்றை நசிக்கச்செய் தலே உருவ நாசமாம். இஃது சீவன் முக்தரிடத்துண்டா வதாம்.

(2) அருவநாசம்:—சூக்கும தேகம் உள்ளவரையிலு மிருந்து அது நாசமாகுங் காலத்து, சத்துவ குணமாகச் சேடித்து நின்ற மனமும் நசிப்பதாம். இஃது சீவன் முக்தரிடத் துண்டாகாமல் விதேக முக்தரிடத்துண்டாவ தாம். ஆகலின்,

ஈண்டு, உருவ நாசமே மனோ நாசம் எனப்படுவதாம். இதுவே 'மனதற்ற பரிசுத்த நிலையை யருள்வாய்' என்றபடி பரிசுத்த நிலையாம்.

## ஞான சப்த பூமிகள்.

விவேகா:—சமாதி பலவகையெனத் தாங்கள் கூறியதனுல் அவ்வந்நிலைகளுக் கேற்றவாறு ஞானிகளும் பலவகை யாக விருத்தல்வேண்டும். நான் எண்ணுவது சரியா யின் இதனை விளக்கும்படி பிரார்த்திக்கின்றேன்.

குரு:—ஞான பூமிகளின் பேதத்தை யறிந்தால் ஞானிகளின் பேதத்தையு மறியலாம்.

விவேகா:—ஞான பூமிகளெத்தனை? அவை எவை?

குரு:—ஞான பூமிகள் ஏழாம். அவை சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தா பாவனை, துரியம் என்பனவாம். அவற்றுள்,

(1) சுபேச்சை:—ஒருவன் அஞ்ஞான வசத்தனாய் உலக சுகங்களையே பெரிதெனக் கருதியிருந்து, பின்பொரு

காலத்தில் 'நான் ஏன் இவ்வாறு காலங்கழித்து விட்டேன்? பொய்யை மெய்யெனக் கருதினேன்! ஐயோ! இனியேனும் நன்மார்க்கத்தை யடையமுயல்வேன்' எனக் கருதுவது சுபேச்சையாம். (சுப இச்சை=நன்மையை விரும்பல்.)

(2) விசாரணை:—அவன் அதன்பின்னர் சாதுசங்கத்தைச் சேர்ந்தும் சதாசாரியனை யடுத்தும் அவர்கள் கூறும் வேதாந்த வாக்கியங்களைக் கேட்டு அவற்றின் பொருளை யாராய்தல் விசாரணையாம்.

(3) தனுமானசி :—சுபேச்சையையும் விசாரணையையு முடைய அவன் மனமானது விஷயங்களினிடத்துக் கொண்டுள்ள பற்றாகிய தூலத்தன்மை நீக்கி சூக்குமத் தன்மை யுடையதாம். அவ்வாறு விஷயப்பற்று நீங்குவதே தனுமானசியாம். (தனுமானசி=மனத்தின் சூக்குமத் தன்மை.) இந்த மனமே சமாதி செய்தற்குரிய மனமாம்.

(4) சத்துவாபத்தி:—மேற்கண்ட மூன்றினது அப்பியாசத்தினால் 'இப்பிரபஞ்சமானது சொப்பனப் பிரபஞ்சம் போல மித்தையாம்; ஆத்ம வஸ்து வொன்றே சத்தியமாம்' என்று உள்ளவா றுணர்ந்து பிரபஞ்சத் தோற்றத்தை விட்டு ஆத்மாவையே சிந்திக்கின்றான். இதுவே சத்துவாபத்தியாம்.(சத்துவ ஆபத்தி=ஆத்மாவின் சத்துத் தன்மையை யுணர்தல்.)

(5) அசம்சத்தி:—பிரபஞ்சத் தோற்றமின்றிச் சுழுத்தியை யடைந்தவன் போன்று சிவசொரூபமாக நிலைத்திருத்தலாம். (அசம்சத்தி=அசங்கத்தன்மை.)

(6) பதார்த்தா பாவனை:—சுபேச்சை முதலிய ஐந்தின் அப்பியாச முதிர்ச்சியால் லோக வாசனை தேக வாசனை

முதலிய சகல வாசனைகளும் நீங்கப்பெற்றவனுய் அழுந்திய உறக்கத்தில் (காட சுழுத்தியில்) இருப்போனைப் போன்று ஆத்மானந்தத்தின்கண் அடங்கி யிருத்தலாம். (பதார்த்த அபாவனை=சகல பதார்த்தங்களின் பாவனை வடிவ சங்கற்பமில்லாமை.)

(7) துரியம்:—அதன் பின்னர் அவன் 'தேகம் நான் அன்று' என்னும் எவ்வித விவகாரமும் சிறிது மின்றி இரண்டாவதற்ற அத்வைத நிலையாகிய தன் நிஜநிலையில் நிலைத்து நிற்றலாம்.

மேற்கூறப்பட்ட ஏழு பூமிகளுள் முதல் மூன்று பூமியும் தத்துவ ஞானத்திற்குச் சாதன மானவையாம். இவற்றில் வசிப்பவன் முமுட்சு வெனப்படுவான். நான்காம் பூமி தத்துவஞான வடிவாயிருத்தலால் சீவன் முக்தி விதேக முக்திகளுக்குச் சாதனமானதாம். இதில் வசிப்பவன் பிரமவித்து எனப்படுவான். ஏனைய மூன்று பூமிகளும் சீவன் முக்தி விலட்சணனந்தத்திற்கு (நிராவரணமாய் பரிபூரணமாய் விருத்தியோடு கூடியதாய் தோன்றும் ஆனந்தம்) சாதனமானவையாம். இவற்றில் ஐந்தாவது பூமியிலுள்ளவன் பிரமவித்வரன் என்றும், ஆறும் பூமியிலுள்ளவன் பிரமவித்வரியான் என்றும், ஏழாம் பூமியிலுள்ளவன் பிரமவித்வரிஷ்டன் எனவும் அழைக்கப்படுவர்.

## இருவகைச் சுழுத்தி.

விவேகா:—சுழுத்தி எத்தனை வகை?

குரு:—க்ஷீண (குறைந்த) சுழுத்தி, காடசுழுத்தி என சுழுத்தி இருவகையாம்.

(1) எதினின்றும் விழிப்பித்தலின்றித் தானே விழிக்கிருனே அது க்ஷீண சுழுத்தியாம்.

(2) எதினின்றும் விழிப்பித்தாலன்றித் தானே விழிக்கிறதில்லையோ அது காட சுழுத்தியாம்.

ஞான பூமிகளின் பஞ்சாவத்தை.

விவேகா:—சுவாமி! நான்காம் பூமி சொப்பனவத்தையைப் போன்றதெனவும் ஐந்தாம் பூமி சுழுத்தி யவத்தையைப் போன்றதெனவும், ஆறாம் பூமி காடசுழுத்தியைப் போன்றதெனவும் தாங்கள் கூறியதனால் இவ்வேழு பூமிகளும் அவத்தைகளாகவும் கூறப்படுகின்றனவென்று கருதுகின்றேன். அது சரிதானோ?

குரு:— விவேகானந்தா; நீ மிக்க சூக்கும புத்தியுடையவன். வேதாந்தப் பயிற்சி செய்வோரி னிலக்கணம் இதுவேயாம். நீ கூறிய துண்மையே. அந்த ஞான பூமிகளேழும் ஐந்தவத்தைகளாகவும் வகுத்துக் கூறப்படும்.

விவேகா:—அவற்றை விளக்கி யருளுமாறு பிரார்த்திக்கின்றேன்.

குரு:— ஞானபூமிகளேழனுள் சுபேச்சை விசாரணை தனுமானசி என்னும் இம் மூன்று பூமிகளையு மடைந்தோர்க்கு இப் பிரபஞ்சம் தோற்றிக்கொண் டிருத்தலால் இம் மூன்று பூமிகளும் சாக்கிராவத்தையாம்.

நான்காம் பூமியிலுள்ளோர்க்கு இப் பிரபஞ்சம் சொப்பனப் பிரபஞ்சம் போன்றிருக்குந் தன்மையால் இந்நாலாம் பூமியாகிய சத்துவாபத்தி சொப்பனவத்தையாம்.

நாலாம்பூமி நிலையும் மெல்லமெல்ல நழுவுங்காற் றோன்றும் ஐந்தாம் பூமியாகிய அசம்சத்தி சுழுத்தி யவத்தையாம்.

இவ்வைந்தாம் பூமிக்குப் பின்னர் தனது சுவானுபவ நிலை தோன்றுவதாகிய ஆறாம்பூமி எனப்படும் பதார்த்தாபாவனை துரியமாம்.

அதற்கப்பால் சகல கற்பனைகளு மிறந்து தன்மயமாக விளங்கும் நிலையாகிய ஏழாம்பூமி யெனப்படும் துரியமே துரியாதீதமாம்.

## துரியமே துரியாதீதம்.

விவேகா:—குருநாதா! ஏழாவதாகிய துரியபூமியைத் துரியாதீதமெனக் கூறல் எவ்வாறு பொருந்தும்?

குரு:— ஞானமைந்தனே! ஐந்தாம் பூமியை க்ஷீண சுழுத்தி யென்றும் ஆறும் பூமியைக் காடசுழுத்தி யென்றும் பிரித்துக்கொண்டால் ஏழாம்பூமி துரியமாகிறது. இவற்றுள் காட சுழுத்தியே துரியமென்றும் துரியமே துரியாதீத மென்றும் கூறப்பட்டன வென்றுணர்க.

விவேகா:—ஒருவன் முதல் இரண்டு மூன்று பூமிகளையடைந்து முத்திக்கு நேர் சாதனமாயுள்ள தத்துவஞான வடிவமாகிய நான்காம் பூமியை யடையு முன்னர் மரித்து விடுவானாயின் அவனுக்குண்டாம் பயன் யாது?

குரு:—பிராந்தி வடிவமான பந்தந்தரும் பிறவிகளையடையாமல் மேலான பிறவிகளையே யடைந்து, கிரமமாக மற்றைப் பூமிகளையு மடைந்து, ஈற்றில் ஐக்கிய முத்தியை யடைவான். முதற்பூமியை யடைவதுதான் துர்லபம். அதனை யடைந்து விடுவானாயின் அவன் முத்தியை யடைந்தவனே யாவன். ஆகையால் பிரதமத்தில் ஒவ்வொருவரும் எப்பாடுபட்டேனும் முதற்பூமியையே தங்கள் பெருமுயற்சியால் அடையவேண்டும்.

## நால்வகை ஜீவன் முக்தரின்பேதம்.

விவேகா:—என தஞ்ஞானமாகிய மதயானையை யழிக்க வந்த ஞானகேசரியே! ஜீவன்முக்தர் நால்வகைப் படுவர் எனக்கூறினீர்களே? அவர்களின் பேதத்தை யறிவித்தல் வேண்டும்.

குரு:—நால்வகை ஜீவன்முக்தரில்,

(1) பிரமவித்து பெரும்பாலும் இல்லறத்தானு யிருப்பன். ஞானங்கைகூடப் பெற்றவர்க்கே யன்றி ஏனையோர்க்கு ஞானத்திற்குப் பரம்பரையாகச் சாதானமாயுள்ள கர்மமும் உபாசனையும் அவசியமா யிருத்தலின், ஞானநிலையடைந்துள்ள தனக்கு அவை அவசிய மில்லாமலிருப்பினும், தான்செய்யா தொழியின் தன்னைப் பார்த்துப் பிறரும் செய்யா தொழிவரே அதனுல் உபயபிரஷ்டராவரே, என்னும் கருணைமேலீட்டால் உலகினர்க்காக வேனும் கருமோபாசனைகளைச் சிறிதும் பற்றின்றிச் செய்வான். அவன் செய்யும் காரியமனைத்தும் உலோகோபகாரமாகவேயிருக்கும். குடும்ப போஷணையினிமித்தம் பலதொழில்களைச்செய்து நியாயவழியில் பொருளீட்டுவன். அஞ்ஞானிகள்போல பிறர்க்குக் காணப்படுவன். தாமரையிலைத் தண்ணீர்போன்றது அவன் உலகவாழ்க்கை. சுருங்கக் கூறுமிடத்து

> "எத்தவத்தைச் செய்தாலு மேதவத்தை பட்டாலும்
> முத்தர் மனமிருக்கும் மோனத்தே—வித்தகமாய்க்
> காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
> தாதிமனம் நீர்க்குடத்தே தான்."

என்றபடி, தன்னிலையை மறவாம லிருப்பன்.

(2) **பிரமவித்வரன்** எப்பொழுதும் ஆத்மசாட்சாத்காரத்தை யடைந்து பிரஹ்மானந்தப் பெருங்கடலில் திளைக்குமாறு சமாதியுற்றிருப்பன். ஆயினும் பசிவந்தகாலத்தில் மாத்திரம் சமாதிவிட்டு உணவின்பொருட்டு வெளிச்சென்று யாசித்துண்டு பசிதீர்ந்தபின் மீண்டும் சமாதியிலிருப்பன்.

(3) **பிரமவித்வரியான்** பசிவந்த காலத்தும் சமாதிவிட்டுச் செல்லுதலின்றி பிறர் வற்புறுத்தியூட்ட அக்காலத்து மாத்திரம் சமாதிவிட்டு மற்றக்காலங்களில் சமாதிநிலையிலிருப்பன்.

(4) பிரமவித்வரிஷ்டன் இராக்காலத்தில் நன்ருகத் தூங்கிக்கொண் டிருக்கும் பிள்ளையைத் தாயானவள் எழுப்பி அவ்வுறக்கத்தில் வலிந்து அன்னமுண்பிக்க, உண்ட அக் குழந்தை அதனையறியாது காலையிலெழுந்து 'நான் இராத் திரி சாப்பிடவே யில்லை' என்று சொல்லுதல்போல, பிறர் வலிந்தூட்டவும் அதையுமறியாது இருப்பவனுவன்.

இவையே அந்நால்வர்க்கு முள்ள பேதமாம்.

விவேகா:—அந்நால்வரும் சீவன்முக்தரே யன்ருே?

குரு:—ஆம்.

விவேகா:—அந்நால்வர்க்கும் முக்தி சமமாகவே யிருப்பதா யின் வரன் வரியான் வரிட்டன் என்னும் மூவரும் பிர மவித்தைப் போலவே இருக்கலாமே. அவ்வளவு கஷ் டப்பட்டுச் சமாதி செய்வதேன்?

குரு:—பிரமவித்தானவன் உலக வியவகாரங்களில் ஈடுபட் டிருத்தலின் அவற்ருலுண்டாம் இன்ப துன்பங்களை யனுபவிப்பான். மேலும், சமாதி நிஷ்டானுபூதியினு லுண்டாம் ஆனந்தத்தையுமிழந்தவனுகிருன். ஏனைய மூவரும் வியவகார கஷ்டங்கள் சிறிதுமின்றி சதா பிரஹ்மானந்த முற்றிருப்பர். இதுவே அம்மூவர்க்கும் பலமாம்.

## மனுேநிக்கிரக மார்க்கம்.

விவேகா:—குருசுவாமியே! விஷயங்களிலோடி யுழலும் மனத்தை அங்ஙனம் செல்லாவாறு தடுத்து உள்நோக் குறச் செய்தற் கோருபாயம் கூறியருளவேண்டும்.

குரு:—மனமானது எப்பொழுதும் ஒன்றினைப் பற்றிக் கொண்டே யிருக்குந் தன்மையுடையதாம். அத்தகைய மனம் ஓர் விஷயத்திற் செல்லும்போது உடனே இம் மனம் ஏன் அவ்விஷயத்தினிடத்துச் சென்றது என்

றூராய்தல் வேண்டும். அங்ஙனம் ஆராயின் அது அவ்விஷயத்தி னிடத்துக் கொண்டுள்ள ஆசையே அதற்குக் காரணம் என்பது விளங்கும். எவ்வெவ்விஷயங்களினிடத்து மனம் ஆசை கொண்டுள்ளதோ அவ்வவ் விஷயங்களி னிடத்தெல்லாம் அது ஓடி யலைந்துகொண்டே யிருக்கும். இது அதனியல்பு. ஆகவே,

வேரை யறுத்துவிட்டால் செடி தானுகவே உலர்ந்து போவதுபோல், ஆசையை யறுத்துவிட்டால் மனம் அக்கணமே ஓடாது நிலைத்து நின்றுவிடும். ஆசை யில்லாவிடத்து மனம் செல்லுவதில்லை என்பதை நாம் அநுபவத்திற் காண்கிறோம். ஆகையால், மனோ வெழுச்சிக்குக் காரணம் ஆசையே யென்பதும், மனோ நிக்கிரகத்திற்குக் காரணம் ஆசையின்மையே யென்பதும் புலனுகின்றது. எனவே,

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து."

என்றபடி, ஆசையே பிறவிக்கும் அதனாலுண்டாம் சகல துன்பங்களுக்கும் காரணமாகின்றது.

ஆசையற்றுல் மனம் அசை வற்று நிற்கும். அந்நிலையே அதன் இயற்கை நிலையாகிய சாந்த நிலையாம். மனோ சாந்தியை யடைந்தவர்க்கு ஆத்ம சாட்சாத்காரம் எளிதில் எய்துவதாம். அவ் வாத்ம சாட்சாதகாரநிலையே நிர்விகற்ப சமாதி நிலையாம். அதுவே முக்தி நிலையாம். ஆகவே, முக்தியை விரும்புவோர் முதலில் அவா வறுத்தல் வேண்டும். இது நோக்கியே,

"அற்றது பற்றெனில் உற்றது வீடு."

என்றனர் ஓர் பெரியார். தாயுமான சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய ஓர் பாடலைக் கூறுகிறேன். அதனுல் அவாவறுத்தலின் சிறப்பு நன்கு விளங்கும். அது இது.

"ஆசை யெனும் பெருங்காற்று டிலவம்பஞ் செனவுமன
தலையுங் காலம்
மோசம்வரு மிதனுலே கற்றதுங்கேட் டதுந்தூர்ந்து
முத்திக் கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனுயிற் கொடுமைபற்றி
நிற்ப ரந்தோ
தேசபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசை யின்றேற்
றெய்வ முண்டோ."

எனவே, அன்பா! மனமடங்குதற்கு அவாவறுத்தலே சிறந்த உபாயமாமென்பது பெறப்படுதல் காண்க.

## அவாவறுக்கு முபாயம்.

விவேகா:—அவாவை அறுப்பதெப்படி?

குரு:—ஒரு பொருளினிடத்து எப்பொழுது அவா உண்டாகின்றதோ அப்பொழுதே அப்பொருளின் தன்மையை ஆராய்தல் வேண்டும். அங்ஙனம் ஆராய்ந்து அப்பொருளின் நிலையாமை முதலிய குணதோஷங்களை யறிந்தால் அவாநீங்கும். அவா நீங்கின் மீண்டும் மனம் அதனிடஞ் செல்லாது. இவ்வாறே ஒவ்வொரு பொருளின் மேலுள்ள அவாவையு மகற்றல்வேண்டும். அவா நீங்கினவுடன் மனம் பகிர்முகத்திற் சென்றலையாது நிற்கும். அதனுல் மனத்தின் இராசத தாமத குணங்களொழியும். தவிர,

மனமானது ஒன்றினைப் பற்றியே நிற்கும் இயல்புடையதாகலின் மீண்டும் அது உலக விஷயங்களைச் சென்று பற்றாம லிருக்கும் பொருட்டு,

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

என்றபடி, தியான சமாதிகளைச் செய்தல்வேண்டும். அப்பொழுது சத்துவாகாரமாக எஞ்சி நின்ற மனமும், சவத்தைக் கிளறிச் சுடுவதற்காக உபயோகிக்கப்படும் தடியானது சிறுகச் சிறுக எரிந்துகொண்டே வந்து பிணஞ்சுடு தொழில் முடிந்ததும் அத் தீயில் தானே போடப்பட்டு எரிந்துபோவதுபோல, ஆன்ம சொரூபத்தில் நசித்துவிடும்.

## பிராணாயாமத்தால் மனம் நசியாது.

**விவேகா:**—பிராணாயாமமாவது யாது? மனோலயத்திற்குச் சிறந்த மார்க்கம் பிராணாயாமமேயாம் எனச் சிலர் கூறுகின்றனரே.

**குரு:**—பிராணாயாமம் என்பது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் அஷ்டாங்க யோகங்களி லொன்றும். இவ்வெட்டும் சமாதிக்கு (நிர்விகற்ப சமாதிக்கு) அங்கங்களாம். எனவே எட்டாவதாகிய சமாதி சவிகற்ப சமாதியாம்.

இவற்று ளொன்றாகிய பிராணாயாமம் என்பது பிராண வாயுவை அடக்குதலாம். அஃதும் பூரகம் கும்பகம் இரேசகம் என்னும் மூன்று அங்கங்களையுடையதாம். இவற்றுள்,

(1) பூரகம் மூக்கின் இடது துவாரத்தின் வழியாக வாயுவைப் பூரித்தல் (உள்ளுக் கிழுத்தல்.)

(2) கும்பகம் உள்ளுக்கிழுத்த வாயுவைக் கும்பித்தல். (அடக்குதல்.)

(3) இரேசகம் அடக்கிய வாயுவை நாசியின் வலது துவாரத்தின் வழியாக வெளியிடல்.

இவ்வாறு பிராணவாயுவைத் தடுத்தலே பிராணாயாமமாம்.

பிராணவாயுவைத் தடுத்தலால் மனமடங்கும். எவனெனில், மனம் சூக்கும பஞ்சபூதங்களில் வாயுவி னமிசமா யிருத்தலால் காற்றைப்போல சதா அலைந்துகொண்டே யிருப்பதாம். அக் காற்று நின்றால் மனமும் நிற்கும். ஆதலால் மன மடங்குதற்குப் பிராணாயாமமும் ஓர் உபாய மெனக் கொள்ளப்படுகின்றது. ஆனால் பிராணாயாமத்தால் மனம் சிறிது பொழுது அடங்கி யிருக்குமேயன்றி நசியாது. மூச்சை யடக்கிக்கொண் டிருக்குமளவும் அடங்கி யிருந்து பின்னர் வெளிக் கிளம்பித் தன் காரியத்தைச் செய்யத் தொடங்கிவிடும். இது கள்ளனைப் பிடித்துச் சிறைப்படுத்துவது போன்ற உபாயமாம்.

சிறையினின்று விடுபட்டதும் கள்ளன் தன் பழைய தொழிலில் பிரவிர்த்தித்து விடுவான். அவன் அத்தொழிலை யறவே விட்டு நல்லொழுக்க முடையவனாக வேண்டுமாயின், அவனைத் தன் வசப்படுத்தி திருட்டுத்தொழிலா லுண்டாந் தீமைகளை எடுத்துக்கூறி சன்மார்க்க நெறிகளைப் போதித்து பணஞ் சம்பாதித்தற் குரிய வேறு நல்ல வழியை யவனுக்குக் காட்டினால் அவன் திருந்தி நல்வழிப்படுவான். அது போல, மனம் விஷயாதிகளி லோடி உழலாதிருக்க வேண்டுமாயின், அங்ஙனம் ஓடி யுழல்வதா லுண்டாகுந் தீமைகளை அதற்குக் காட்டி, விஷயங்களின் குணதோஷங்களையு மறியச் செய்து, சாந்தமா யிருப்பதனா லுண்டாகும் நன்மையையும் போதித்து அடக்குவதுமன்றி, அவ்வாறு செல்லுதற்குக் காரணமாகிய அவாவை யறுத்துவிட்டால் உடனே 'குடலறுபட்ட நரிபோல்' அடங்கிவிடும். ஆதலால் பிராணவாயுவை அடக்குதல் வாயிலாக மனத்தை யடக்குவதாற் பயனின்றாம். அன்றியும், பிராணாயாமமானது எல்லோராலும் செய்யப்படக் கூடியதுமன்றாம். ஆகலின் முன்பு கூறியதே மனோநாசத்திற்குச் சிறந்த மார்க்கமாமென் றறிக.

## அஷ்டாங்க யோக ஞானர்த்தம்.

**விவேகா:**—ஆயின், நிர்விகற்ப சமாதிக்கு இயமாதி எட்டையும் அங்கமென்று சொல்லுவதேன்?

**குரு:**—அவற்றின் ஞானர்த்தங்களை யறிந்து அனுஷ்டிப்பதாயின் அவை அத்தியாவசியமாக வேண்டப்படுவனவேயாம்.

**விவேகா:**—அவற்றைக் கூறியருள வேண்டும்.

**குரு:**—(1) **இயமம்:**—சர்வம் பிரஹ்மம் என்னும் ஞானத்தால் இந்திரியங்களை யடக்குதல் இயமமாம்.

( ) **நியமம்:**—பிரஹ்ம ஞானத்தை நியமமாக அப்பியசிப்பதனுல் பிரஹ்ம ஸ்வரூபானுபவ முண்டாம். அந்த ஞானுப்பியாசமே நியமமாம்.

(3) **ஆசனம்:**—சகல பதார்த்தங்களையும் பிரஹ்மஸ்வரூபமாகப் பாவித்தலே ஆசனமாம். ஸ்வஸ்திகம் முதலிய மற்ற ஆசனங்கள் துன்ப வேதுவாம்.

(4) **பிராணுயாமம்:**—மனோவிருத்திகளனைத்தையும் நிரோதிப்ப (நீக்குவ) தே பிராணுயாமமாம். இதில், உலகம் மித்தை எனவறிந்து உலக சம்பந்தமான சகல வாசனைகளையும் நீக்குவது இரேசகம்; நான் பிரஹ்மம் என்னும் விருத்தி பூரகம்; அந்த விருத்தி சலியாமல் நிற்பது கும்பகம். இதுவே ஞானிகளுக்குரிய பிராணுயாமமாம். முற்கூறிய பிராணவாயுவைத் தடுக்கும் பிராணுயாமம் அஞ்ஞானிகளுக் குரியதாம்.

(5) **பிரத்தியாகாரம்:**—திரிசிய (பார்க்கப்படும்) பதார்த்தங்களி னிடத்து ஆத்ம பாவத்தை விடுத்து மனம் சித்ரூபத்தி னிடத்து (சேதனத்தில்) அழுந்த நிற்றலாம். மனம் எங்கெங்கு சென்ருலும் அங்கங்கெல்லாம்

பிரஹ்மத்தைக் காண்டலால் இதனை அப்பியசிக்க வேண்டும்.

(6) தாரணை:—மனத்தை அசையாமல் நிறுத்தலாம்.

(7) தியானம்:—நான் பிரஹ்மமா யிருக்கிறேன் என்னும் பிரஹ்மாகார விருத்தியினுல் பிரபஞ்ச விஷயங்களைக் கைக்கொள்ளாதிருத்தலே தியானமாம்.

(8) சமாதி:—விருத்தி பிரஹ்மாகாரமா யிருக்கையில் சரீரேந்திரிய வந்தக்கரணங்களின் சகல வியவகாரங்களையும் விடுதலால் அந்த விருத்தியையும் மறத்தல் சமாதியாம். இவ்வாறு அஷ்டாங்க யோகங்களின் அர்த்தங்களை யறிந்து அனுஷ்டித்தல் வேண்டுமென்றறிக.

## சிரவணுதிகளின் லட்சணம்.

விவேகா:—என்னை எனக்களித்த இறைவ! ஆத்மாநந்தன் சாதன சதுஷ்டயங்களைக் கூறியபோது சிரவணம், மனனம், நிதித்தியாசனம், தத் துவம் பதார்த்த சோதனம் என்னும் நான்கினையும் ஆசிரியர் வாயிலா யறிய வேண்டும் எனக் கூறினுன். அந் நான்கனுள் தத்துவம் பதார்த்த சோதனம் முன்னம் தங்களால் கூறப்பட்டது. எஞ்சிய சிரவணுதி மூன்றினையும் அறிவித்தல் வேண்டும்.

குரு:—சிரவண மனன நிதித்தியாசனங்களைச் செய்வதனுல் புத்தி ஏகாக்கிரமெய்தும். ஆகலின் அவை முமுட்சுக்களால் அத்தியாவசியமாக செய்யத்தக்கவையாம். அம் மூன்றனுள்,

(1) சிரவணம் (கேட்டல்):—பிரஹ்மம் இரண்டாவதற்ற அத்துவித வஸ்துவாம் எனக் கூறுவதே எல்லா வேதாந்த வாக்கியங்களின் அபிப்பிராயமா மென்பதைப் பல யுக்திகளால் நிச்சயிப்பதே சிரவணமாம்.

(2) மனனம் (சிந்தித்தல்):—வேதாந்த வாக்கியங்களால் கேட்கப்பட்ட ஆத்ம சொரூபத்தை வேதாந்த வாக்கியங்களுக்குச் சாதகமான யுக்திகளால் சிந்திப்பதே மனனமாம்.

(3) நிதித்தியாசனம் (தெளிதல்):—மகாவாக்கிய சிரவணத்தினால் ஆத்ம சொரூபம் இன்ன தன்மையின தென்றறிந்து; மனனத்தின் திடமுண்டான பிறகு, அதற்கு விஜாதீயமான தேகேந்திரியாதி சம்ஸ்காரங்களை விடுத்து, ஸஜாதீயமான ஆத்ம விருத்தியைத் தைலதாரை போல் இடைவிடாது நிலைத்திருக்கச் செய்தலே நிதித்தியாசனமாம். (ஆத்ம சொரூபத்திற்கு சரீரேந்திரியாதி விருத்திகள் விஜாதீய விருத்திகளென்றும், ஆத்மாகார விருத்திக்கு அனுகுணமான விருத்திகள் ஸஜாதீய விருத்திகளென்றும் கூறப்படும்).

## சிரவணாதிகளின் முடிவு.

**விவேகா:**—சிரவணாதிகளை எதுவரையில் செய்தல்வேண்டும்.

**குரு:**—வேதாந்த வாக்கிய ரூபமான பிரமாணங்களினிடத்து சந்தேகம் நீங்கி நிச்சய புத்தி யுண்டாகும் வரையில் சிரவணம் அவசியமாம். எது வரையில் பிரமேயமாகிய (பிரமாணத்தா லறியப்படுவது பிரமேயம்) ஆத்ம சொரூபத்தினிடத்தில் சந்தேக மிருக்கின்றதோ அதுவரையில் மனனம் அவசியமாம்.

(பிரமாணம்=பிரதி பாதகம் (அறிவிப்பது); வேதாந்த வாக்கியங்கள். பிரமேயம்=பிரதி பாத்தியம் (அறிவிக்கப்படுவது); ஆத்ம சொரூபம். பிரமாணத்தினிடத்துள்ள சந்தேகம் பிரமாணகத சம்சயம்; இது சிரவணத்தால் நீங்கும். பிரமேயத்தினிடத்துள்ள சந்தேகம் பிரமேயகத சம்சயம்;

இது மனனத்தினால் நீங்கும்). (இவை முன்னரும் கூறப் பட்டன.)

தர்க்க யுக்திகளால் பிரபஞ்சம் மித்தை என நிச்சயிப்பி னும் பிரஹ்ம அபரோக்ஷ சாக்ஷாத்கார முண்டாகும் வரை யில் இப்பிரபஞ்சம் தோற்றுநிருப்பதின்று. ஆகலின், பிரஹ் மாபரோக்ஷ சாக்ஷாத்கார முண்டாகி திருசியமாகிய இப்பிர பஞ்சம் நசிக்கும் வரையில் நிதித்தியாசனமாகிய சமாதி அவ சியமாம்.

**விவேகா:**—நிதித்தியாசனமாகிய சமாதி என்கிறீர்களே.சமா தியும் நிதித்தியாசனமும் ஒன்றோ?

**குரு:**—ஈண்டுச் 'சமாதி' என்றது சவிகற்ப சமாதியாம்; அதுவே நிதித்தியாசனமாம். இந்த நிதித்தியாசனத் தின் அதாவது சவிகற்க சமாதியின் பரிபாக நிலையே நிற்விகற்ப சமாதியாம்.

## வேத பாகங்கள்.

**விவேகா:**—சுவாமி! வேதத்தில் ஜீவப்பிரஹ்ம ஐக்கியந்தான் கூறப்பட்டிருக்கின்றதோ ? வேறொன்றும் கூறப்பட வில்லையோ?

**குரு:**—கர்மகாண்டம் உபாசனா காண்டம் ஞான காண்டம் என வேதத்தில் மூன்று பாகங்கள் உண்டு. இவற்றுள், கர்மகாண்டம் கர்மானுஷ்டான விதிகளையும், உபாசனா காண்டம் ஈசுவரனை உபாசித்துப் பக்தி செய்யும் விதத் தையும், ஞானகாண்டம் மோட்சத்திற்கு நேர் சாதன மாயுள்ள ஞான மடையும் விதத்தையும் கூறுவனவாம். கர்மமும் உபாசனையும் ஞானத்திற்கும் ஞானம் மோட் சத்திற்கும் சாதனமாயிருத்தலின் இம்மூன்றும் சோபா னக் கிரமத்தில் (படிகளைப் போல்) அமைக்கப்பட்டிருக் கின்றன.

அதமாதிகாரிக்குக் கர்மகாண்டமும் மத்திமாதிகாரிக்கு உபாசனா காண்டமும் உத்தமாதிகாரிக்கு ஞான காண்டமும் உபயோகமாம். கர்மமே மோக்ஷத்திற்கு நேர் சாதனமாயின் உபாசனா காண்டம் அவசியமின்றாம். உபாசனையே மோக்ஷத்திற்கு நேர் சாதனமாயின் ஞானகாண்டம் நிஷ்பிரயோஜனமாம். ஞானகாண்டத்திற்குப் பின்னர் பிறிதொன்று மின்மையின் அதுவே நேர் சாதனமாமென்பது விளங்குகின்றது. ஆகலின், அந்த ஞான காண்டம் வேதத்தின் அந்தத்திற் கூறப்பட்டிருக்கின்றமையின் வேதாந்தமென்று கூறப்படுகின்றது. வேதாந்த வாக்கியங்களையும் அவற்றின் பொருளையும் முன்பே கூறியிருக்கின்றேன். ஆகவே வேதத்தின் முடிவான அபிப்பிராயம் ஜீவப் பிரஹ்மைக்கியமே என்பது புலனாகின்றது.

இம்மூன்று காண்டங்களையும் சரியா பாதம் கிரியா பாதம் யோக பாதம் ஞான பாதம் என நான்காகப் பிரித்தும் கூறுவர். சரியையும் கிரியையும் கர்மகாண்டத்திலும் யோகம் உபாசனையிலும் அடங்குவனவாம்.

அதிகாரிகளின் பேதம் நோக்கி இங்ஙனம் வகுக்கப்பட்டுள்ளன வென்பதும் ஞானமே முடிவான பலன் என்பதும்

"விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே."

என்னும் தாயுமானவர் வாக்காலும் தெளிவாம்.

## வேதத்தின் அபிப்பிராயம் ஜீவப் பிரஹ்மைக்கியமே.

விவேகா:—வேதாந்த மகாவாக்கியங்கள் ஜீவப் பிரமஹ்மைக்கியத்தையே போதிக்கின்றன வென்று நிச்சயிப்பதெப்படி ?

**குரு:**— அவ்வாக்கியங்களின் பொருளே விளக்கவில்லையா? இவ்வாறு சுருதியாலும் யுக்தியாலும் அனுபவத்தாலு மறியலாம்.

**விவேகா:**—அவ் வாக்கியங்களுக்கு வேறுவிதமாகப் பொருள்கொள்ள லாகாதோ?

**குரு:**— வேறு விதமாகப் பொருள் கொள்ளின் ஜீவப் பிரஹ்மங்களைப் பேதப்படுத்தியே கூறல் வேண்டும். ஏனெனில் நாம் அபேதமாகப் பொருள் கொண்டிருக்கிறோம். அதற்கு மாருகக் கூறவேண்டுமாயின் பேதமாகவே கூறவேண்டும். அங்ஙன மாயின் பேதமாகக் கூறும் உபாசனு காண்டமிருக்கப் பின்பு ஞான காண்டத்தாற் பயன் யாது? அன்றியும், பிரத்தியட்சம் முதலிய பிரமாணங்களால் அறிய முடியாத வொன்றைக் கூறுவதே ஆகமப் பிரமாணத்திற் கழகாம். பிரத்தியட்சாதிப் பிரமாணங்களால் அறியக்கூடியதையே வேதமுங்கூறுமாயின் அது நிஷ்பிரயோஜனமாயும் அப்பிரமாணமாயும் முடியு மன்றோ? ஈசுவரன் வேறு ஜீவாகிய நாம் வேறு என்று ஒருவருங்கூருமலே அனைவரும் அறிவர். அத்தகையோர்க்குக் கடவுள் வேறு ஜீவன் வேறு என மீட்டும் மொழிவதேன்? நான் மனிதன் என்றெண்ணிக் கொண்டிருக்கும் ஒருவனைப் பார்த்து, 'நீ மனிதன்' என்று ஒருவன் விளம்புவானுயின் அவன் அறிவுள்ளவனுவானு? ஆதலால் அத்தகைய யாவரு மறிந்த விஷயத்தைக் கூறுவதற்கு ஒரு நூலேன்? அதற்கு வேதமென்னும் பெய ரேன்?

இவ்வாற்ருல் ஜீவப் பிரஹ்மைக்கியமே வேதத்தின் கருத்தாம் என்பது சிதையாத சித்தாந்தமாம். இதனை

"ஓதரிய துவிதமே அத்துவித மார்க்கத்தை
உண்டு பணும் ஞான மாகும்."

என்னும் தாயுமானவர் வாக்கும் வலியுறுத்தும்.

## சமாதி யப்பியாச முறை.

விவேகா:—ஞானபானுவே! இதுகாறும் தாங்கள் கிருபை கூர்ந்து உபதேசித்து வந்த வேதாந்த இரகசியங்களை, யுணர்ந்தேன். சுவாமி! பழக்கமின்மையால் எவ்வாறு சமாதியப்பியாசஞ் செய்வதென் றறியாது மயங்குகின்றேன். அடியேனை யாட்கொள்ளவந்த ஆதித்தியரே! அதனைக் காட்டியருளவேண்டும்.

குரு:— (விவேகானந்தனை அருகிலழைத்து வடக்கு நோக்கி யுட்காரச் செய்து) அப்பா! சமாதி அப்பியாசஞ் செய்வோர் எப்பக்க மிருப்பினும் குற்றமில்லை யாயினும் வடக்கு நோக்கியாவது கிழக்கு நோக்கியாவது அமர்வது நல்லது. சரீரம் கட்டைபோல் நிமிர்ந்திருத்தல் வேண்டும். மனம் எளிதில் அடங்குவதற்கு இஃதோருபாயமாம். இரு கரங்களையும் முழந்தாள்களின் மேல் வைத்துக்கொள்ள வேண்டும். இப்பொழுது நான் சொன்னபடி உட்கார்ந்து கொள். (உட்கார்ந்த பின்) விவேகானந்தா! ஆரம்பத்தில் மனம் அந்தர்முகப்பட்டு ஆத்மாகார விருத்தியை யடைவதற்காக

"அநித்திய பூதத் தேகநா னன்று,
இந்தியத் தாங்கநா னன்று,
நனித்தவாங் காரப் பிராணவர்க் கங்க
ளன்றுநற் புந்தியு மன்று,
தொனித்திடுந் தாம மனைசெல்வங் களுக்குத
தாரமாஞ் சாட்சிநா னென்றுந்